

திரு. சி. தேசிகவிநாயகம் பிள்ளை

உ

# மலரும் மாலையும்




திரு. சி. தேசிகவிநாயகம் பிள்ளை

அவர்களின்

## கவிதைத் தொகுதி

இரண்டாம் பதிப்பு

புதுமைப் பதிப்பகம்

தியாகராயநகர்

சென்னை

1941

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

இரண்டரை வருஷங்களுக்கு முன் இக்கவிதைத் தொகுதியின் முதற் பதிப்பு வெளிவந்தது. அவ்வெளியீடு தென்னிந்தியாவிலும், இலங்கை, சிங்கப்பூர், மலேயா முதலிய வெளிநாடுகளிலும் உள்ள தமிழருக்கு அரியதொரு விருந்தாக அமைந்தது. கவிதை நூலொன்று இவ்வளவு குறைந்த காலத்தில் மறுமுறை வெளிவருவது, தமிழ் மக்களிடை ஏற்பட்டிருக்கும் ஒரு புதிய உணர்ச்சியையும் அக்கவிதையின் உயர்ந்த பண்பையும் புலப்படுத்துகிறது.

இப்பதிப்பிலே, இவ்விரண்டரை வருஷ காலத்தில் சக்தி, கலைமகள், ஆனந்த விகடன் முதலிய பத்திரிகைகளில் ஆசிரியர் வெளியிட்டுள்ள பாடல்கள் யாவும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. புத்தர் சரித்திரம் சம்பந்தமாக இத் தொகுதியிலுள்ள 'ஆசிய ஜோதி' என்ற பகுதி தனி நூலாகவும் இரண்டு மாதங்களுக்கு முன் வெளியிடப் பட்டது. சிறுவருக்கு ஏற்ற பாடல்களைத் திரட்டி இளந் தென்றல்' என்ற பெயரோடு சிறு தனிநூலாகவும் வெளியிட்டிருக்கிறோம்.

முதற் பதிப்பைப் போலவே இதுவும் தமிழ் மக்களுக்கு அரிய கலைவிருந்தாக இருக்குமென நம்புகிறோம். ஆசிரியர் எழுதியுள்ள 'நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம்' என்ற நகைச்சுவை மிக்க நூலை விரைவில் வெளியிட எண்ணியிருக்கிறோம்.

சென்னை,<br>30-4-1941.

புதுமைப் பதிப்பகத்தார்

# முதற் பதிப்பின் முகவுரை

தமது வாழ்நாளிலேயே ஒரு சிரஞ்சீவிக் கவியாகப் போற்றப்படும் பேறு பாரதியாருக்கும் கிடைக்கவில்லை; திரு. தேசிகவிநாயகம் பிள்ளையவர்களுக்குக் கிடைத்துவிட்டது. அவர்களுடைய கவிகளையெல்லாம் ஒன்றுதிரட்டி வெளியிடப் பலர் முயன்றனர். ஆயினும் அந்தப் பாக்கியம் எங்களுக்கே வாய்த்தது.

இந்தப் பதிப்பில், பிள்ளையவர்கள் இதுவரையில் இயற்றியுள்ள கவிகளில் கிடைக்கக்கூடியவை யனைத்தும் அடங்கியிருக்கின்றன; இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளிவராதவையும் சிலவுள. தமிழன்பர்கள் இவ் வாடா மாலையின் நறுமணத்தை நுகர்ந்து இன்புறுவார்களென நம்புகிறோம்.

இக்கவிதைகளை யெல்லாம் சேர்த்துச் செப்பனிட்டுத் தந்த சென்னை சர்வகலாசாலைத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் ராவ்சாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கு நாங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். தமது கவிதைகளைத் திரட்டி வெளியிட எங்களுக்கு அனுமதி தந்த ஆசிரியரவர்களுக்கு எங்கள் வணக்கம் உரியதாகும்.

சென்னை,
30-11-1938.

புதுமைப் பதிப்பகத்தார்

# ஆசிரியர் வரலாறு

பிறப்பும் தாய் தந்தையரும்

இந்நூலாசிரியராகிய தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள சுசீந்திரத்தை யடுத்த தேரூர் என்னும் கிராமத்தில் கி. பி. 1876-ம் ஆண்டு (தாது வருஷம் ஆடி மாதம் 14-ஆம் தேதி) பிறந்தார்கள். இவர்களுடைய தந்தையார் சிவதாணுப் பிள்ளை என்பவர்; இவர் நாஞ்சில் நாட்டிலே முதன்முதலில் ஆங்கிலம் படித்தவர்களுள் ஒருவர்; உப்பளம் விசாரணை அதிகாரியாக (Superintendent) இருந்தார். தாயார் ஆதிலக்ஷ்மி யம்மாள் என்பவர்; மாணிக்கவாசகம் பிள்ளை மூத்தபிள்ளை என்றவரின் புதல்வியார்.

முன்னோர்

இந்த மூத்தபிள்ளை என்பார் ஒரு தமிழ் வித்துவானாக விளங்கியவர்; கவிபாட வல்லவர். தாமரைக்குளம் என்னும் ஊரிலுள்ள சாஸ்தாமீது 'காரியந்தாதி' என்ற பிரபந்தம் பாடியிருக்கிறார். இதன் ஏட்டுப்பிரதி இப்போது கிடைக்கவில்லை. இவருடைய புதல்வரும், ஆதிலக்ஷ்மியம்மாளின் இளைய சகோதரருமான பாலசுப்பிரமணிய பிள்ளை என்பவர் ஒரு சிறந்த பௌராணிகரா யிருந்தவர்; கம்பராமாயணத்தில் மிக்க பயிற்சியுடையவர்.

ஆதிலக்ஷ்மி யம்மாள் பிறந்த இடம் நாகைப்பட்டினம். அங்கு அவருடைய தாய்வீட்டார் பிரபல வியாபாரிகளா யிருந்தனர். அவர்கள் சொந்தக் கப்பல்வைத்து வியாபாரம் நடத்திவந்தார்கள். பிற்காலத்தில் பெருநஷ்டம் ஏற்பட்டு விட்டதனால் நாஞ்சில் நாட்டிற்குக் குடிவந்து விட்டார்கள்.

ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை திருவாங்கூர் சர்க்கார் பாடசாலைகளில் தமிழும் மலையாளமும் படித்தார்கள்.

கல்வி

பிறகு கோட்டாற்றிலுள்ள அரசாங்க ஆங்கிலக் கல்லூரியில் 'மெட்ரிகுலேஷன்' பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றார்கள். அதன்பின்னர், நாகர்கோவிலிலுள்ள கலாசாலையில் எப். ஏ. வகுப்பில் வாசித்து வரும்போது, இடையிலே படிப்பை நிறுத்திவிட்டார்கள். இதன்பின் சிலகாலம் சென்று, திருவனந்தபுரம் போதனா முறைப் பாடசாலையில் படித்துப் பரீக்ஷையில் தேர்ச்சியடைந்தார்கள். தேரூரின் பக்கத்திலுள்ள 'வாணன் திட்டு' மடத்தில் தங்கியிருந்த திருவாவடுதுறையாதீனம் ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்கத் தம்பிரானவர்களிடம் தமிழிலக்கண இலக்கியங்களை இளமையில் ஐந்தாறு வருஷகாலம் முறையாகப் பாடங்கேட்டார்கள். திருநெல்வேலி உமையொருபாகக் குருக்களிடம் சிவதீக்ஷை பெற்றுக் கொண்டார்கள்.

1901-ம் ஆண்டு (ஐப்பசி மாதத்தில்) இவர்கள் முதன் முதலில் சமஸ்தான சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்தார்கள்.

உத்தியோகம்

முதலிலே கோட்டாறு மத்தியதரப் பாடசாலையில் உதவியாசிரியராகவும், பின்னர் நாகர்கோவில் போதனாமுறைப் பாடசாலை, திருவனந்தபுரம் பெண்கள் போதனாமுறைப் பாடசாலை ஆகியவற்றில் உதவியாசிரியராகவும் இருந்தார்கள். இவர்களுடைய தமிழ் அறிவின் திறத்தையும் புலமையையும் தெரிந்து, அரசாங்கத்தார் இவர்களைப் பெண்களுக்குரிய அரசாங்க உயர்தரக் கலாசாலையில் தமிழாசிரியராகவும், கடைசியில் திருவனந்தபுரத்தில் பெண்களுக்குரிய அரசர் கல்லூரியில் தமிழாசிரியராகவும் நியமித்தார்கள். 1931-ஆம் ஆண்டு இக்கல்லூரியினின்றும் விலகி ஓய்வு பெற்றிருக்கிறார்கள்.

இவர்கள் ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ் பயின்றுவரும்போது, அப்பெரியாருடைய கட்டளையின்படி அழகம்மை ஆசிரியவிருத்தமும் சுசிந்தை மாலையும் பாடினார்கள். அப்போது இவர்களுக்கு வயது இருபது. ஆசிரியவிருத்தம் மட்டும் சிறிது காலத்துக்குப் பின் இவர்களுடைய தூரபந்து ஒருவர் பெயரால் அச்சிடப்பட்டது. சுசிந்தைமாலையின் கையெழுத்துப் பிரதி ஆசிரியரிடமிருந்து தவறிப்போய்விட்டது. (ஆசிரிய விருத்தமும், சுசிந்தைமாலையில் ஆசிரியருக்கு ஞாபகமிருந்த ஒரு செய்யுளும் இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பக்கம் 16 - 24.) இந்நூல்கள் தவிர, பல சந்தர்ப்பங்களில் தனிப்பாடல்கள் அனேகம் பாடியிருக்கிறார்கள். பிறருக்காக இவர்கள் எழுதிக் கொடுத்த பாடல்கள் பல.

கவிகள்

ஆசிரியராக இருந்தபொழுது இவர்கள் சிறுவர்களுக்காகப் பல பாடல்கள் எழுதியிருக்கிறார்கள்; அனேகம் ஆங்கிலப் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்த்து மிருக்கிறார்கள். தமிழ்நாட்டுப் பத்திரிகைகளில் பெரும்பாலனவற்றில் இவர்களுடைய பாடல்கள் வெளியாகியிருக்கின்றன. ஆண்டான் கவிராயன், ஐயம் பிள்ளை என்ற புனை பெயர்களில் பல பாடல்கள் வெளியாயின.

ஆங்கிலத்தில் பல பத்திரிகைகளுக்கு[1] ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். இவை பெரும்பாலும் புனை பெயராலேயே வெளிவந்தன. இவற்றுள், 'நாஞ்சில் நாட்டு மக்கள் வரலாறு' என்ற ஆங்கிலக் கட்டுரை[2] சிறப்பாகக் கூறத்தக்கது. 'காந்தளூர்ச்சாலை' என்பதுபற்றி அரிய ஒரு சிறு ஆராய்ச்சியுரை ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள்,

கட்டுரைகள்

[1]*The Western Star, People's Weekly, Travancore Times, Daily News.* [2]*Malabar Quarterly Review.*

'யதார்த்தவாதி' என்ற புனை பெயரால் 'நாஞ்சில் நேசன்' என்ற பத்திரிகையில் தமிழிலே பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். 'தமிழன்' என்ற பத்திரிகையில் 'நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம்' என்ற நகைச்சுவை மிக்க நூலொன்று எழுதி வெளியிட்டார்கள்.

சரித்திர சம்பந்தமான கட்டுரைகள் சென்னையிலும்[1] திருவனந்தபுரத்திலும்[2] வெளியாகும் பத்திரிகைகளில் எழுதியிருக்கிறார்கள்.

அழகிய பாண்டியபுரம் 'பெரிய முதலியார்' வீட்டில் சேமித்துவைக்கப்பெற்றுள்ள ஓலைப் பிரமாணங்களைச் சோதனை செய்து வெளியிட்டிருக்கிறார்கள்; இப்பிரமாணங்களுட் சில 600 வருஷங்களுக்கு முற்பட்டவை. சென்னைச் சருவகலாசாலையார் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி வேலை நடந்துவந்தபொழுது அதற்கு உதவி புரிந்துவந்தார்கள்.

இப்போது இவர்கள் நாகர்கோவிலையடுத்துள்ள புத்தேரியில் இருந்துகொண்டு, தமிழ் நூல்களையும் ஆங்கில நூல்களையும் படித்து அனுபவிப்பதிலும் சிலாசாசனங்கள் முதலியவற்றை ஆராய்வதிலும் பொழுதுபோக்கி வருகிறார்கள். இடையிடையே கவிகள் இயற்றித் தமிழ் மக்களை மகிழ்விக்கிறார்கள்.

பிள்ளையவர்கள் குழந்தைபோன்ற களங்கமற்ற உள்ளமும் நிறைந்த உற்சாகமும் உடையவர்கள். இவர்களுக்குப் பூர்ணமான தேகசுகத்தையும் நீண்ட ஆயுளையும் தந்து, தமிழன்னைக்கு இன்னும் பல புது அணிகள் செய்ய ஊக்கமளிக்கும்படி தமிழுலகம் இறைவனை இறைஞ்சுகின்றது.

---

[1] *The Journal of Oriental Research.*

[2] *The Kerala Society Papers.*

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| உரிமையுரை | ... | ரு |
| இரண்டாம் பதிப்பின் முகவுரை | ... | சா |
| முதற் பதிப்பின் முகவுரை | ... | எ |
| ஆசிரியர் வரலாறு | ... | அ |
| மலரும் மாலையும் | ... | 1 - 287 |
| அஞ்சலி | ... | 1 - 24 |
| 1. சரஸ்வதி துதி | ... | 3 |
| 2. இலக்குமி துதி | ... | 4 |
| 3. அஞ்சலி | ... | 5 |
| 4. கோவில் வழிபாடு | ... | 9 |
| 5. சக்திப் பாட்டு | ... | 11 |
| க. ஞான நிஷ்டை | ... | 11 |
| உ. ஞானப் பயிர் | ... | 12 |
| ங. ஞானச் சேய் | ... | 14 |
| 6. சுசிந்தைமாலை | ... | 16 |
| 7. அழகம்மை ஆசிரியவிருத்தம் | ... | 17 |
| ஆசிய ஜோதி | ... | 25 - 74 |
| 8. புத்தர் அவதாரம் | ... | 27 |
| 9. புத்தரும் ஏழைச்சிறுவனும் | ... | 42 |
| 10. கருணைக்கடல் | ... | 46 |
| 11. புத்தரும் மகனிழந்த தாயும் | ... | 63 |
| இலக்கியம் | ... | 75 - 104 |
| 12. இலக்கிய பஞ்சகம் | ... | 77 |
| 13. ஔவை | ... | 78 |

பக்கம்

14. பாரதி பாடலும் பட்டிக்காட்டானும் ... 79
15. அன்பின் வெற்றி ... 84
16. இரக்ஷகர் ... 98

இயற்கை இன்பம் ... 105 - 130

17. சரத்காலம் ... 107
18. சந்திரன் ... 109
19. கிளி ... 112
20. மலர்கள் ... 116
21. சூரியகாந்தி ... 117
22. கடல் ... 120
23. வெண்ணிலா ... 122
24. குழந்தை ... 124
25. கைத்திறன் ... 127
26. ஆறு ... 129

மழலை மொழி ... 131 - 160

27. கிளி ... 133
28. காக்காய் ... 134
29. பசு ... 135
30. காலைப் பாட்டு ... 136
31. கடிகாரம் ... 138
32. தாலாட்டு ... 140
33. கோழி ... 145
34. நாய் ... 146
35. ஆகாயவிமானம் ... 147
36. புலிக்கூடு ... 149
37. சைக்கிள் ... 151
38. பொம்மைக் கலியாணம் ... 152

பக்கம்
39. எலிக் கலியாணம் ... 153
40. முத்தந்தா ... 153
41. பசுவும் கன்றும் ... 154
42. ஊக்கமுள்ள காகம் ... 156
43. அப்பம் திருடின எலி ... 157
44. நெற்பானையும் எலியும் ... 160

உள்ளமும் உணர்வும் ... 161 - 184

45. முதல் துயரம் ... 163
46. ரோஜாவே ஏன் வாடுகிறாய்? ... 166
47. மூன்று விஷயங்கள் ... 167
48. ஒரு பறவையின் சிந்தனை ... 168
49. குதிரைகள் புலம்பல் ... 170
50. புல் ... 174
51. மலையும் அணிலும் ... 177
52. குருட்டுப் பையன் ... 178
53. செல்வமும் சிறுமையும் ... 180
க. செல்வச்சிறுமியர் களிப்பு ... 180
உ. ஏழைச்சிறுமியர் மனப்புழுக்கம் 181
54. எனது சுகதுக்கங்கள் ... 183

வையமும் வாழ்வும் ... 185 - 214

55. சுவாமி இராமதீர்த்தரின் போதனைகள் 187
56. ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள் ... 188
57. வாழ்க்கை நிலையாமை ... 189
58. நினைவும் முடிவும் ... 190
59. உத்தம ஜீவிதம் ... 190
60. அழியா உயிர்ப்பு ... 192

பக்கம்

61. உமார்காயம் பாடல்கள் ... 193
62. பாரசீகத் தனிப்பாடல்கள் ... 208

சமூகம் ... 215 - 242

63. ஒற்றுமையின் உயிர்நிலை ... 217
64. தீபாவளிப் பண்டிகை ... 220
65. பெண்களின் உரிமைகள் ... 223
66. தீண்டாதார் விண்ணப்பம் ... 226
67. தீண்டாதார் நிலைமைக்காக மேல் வகுப்பினர் வருந்தல் ... 233
68. தீண்டாமைப் பேய் ... 235
69. பிச்சைக்காரர் கும்மாளம் ... 238
70. சர்வாதிகாரி ... 240
71. வேலையில்லாத் திண்டாட்டம் ... 241

தேசீயம் ... 243 - 258

72. தேசீயக் கொடி ... 245
73. தேசக் கொடி ... 247
74. காங்கிரஸ் கப்பல் ... 251
75. கதர் விற்பனை ... 252
76. வட்டமேசை மகாநாடு ... 256

கதம்பம் ... 259 - 287

77. நாஞ்சில் நாடு ... 261
78. நாஞ்சில்நாட்டு வேளாளர் பாகவழக்கு 264
79. திருவிதாங்கோட்டு மன்னர் ... 271
க. திருமூலமன்னர் பிறந்தநாள் விழா 271
உ. இளங்கோ நவமணிமாலை ... 273
ங. சித்திரைமன்னர் முடிசூட்டு விழா 274
ச. சித்திரைமன்னர் பிறந்தநாள் விழா 276

| | | பக்கம் |
|---|---|---|
| 80. வேல்ஸ் இளவரசர் வரவேற்பு | ... | 277 |
| 81. பலவகைப் பாடல்கள் | ... | 280 |
| க. தில்லைப் பொருட்காட்சி | ... | 280 |
| உ. திருநாவுக்கரசு வித்தியாசாலை | ... | 282 |
| ௩. ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் எண்பதாம் ஆண்டு நிறைவு | ... | 283 |
| ச. உமையொருபாகக் குருக்கள் | ... | 283 |
| ரு. முத்துசாமிப் பிள்ளை | ... | 283 |
| சு. தசாவதானி ஆறுமுகம் பிள்ளை | | 284 |
| எ. ஆரல்வாய்மொழி | ... | 284 |
| அ. யார் பெரியவர் - கவிராயரா உரைகாரரா? | ... | 284 |
| கூ. முருகன் நிந்தாஸ்துதி | ... | 285 |
| க0. சிரங்கு | ... | 285 |
| கக. அனுதாபப் பாடல்கள் | ... | 286 |
| 82. வாழ்த்து | ... | 287 |
| சிறப்புப் பாயிரம் | ... | 288 |




## 1. சரஸ்வதி துதி

நாடிப் புலங்கள் உழுவார் கரமும்
　　நயவுரைகள்
தேடிக் கொழிக்குங் கவிவாணர் நாவுஞ்
　　செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும்
　　உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலேஉன் பாதம்
　　அடைக்கலமே.

## 2. இலக்குமி துதி

பொருளற் றவர்க்கிவ் வுலகில்லை யென்றிப்
புவிபுகழும்
தெருளுற்ற ஞானியப் பொய்யா மொழியில்
தெரிந்துரைத்தான்
மருளுற்ற மாந்தரும் வற்ருத செல்வம்இவ்
வையகத்துள்
அருளுற் றலாதடைட வாரோசெந் தாமரை
ஆண்டவளே. 1

சித்தந் தெளிந்திடும் செய்வினை யாவுந்
திருத்தமுறும்
நித்தம் மறிந்தெழு செல்வமும் தங்கி
நிலைபெறும்நல்
முத்தர்க் குரிய பெரும்பதம் வாய்க்கும்இம்
மூதுலகில்
பத்தர்க் கருளுந் திருமகள் பாதம்
பணிபவர்க்கே. 2

1. குறள் 247.

## 3. அஞ்சலி

என்றுமெனை அழிவிலாப் பொருளா யியற்றினை
  ஈதுனது திரு வுள்ளமே
 ஈடற்ற கலமிது கவிழ்த்திக் கவிழ்த்தியுயிர்
  ஏனோ திருத்தி வைப்பாய்
குன்றினொடு குழியெலாம் இச்சிறிய வேயின்வரு
  குழல்கொண்டு சென்று நீயுன்
 குமுதவாய் வைத்துநவ நவமான இசைகள்செவி
  குளிரவே ஊதி நிற்பாய்
பொன்றுத லிலாதநிலை தரவல்ல உன்கரப்
  புனிதமுடல் தீண்ட லாலே
 பூரித்த உள்ளமகி ழெல்லையற மாய்ந்ததும்
  போற்றமொழி யற்று நின்றேன்
நன்றுதவு கொடைகோடி இக்குழவி கைகளில்
  நாளும்நீ அள்ளி யிடினும்
 நான்குறைகள் சொல்லிஅருள் வேண்டா திருந்திடேன்
  ஞானஒளி வீசு மதியே. 1

பண்ணொழுகு பாடலைப் பாடென் றெனக்கருள்
  பாலிக்கும் வேளை இந்தப்
 பாரெங்கும் அறியாத கர்வமது பொங்கிப்
  பரந்துளம் விம்ம நிற்பேன்
அண்ணலுன் திருமுகம் நோக்கிநிற்பேன் விழிகள்
  அருவிநீர் பாய நிற்பேன்
 ஆகாத குணமெலாம் அடியோடு நீங்கநல்
  அமுதகுணம் ஓங்க நிற்பேன்

1. வேயின் வருகுழல் - புல்லாங்குழல் ; வேய் - மூங்கில்.

எண்ணரிய ஆழியைத் தாண்டுபுள் போலன்பும்
இறகினை விரிக்கு மதனால்
ஏத்தியிசை பாடத் தொடங்குவேன் நீயும்அதில்
இன்புறுவை யென்ப துணர்வேன்
நண்ணுதற் கானவழி வேறெதுங் கண்டிலேன்
நானுமென் களி மயக்கால்
நண்பனென் றேயழைக் கின்றனன் என்னையாள்
நாதனே ஞான பரனே. 2

ஈசனே ஒருகணப் பொழுதுயான் உன்னரு
கிருந்திடற் கருளல் வேண்டும்
ஏழையேன் செய்வதற் காகவுள கருமங்கள்
யாவுமே பின் செய்குவேன்
நேசமுற நின்முகம் காணு திருக்கிலென்
நெஞ்சுதடு மாறி யழியும்
நேர்ந்துகொள் பணியெல்லை யில்லாத ஆழியாய்
நீண்டுதுயர் தந்து நிற்கும்
வாசமெழு சோலைவாய் மதுவுண்டு வண்டினம்
மதுரகீ தங்கள் பாட
மந்தமா ருதம்வீச வேனிலிங் கின்றெனது
வாசலில் வந்த தையா
ஆசையொடு நின்னையெதிர் நோக்கியிவ் வுள்ளத்தில்
அமைதிபெற வீற்றி ருந்தென்
ஆவியை உனக்குரிமை ஆக்கிவழி படுவதற்
கானவொரு தருணம் இதுவே. 3

வேறு

இன்னிசைநீ பாடுமுறை ஏதுமறி யேன்யான்
இரவுபகல் கேட்டின்பம் எய்திவியந் திடுவேன்
மன்னுலகை ஒளிசெய்வ துன்னிசையின் ஒளியாம்
வானெங்கும் உலவுயிரும் உன்னிசையின் உயிராம்
பன்னரிய நின்னிசையின் பாலாறு பொங்கிப்
பாறைகளும் உடைந்துருளப் பாய்ந்தொழுகு மதனோ(டு)
என்னிசையுங் கலந்தொழுக ஏற்றகுரல் காணேன்
எண்ணிலிசை வலையிலிழுத் தெனையாளும் இறையே.

உறுப்பனைத்தும் உயிர்பரந்திவ் வுருவமையும் வண்ணம்
உனதுகரம் தீண்டுகுறிப் புணர்வதனால் எளியேன்
வெறுப்பரிய உடலென்றும் விளக்கமுறச் செய்வேன்
மேலாகி உயிர்க்குயிராய் விளங்குபரம் பொருளே. 5

என்னுளத்து ஞானஒளி ஏற்றியமெய்த் தீபம்
இறையாகும் நீஅதனால் இறையேனும் பொய்கள்
மன்னுபல நினைப்புகளில் வந்துகல வாமல்
வன்மையொடு காத்திடுவன் வழுத்தரிய சிவமே. 6

ஏழையுளந் திருக்கோயில் எனக்கொண்டு நீயும்
எழுந்தருளி யிருக்குமுறை அறிந்தடிமை அங்கே
சூழவரு வஞ்சனையைத் துரத்திநிறை அன்பாம்
சுந்தரநாண் மலர்மாலை சூட்டிநிதம் தொழுவேன். 7

---

6. இறையேனும் - சிறிதேனும்.

ஆயபல தொழிலெடுக்க ஆற்றல்தரு வதுநீ
அதனால்என் செய்கருமம் அனைத்தூடும் அடியேன்
தூயநிலை துலக்கிடவே துணிந்திடுவேன் எவர்க்கும்
சொல்லரிய பரம்பொருளே சுயஞ்சோதிப் பொருளே. 8

வேறு

சின்னஞ் சிறிய மலர் இந்தச்
சிறிய மலரைக் கொய்திடுவாய்
இன்னுங் காலஞ் செல்லின்ஒளி
இழந்து வாடி விழுந்திடுமே. 9

ஐய னேநீ அணிமாலைக்(கு)
ஆகா மலரே யானாலும்
செய்ய உன்றன் திருக்கரத்தால்
தீண்டும் பெருமை அளிப்பாயே. 10

நேரம் இருண்டு போய்விடுமோ
நியமப் பூசை தவறிடுமோ
ஓரும் உள்ளம் அயர்கின்றேன்
உண்மை அறியா துழல்கின்றேன். 11

மணமும் நிறமும் இல்லாவோர்
மலரே எனினும் ஐயாநின்
பணியிற் சேரத் தாழாது
பறித்துக் கொள்ள வேண்டினனே. 12

---

இவை ஸ்ரீ ரவீந்திரநாத தாகூர் பாடிய 'கீதாஞ்சலி'யில் சில பாடல்களின் கருத்தையொட்டி எழுதப்பெற்றவை.

## 4. கோவில் வழிபாடு

க

கோவில் முழுதுங்கண்டேன் - உயர்
கோபுரம் ஏறிக்கண்டேன்
தேவாதி தேவனையான் - தோழி
தேடியுங் கண்டிலனே. 1

தெப்பக் குளங்கண்டேன் - சுற்றித்
தேரோடும் வீதிகண்டேன்
எய்ப்பில்வைப் பாமவனைத் - தோழி
ஏழையான் கண்டிலனே. 2

சிற்பச் சிலைகண்டேன் - நல்ல
சித்திர வேலைகண்டேன்
அற்புத மூர்த்தியினைத் - தோழி
அங்கெங்குங் கண்டிலனே. 3

பொன்னும் மணியுங்கண்டேன் - வாசம்
பொங்குபூ மாலைகண்டேன்
என்னப்பன் எம்பிரானைத் - தோழி
இன்னும்யான் கண்டிலனே. 4

தூப மிடுதல்கண்டேன் - தீபம்
சுற்றி எடுத்தல்கண்டேன்
ஆபத்தில் காப்பவனைத் - தோழி
அங்கேயான் கண்டிலனே. 5

தில்லைப் பதியுங்கண்டேன் - அங்கு
சிற்றம் பலமுங்கண்டேன்
கல்லைக் கனிசெய்வோனைத் - தோழி
கண்களாற் கண்டிலனே. 6

உ

கண்ணுக் கினியகண்டு - மனதைக்
காட்டில் அலையவிட்டுப்
பண்ணிடும் பூசையாலே - தோழி
பயனொன் றில்லையடி. 7

உள்ளத்தில் உள்ளானடி - அதுநீ
உணர வேண்டுமடி
உள்ளத்தில் காண்பாய்எனில் - கோவில்
உள்ளேயுங் காண்பாயடி. 8

## 5. சக்திப் பாட்டு

### க. ஞான நிஷ்டை

மனமே நீயும் வருந்துவதேன்
மகிழ்ந்து தேவி திருநாமம்
தினமும் மறவா தன்போடு
தியானஞ் செய்து வாழ்வாயே
கனமா மணிசே கண்டியெலாம்
கணக னென்று முழக்காது
நினைவை ஒடுக்கி நிகழ்த்திடும்அந்
நிஷ்டைக் கேதும் நிகருண்டோ? 1

வேறு

மண்ணினைக் கல்லதனைச் - செம்பினை
வடிவஞ் செய்துவைத்துப்
பண்ணிடும் பூசையாலே - யாதுமோர்
பலன்அ டைவதுண்டோ
எண்ணிய எண்ணிலெழும் - உருவை
இதய கமலத்தில்
திண்ணமாய் ஏற்றிவைத்து - நிதமும்
செபங்கள் செய்வாயே. 2

வேறு

பூவும் வேண்டாமே - பழமும்
பொரியும் வேண்டாமே
மேவும் உள்ளன்பே - தேவி
விரும்பும் நல்லமுதாம். 3

குருடர் கூடிநின்று - கற்பூரம்
கொளுத்திக் காட்டுவதால்
சிறிதும் நன்மையுண்டோ - இதனைச்
சிந்தனை செய்வாயே. 4

ஒளியை நோக்கிடவே - விளக்கின்
உதவி வேண்டுவதேன்
தெளிய உள்ளத்தில் - ஞான
தீபம் ஏற்றுவையே. 5

மேயும் ஆட்டினைப் - பிடித்து
வெட்ட வேண்டாமே
தீய குணமெல்லாம் - பலிநீ
செய்தாற் போதுமே. 6

## உ. ஞானப் பயிர்

வாழிஎன் மனமே - உழவின்
வழியறி யாயோ
பாழ்நில மெல்லாம் - உழுதால்
பயிர்செழித் திடுமே. 7

விரிசடைத் தேவி - பெயரால்
வேலிகட் டுவையேல்
அரிய காலனுமே - வந்தங்
கணுக மாட்டானே. 8

என்றிவ் வுலகமெலாம் - நாசம்
எய்தி வீழ்ந்திடுமோ
இன்றோ நாளையோ - அதனை
யாவர் அறிகுவார் ? 9

இந்த நாளே நீ - வாழ்வோ(டு)
இருக்கும் நாளாகும்
முந்திப் பயிர்செய்து - நல்ல
முதலெடுப் பாயே. 10

விரும்பி ஞானகுரு - தந்த
விதையை நீவிதைத்துப்
பெருகும் அன்புநீரைப் - பாய்ச்சிப்
பேணிக் காப்பாயே. 11

தனியே நிற்பாயேல் - மனமே
தளர்ந்து போவாய்நீ
எனையும் கூடவே - துணையாய்
ஏற்றுக் கொள்வாயே. 12

வெண்பா

துன்பத்தில் நீயே துணையென்பேன் அன்றிவரும்
இன்பத்தில் ஏதும்உனை எண்ணுகிலேன் - அன்பற்ற
பாவிஎனைப் போலிந்தப் பாரில் ஒருவருண்டோ
தேவிகா மாட்சியே செப்பு. 13

## ௩. ஞானச் சேய்

மனைவி மக்களும் மாண்டு மறைந்தனர்
வாழ்ந்த வீடும் குடியும் இழந்தனன்
இனிய நட்பினர் யாவரும் ஏகினர்
ஏழை ஆண்டி ஏகாங்கியும் ஆயினேன்
எனையும் இங்கிலை கண்டனை இன்னுமிங்(கு)
இன்ன லேதும் இழைத்திட உள்ளதோ
உனையும் அன்னையென் றோதி அழைத்திடேன்
உலகெ லாந்தரும் தேவி காமாட்சியே. 14

வேறு

திண்ணமாய் வீடுதொறும் - இரந்து
திரியத் தேறிவிட்டேன்
மண்ணிலே தாயில்லாப் - பிள்ளையும்
வளர்வ துண்டல்லவோ? 15

எண்ணி யுனைத்தேடி - அம்மாவென்(று)
ஏங்கி அழுதுநின்றேன்
கண்ணுந் தெரிவதில்லை - உனக்குக்
காதுங் கேட்பதில்லை. 16

தாய்இருக் கையிலே - மிகவே
தளர்ந்து வாடுமெனில்
சேயினுக் கவளால் - உலகில்
சிறிதும் நன்மையுண்டோ ? 17

ஈன்ற பிள்ளைக்கே - கொடிய
எதிரி ஆவாயோ
ஆன்ற உலகிலே - தாயின்
அறமும் ஈதேயோ ? 18

பின்னும் பின்னுமெனைப் - பிறவிப்
பிணியில் இடுவையேல்
என்ன செய்வதெனத் - தினமும்
எண்ணி நைவேனே. 19

---

இவை ஸ்ரீ ராமப்பிரசாத ஸென் பாடிய வங்காளிப் பாடல்களைத் தழுவி அமைக்கப்பட்டவை.

## 6. சுசிந்தை மாலை

திங்களுன் கருணை காட்டும்
தீக்கணுன் வெகுளி காட்டும்
கங்கையுன் பெருமை காட்டும்
கடுவுமுன் ஆண்மை காட்டும்
சிங்கம்நுண் இடையைக் காட்டச்
சிறையனம் நடையைக் காட்டும்
மங்கையோர் பாகா தாணு
மாலயா சுசிந்தை வாழ்வே.

சுசீந்திரம் என்பது திருவிதாங்கூர் இராச்சியத்திலுள்ள மிகப் பழமையான சிவஸ்தலம். இங்கே கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் சுவாமியின் திருநாமம் தாணுமாலயர் என்பது. தாணு - சிவம் ; மால் - விஷ்ணு ; அயன் - பிரமா ; மூவரும் சேர்ந்த மூர்த்தி. கடு - விஷம்.

# 7. அழகம்மை ஆசிரியவிருத்தம்

காப்பு

**உதயமார்த்தாண்ட விநாயகர்**

வெண்பா

சீருதவும் நல்லூரராந் தேரூர் அழகிதிருப்
பேருதவும் பாவினையான் பேசவே - ஓருதய
மார்த்தாண்ட வேழம் வழுவேதும் வாராமல்
காத்தாண்டு கொள்ளக் கடன்.

---

பூவாகி அப்பூ பொருந்துவண மாகிஅப்
பூவினுறு மணமு மாகிப்
பூதமாய்ப் புலனுய்ப் புறப்பாழு மாய்அப்
புணர்ப்பைஅறி விக்கும் அறிவாய்
ஓவாத அறிவினுக் குறுமிலக் காகிநின்(று)
உண்மையை உணர்த்து கின்ற
ஒண்சுடர்க் கற்பூர தீபமாய் வல்லிருள்
ஒழித்திலகு நெறிவிளக்கும்

---

இரதபுரி - தேரூர்; இது சுசீந்திரத்துக்கு அருகிலுள்ளது; ஆசிரியர் பிறந்த ஊர். அங்குள்ள விநாயகர் திருநாமம் உதய மார்த்தாண்ட விநாயகர் என்பது.

மாவேத மாய்ஆக மப்பொருளு மாகியே
மலியும்உன் னருளை யென்றும்
வாயார வாழ்த்தித் துதிப்பதினும் மேலான
வாழ்வேதும் எங்கு முண்டோ
தேவாதி தேவர்தொழு மூவா மருந்தே
சிவானந்த போக விளைவே
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 1

பத்திக்கும் என்மடப் புத்திக்கும் ஓயாத
பகையலால் பட்ச மில்லை
பஞ்சமா பாதகமும் எஞ்சா தெனக்குற்ற
பள்ளியிற் பாட மம்மா
துத்திக்கும் உன்பதம் சுற்றிப் பணிந்துசிறு
தொண்டுகள் செய்தும் அறியேன்
தோத்திரப் பாமாலை சாத்தியறி யேன்இவை
சொல்லுதற் கொன்றி ரண்டோ
மத்திக்கும் வெண்தயிரை யொத்துக் கலங்குமென்
மறுக்கம்நீ காண விலையோ
மைந்தனேன் செய்கின்ற குற்றங்கள் ஏதுமொரு
வகையா யெடுக்க லாமோ
தித்திக்கும் முக்கனிகள் எத்திக்கும் உதிர்கின்ற
செறிமரச் சோலை சூழும்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 2

ஆற்றுப் பெருக்கையொத் தழிகின்ற செல்வத்தை
அடைவதில் விருப்பு மில்லேன்
ஆண்டியாய் வேண்டிப் புசித்துண்டு நாடோறும்
அலைவதில் வெறுப்பு மில்லேன்
காற்றுப் பெயர்ந்திடிற் காயமோ சூத்திரக்
கயிறற்ற பாவை அதனால்
காரியம் சிறிதேனு முளதோஉன் இருபதக்
கஞ்சமே தஞ்ச மென்று
போற்றிப் பெரும்பேறு பெறுதற்கென் உள்ளமெப்
போதுந் தவிக்கு தம்மா
பொங்கிடுங் குரவையிட் டெங்குமோ ரொலிசெய்து
பொலிவாக மள்ள ரெல்லாம்
சேற்றுப் பெருக்கூடு நாற்றைப் புதைக்கின்ற
செய்யகஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 3

பொன்னையே பெண்ணையே மண்ணையே எண்ணிஎன்
பொழுதெலாம் போக்கி விட்டேன்
புண்ணியச் செயலெதும் பண்ணியான் அறிகிலேன்
பொல்லாங்கு புரியும் நெறியேன்
முன்னையோர் சொன்னமொழி உன்னுத முழுமுடன்
மூர்க்கரோ டுறவு கொண்டேன்
மூவுலகும் என்னையொப் பாரில்லை யில்லைஇது
முக்காலும் உண்மை யுண்மை

அன்னையே நின்னையே அல்லாது பின்னையோர்
ஆதாரம் வேறும் உண்டோ
அறிவற்ற சிறியேனை அன்பற்ற கொடியேனை
அடிமையாய் ஆண்டு கொள்வாய்
தென்னையே புன்னையே மன்னிவளர் சோலைத்
திக்கினுஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே.

தையலார் மீதிலே மையலாய் ஓயாது
சண்டாள நெறியி னெல்லாம்
சாடிக் குதித்தோடி அலைகின்ற மனதையான்
சற்றேனும் உன்னை நோக்கிப்
பொய்யிலா மெய்யன்பு பூண்டே துதித்திடப்
போதனைகள் செய்வ தெல்லாம்
பொறியெழும் பாலைவிழு துளியாவ தன்றிஒரு
புண்ணியம் பெறுதல் காணேன்
மையிலா நெறிகாட்டி அடியரிற் கூட்டியுன்
மலர்ப்பதஞ் சென்னி சூட்டி
வற்றாத கருணையாந் தெள்ளமுதம் ஊட்டிஎனை
வாழ்விப்ப தெந்த நாளோ
செய்யெலாந் துய்யவெண் சங்கினம் இராப்பொழுது
திங்களின் ஒளியை வீசும்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே.

மூக்கோண முதலான கோணங்க ளிட்டுனது
மூலாட் சரத்தை யிட்டு
மும்மலம் அறுக்குமுன் செம்மலர்த் தாளையே
முறையுடன் பூசை புரிவோர்
மிக்கோ ரெனச்சித்தி எட்டையும் பெற்றபின்
மேலான வீடும் அடைவார்
மேதினியில் இவ்வுண்மை அறியாத மாந்தரே
வேறுதெய் வங்கள் பணிவார்
பொக்கான எள்ளினை மிக்கவே ஆட்டினும்
பூசுதற் கெண்ணெய் தருமோ
பொய்யான தெய்வங்கள் ஒருகோடி போற்றினும்
புண்ணியம் சிறிதும் உளதோ
திக்கா றிரண்டோடு மிக்காறு பாய்கின்ற
செய்யகஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 6

Fந்ததிக் கேயென்ன என்னைப் பயந்திட்ட
தந்தைதாய் செய்த தவமோ
தலைநாளில் யான்செய்த புண்யமோ அல்லதுன்
தண்ணருட் பெற்றி தானோ
சிந்தையுன் பெயரினொடு நாவுனது சீரையும்
திரமென்று கொண்டு நித்தம்
சிமாட்டி யென்றுனது கால்மாட்டி லேவந்து
சென்னியும் பணிய நின்றேன்

எந்தநாள் உள்ளமும் இரங்கிநீ ஆள்வையோ
எவ்விதத் துய்கு வேனோ
இவ்வுடலை இன்னமும் எடுத்தெடுத் துழல்வெனோ
யாதொன்றும் அறிகி லேனே
செந்தமிழ் மணத்திறொடு செல்வர்மண முங்கொடைச்
செங்கைதரு மணமும் மாறுத்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 7

ஆங்காரி ஆனந்தி அம்பிகை நிரந்தரி
அந்தரி ஆளி யூர்தி
ஆரணி சர்வபரி பூரணி நாரணி
அயிராணி புயக வேணி
பாங்கான பார்வதி பார்க்கவி புராதனி
பகவதி வீரி நாரி
பயிரவி மகிடசம் மாரியென் றுனதுபேர்
பல்லாயி ரங்கள் சொல்லி
ஓங்கா தரத்தோடு பணிகின்ற அடியாரின்
உபயபதம் என்ற னக்கிவ்
உலகாளும் இறைவன் கவிக்குமொரு முடியினும்
உயர்ந்ததிரு முடிகள் அம்மா
தேங்கா மரத்திலே மாங்காய் பறிக்கவொரு
சினைமந்தி கொக்கை நோக்கும்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 8

---

8. தேங்காமரம் - தேம் காமரம். கொக்கு - மாமரம்.

வாணிக்கும் நளினிக்கும் அரியதாய் என்றுன்னை
வாயார வாழ்த்தி நின்றேன்
மந்தார முல்லைஇரு வாட்சிநீ யென்றுதலை
மாலையின் அணிந்து கொண்டேன்
கோணுக்குள் வளர்கின்ற குயிலென் றுனைத்தினம்
கோணாது பேணு கின்றேன்
குளிரான திங்களொடு கொண்டலென் றென்பவக்
கோடையுந் தீர வந்தேன்
மாணிக்கம் வயிரமர கதமும்நீ யென்றென்
மனப்பே டகத்து வைத்தேன்
வையகத் தெளியேனை ஆட்கொள்ள வந்தகுல
மாதெய்வம் நீயே அம்மா
சேணுக்கு நாட்டுபல தூணுக்கு நிகரெனத்
தெங்கினஞ் சூழும் ஊராம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே. 9

கொண்டலைக் கண்டனைய கூந்தலுங் குவியாத
கோகனக மொத்த முகமும்
குண்டலந் திகழ்கின்ற காதும்லைப் பின்றிஅருள்
குடிகொண்ட நீண்ட விழியும்
தொண்டையங் கனிவாயும் வெண்மூர லும்ஞான
சுதைதங்கு கும்ப தனமும்
துடியொத்த இடையும்ஒரு பிடியொத்த நடையும்முச்
சூலஞ் சுமந்த கரமும்

பண்டைநாள் சிவனேடு வாதாடி நடமிட்ட
பாதார விந்த மலரும்
பாலனேன் கண்டுகளி கூரவே திருவுளம்
பாலிக்க வேண்டும் அம்மா
தெண்டிரை யுடுத்தபூ மண்டலத் தேவந்த
தேவபுரி யொத்த புரியாம்
தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே
தேவியழ கம்மை உமையே.



# ஆசிய ஜோதி

19-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ஸர் எட்வின் ஆர்நால்ட் என்ற ஆங்கில அறிஞர் புத்த பகவானிடத்தில் மிகவும் ஈடுபட்டு அவருடைய புண்ணிய சரித்திரத்தை "ஆசிய ஜோதி" என்ற பெயருள்ள செய்யுள் நூலில் விரிவாகப் பாடியிருக்கிறார். இந்நூலை அவர் 1879-ம் ஆண்டில் வெளியிட்டார். அதிலுள்ள சில பகுதிகளைத் தழுவி பின்வரும் வரலாறுகள் எழுதப்பட்டிருக்கின்றன.

# 8. புத்தர் அவதாரம்

**இறைவன் தேவர் சபையில் தெரிவித்தல்**

" வையகத்தில் உயிர்கள்மிக வாடக் கண்டேன்
வழியறியா தலைமயங்கி வருந்தக் கண்டேன்
மெய்யிதுஎன் றுய்யுநெறி காட்டி நன்மை
விளைவிப்பார் எவரையுமே கண்ணிற் காணேன். 1

" எண்ணரிய ஜன்மங்கள் எடுத்து முன்னம்
எவ்வுடம்பி னெவ்வுயிர்க்கும் இடர்களைந்தேன்
மண்ணுலகம் ஈடேற இன்னும் ஓர்கால்
மனிதவுடல் தாங்கமனத் தாசை கொண்டேன். 2

" இப்பிறப்பை யல்லாது பிறப்பு வேறிங்(கு)
எனக்குமில்லை என்னைவழி பட்டு வாழும்
ஒப்பரிய அடியவர்கள் எவர்க்கு மில்லை
உண்மையீ தெந்நாளும் உண்மை யாமால். 3

" வானெழுந்து வளர்இமய மலையின் தென்பால்
வாழும்உயர் சாக்கியர்தம் மன்ன னுக்கு
யானுமொரு மகனாகச் செல்வேன் " என்றான்
இமயவரை நோக்கிஅரு ளிறைவன் மாதோ. 4

## மாயாதேவி கனாக் காணுதல்

வேறு

அந்நாளில் அவ்விரவில் சுத்தோ தனப்பேர்
அண்ணற்கு வாய்த்தமனை அலர்மங்கை யனையாள்
எந்நாளும் காணாத கனவொன்று கண்டாள்
எந்நாடும் எவ்வுயிரும் இன்புறவே அம்மா. 5

வேறு

ஆறு கதிரொளி செய்திடுமீன் - கண்ணுக்
கற்புதக் காட்சி யளித்திடுமீன்
ஏறும் அழகு பொலிந்திடுமீன் - திசை
எட்டும் ஒளிர ஒளிவிடுமீன். 6

சின்னஞ் சிறுமருப் பாறுளதாய்க் - காம
தேனுவின் பால்நிறம் பெற்றுளதாய்
மன்னும் மதவேழம் போன்றிடுமீன் - இந்த
வையம் ஒளிர ஒளிவிடுமீன். 7

விண்ணகம் விட்டு விரைந்திறங்கி - வரும்
வீதி யெலாம்ஒளி வீசிவந்து
மண்ணகம் வாழ வலந்திரிந்து - தேவி
மாயை வயிற்றில் புகுந்ததுவே. 8

---

8. மாயை - மாயாதேவி ; புத்தரது அன்னையார்.

வேறு

வலமருங்கில் விண்மீனும் வயிற்றிற் பாய
மாதேவி துயிலுணர்ந்து மகிழ்ச்சி யுற்றாள்
உலைவறியாத் திருவருளை வியந்து நின்றாள்
ஒருதாயுங் கண்டறியா இன்பங் கண்டாள். 9

### உலகில் நன்மை விளைதல்

வேறு

காலைக் கதிரோன் உதிக்குமுன் - ஆசிய
கண்ட மெலாமொளி கண்டதுவே
வேலைத் திரைகள் அடங்கினவே - திசை
வெற்புகள் நின்றுகூத் தாடினவே. 10

பட்ட மரங்கள்
தளிர்த்தனவே - எங்கும்
பாழ்ங்கிண றும்ஊறிப்
பொங்கினவே
திட்டுத் திடர்மணற்
காடும் சுடுகாடும்
சில்லென்று பூத்துச்
சிலிர்த்தனவே. 11



சீரிய ஓடை
குளங்களிலே - நல்ல
செந்தா மரைகள்
மலர்ந்தனவே
பாரிலே அவ்விராக் கண்ட புதுமையைப்
பாடிட வல்லவர் யாரேயம்மா! 12

வேறு

ஒண்சுடர் உலகில் உதித்தெழு காலை
மன்னிருட் சோலையோர் பொன்னிறம் பொலிய
நிரந்தொளி பரந்து நிறைவது போல,
மாயையின் மனத்தெழு மகிழ்ச்சியும் பொங்கி
இடைவெளி யின்றி எவ்வெவ் வுலகும்
பாதல மீறுப் படர்ந்து சென்றது ;

"பிறந்திட இறந்தீர் ! இறந்திடப் பிறந்தீர் !
எழுமின் எழுமின் யாவரும் எழுமின் !
புத்த பெருமான் புவியி லுதித்தனன்.
அவனை வணங்குமின் அவன்வழி பற்றுமின்
அவனுரை கேண்மின் அழிமனம் ஒழிமின்
நலமுறு மெனவே நம்பி நாடுமின்
உள்ளந் தெளிமின் உறுதி கொண்மின்.
உய்யும் வழியீ துண்மையு மீதாம்"
என்னும் மொழிகள் எவ்வெவ் விடத்தும்
மந்திர மொழிகளாய் வந்தெழக் கேட்டனர்.

அதனுல்,
அமைதி நிலவி அன்பு தழைத்துக்
குவலய முழுதும் குதுகல முற்றது.
கடலும் மலையும் காடும் மேடும்

பூவுல கறியாப் புதுமணங் கமழ
இனிய தென்ற லெழுந்து வீசியது.

### பெரியோர் கனவின் பலனைக் கூறுதல்

மறுநாட் காலை
மகிழ்ச்சி மிகவே
கற்ற பெரியோர்
கனவின் பயனைக்
கொற்றவன் அறியக்
கூறிய திதுவாம்: 13



### வேறு

" பாரரசி கண்டகனு நற்க ளுவாம்;
பானுவுமே கற்கடக மனையில் நின்றான்;
சீரமையும் ஆண்மகனைப் பெறுவாள்; அந்தச்
செல்வமகன் தெய்வீக மகனே யாவான்;
ஒருமுயர் ஞானகுரு வாகி எங்கும்
உண்மையுப தேசங்கள் செய்வான்; வேண்டின்
வாரிதிசூழ் புவிமுழுதும் ஆள்வான்; அன்னேன்
மகிமையெலாம் எடுத்துரைப்ப தெளிதோ ஐயா."

## புத்தர் அவதாரம்

### வேறு

ஒருநாள் பகலில் உச்சியம் பொழுதில்
அரண்மனை யருகில் அணிமலர் மலர்ந்து
நறுமணம் வீசுமோர் நந்த வனத்தில்
தழையும் பூவும்
தலையில் தாங்கிக்
கோவிலில் நட்டஓர்
கொடிமரம் போல
வளருமோர் அசோக
மரத்தின் நீழலில்
மாயா தேவி
வந்து நின்றனள்.



நிற்கவே,
உரிய காலம் உறுவதை உணர்மரம் -
உணராப் பொருளேதும் உலகினி வில்லை -
மலர்முடி வணங்கி வளைந்து கவிந்தொரு
தழைவீ டாகச் சமைந்து நின்றது.
பாரிடம்,
பன்மலர் மலர்ந்தொரு பஞ்சணை யாயது ;
பக்கத் தெழுமொரு பாறையும் பிளந்து



மதலையை ஆட்ட
மஞ்சன நீரை
ஓடும் அருவியாய்
ஒழுக விட்டது.
தேவி,

நோவு நொம்பலம்
நோக்கா டின்றியோர்
மகவினைப் பெற்று
மகிழ்ச்சி யுற்றனள்.

மகவின் அழகிய வடிவினில் அமைந்த
எண்ணான் கரிய இலக்கணம் கண்டு
தெய்விக மகவெனச் செப்பினர் தெரிந்தோர்.
சோபன மறிந்து சுத்தோ தனனும்
தாயை மகவொடு தண்டிகை ஏற்றி
அரண்மனை உய்த்திட ஆணை யிட்டனன்.

### நாற்றிசைக் காவலர் உருமாறி வருதல்

தண்டிகை அந்நாள் தாங்கிட வந்தவர்
மாநில மீது மனிதர் அனுதினம்
செய்யும் வினைகளைச் செப்பே டுகளில்
தீட்டி நான்கு திசைகளும் நின்று
காக்கும் காவலர், கனக மால்வரை

வாழிடம் விட்டு வந்த தேவரென்று
உண்மை யுணர்ந்தோர் உரைக்கின் றனரே. 15

வேறு

வெள்ளியில் அங்கி அணிந்துகொண்டு - கையில்
வெண்முத் தொளிரும் பரிசையேந்தி
ஒள்ளணி வீரர் தொடர்ந்துவர - அங்கே
உம்பர்கோன் போகியாய் வந்துநின்றான். 16

நீலக் குதிரையின் மீதிலேறி - ஒளிர்
நீல மணிவட்டம் கையிலேந்தி
காலகும் பாண்டர் தொழுதுவர - எமன்
கஞ்சிகை யாளாக வந்துநின்றான். 17

செக்கச் சிவந்த குதிரையேறி - உயர்
செம்மணிக் கேடகம் கையிலேந்தி
பக்கத்தில் நாகர்கள் சூழ வருணனும்
பள்ளிச் சிவிகையா ளாகவந்தான். 18

பொன்னிற மான குதிரையேறி - நல்ல
பொன்னிலே செய்த கிடுகுமேந்தி
மன்னிய யக்ஷர்க ளோடுகுபேரனும்
வண்ணச் சிவிகையா ளாகவந்தான். 19

வேறு

ஆண்ட விருதுகள் யாவுங் கரந்துல(கு)
ஐயுரு தங்கு வந்தார் - அவர்
பூண்ட வடிவால் உடையால்அப் பல்லக்குப்
போகியர் தாமே யானார். 20

---

17. காலகும்பாண்டர் - யமதூதர்.



தேவர் இவரென
யாவருங் கண்டு
தெளிந்திடா வாறு
வந்து - திசை
காவலர் கூடிச்
சிவிகையைத்தோளிலே
காவி யெடுத்தனரே. 21

உம்பரும் அன்று
மனிதராய் மாறி
உலாவிக் களித்து
நின்றார் - என்றும்
அம்புவி வாழ
இறைவனும் வந்தங்(கு)
அவதரித் தானெனவே. 22

### பெரியோர் மன்னனுக்கு உணர்த்தல்

வேறு

உண்மையிது சிறிதேனும் உணரா னாகி
ஒப்பரிய சுத்தோத னப்பேர் மன்னன்
அண்மையிலே நேர்ந்ததப சகுன மென்ன
அயர்ந்துமனம் வாடியங் கிருந்த காலை: 23

வேறு

கற்ற பெரியோர் கணநூல் அறிந்தவர்கள்
கொற்றமுடி மன்னவனைக் கோவிலிலே சென்றுபணிந்(து)

“ உலக முழுதும் ஒருகுடைக்கீழ் ஆளுமன்னன்
அலகில் புகழுடையான் ஆண்மைத் திருவுடையான்
ஓராயிர மாண்டுக் கொருமுறை தோன்றுமவன்
சீரார் பெருமானான் செல்வமக னாய்வந்தான்.
எண்ணற் கரியபே றேழுபெரும் பேறிந்த
மண்ணில் அவனுக்கு வாய்த்திருப்ப துண்டையா !
தெய்விக மான திருவாழி ஒன்றாகும்
எய்தற் கரிய இரத்தினம் ஒன்றாகும்
ஆகாய வீதிசெலும் அசுவமும் ஒன்றாகும்
வாகான வெள்ளை வாரணமும் ஒன்றாகும்
மதியிற் சிறந்தவொரு மந்திரி தானுண்டு
சதுரில் தளராவோர் தளகர்த்தன் தானுண்டு
காலைத் திருவின் கவினிற் சிறந்தநங்கை
சேலொத்தகண்ணியொருதேவியும்உண்”டென்றார்.

**நகரை அலங்கரித்தல்**

வேறு

இவ்வரிய பேறெல்லாம் எய்தற் கான
இம்மகனைப் பெற்றமகிழ் கொண்டு மன்னன்
திவ்வியமா நகரெங்கும் சிறப்புச் செய்து
திருவிழாக் கொண்டாட வேண்டும் என்றான். 25

### வேறு

மாநகர் வீதி விளக்கிநின்றார் - குலை
வாழைகள் வாசலில் கட்டிநின்றார்
வானுயர் தோரணம் நட்டுநின்றார் - எங்கும்
வாசமெழு பன்னீர் வீசிநின்றார். 26

கோலமிட்டார் கொடி
தூக்கிவிட்டார் - உயர்
கோபுரம் எங்குமே
தீபமிட்டார்
சாலை கடைகோயில்
வீதியெலாம் - மலர்த்
தாமங்களால் பந்தல்
செய்துவைத்தார். 27



பத்தியாய்ப் பூரண
கும்பம்வைத்தார் - முளைப்
பாலிகைப் பக்கம்
பொலியவைத்தார்
குத்து விளக்குகள்
ஏற்றிவைத்தார் - முத்துக்
கோவைகள் எங்குமே
தொங்கவிட்டார். 28

### வேடிக்கைகள்

தேகப் பயிற்சிகள் காட்டிடுவார் - சிலர்
செப்படி வித்தைகள் செய்திடுவார்
வேக அரவைவிட் டாட்டிடுவார் - சிலர்
விண்ணில் வடங்கட்டித் தாவிடுவார். 29



வாளினை வீசி
விளையாடுவார் - சிலர்
மாறியெழும் ஊஞ்சல்
ஆடிடுவார்
தாளிற் சதங்கை
இசைதரவே - பல
தாசிக ளும்சதிர்
ஆடிடுவார். 30

மானைப்போல் வேடமிட்
டாடிடுவார் - சிலர்
வன்கரடி யாட்டம்
ஆடிடுவார்
கானப் புலியைப் பழக்கி விளையாட்டுக்
காட்டிடுவார் நகர் வீதியெலாம். 31

மல்ல யுத்தம்சிலர் செய்திடுவார் - கோழி
வாத்துக்கள் சண்டைக்கு விட்டிடுவார்
வெல்லுந் தகர்களைத் தாக்கவிட்டுச் - சுற்றி
வேடிக்கை பார்த்துக் களித்துநிற்பார். 32

ஒத்த குழலிசை ஊதிடுவார் - கசிந்(து)
உள்ளம் உருகவே பாடிடுவார்
மத்தளம் கொட்டித் தலையசைப்பார் - வீணை
வாசித் தமுதம் வடித்திடுவார். 33

### வணிகர் குழந்தையைக் காண வருதல்

தேசம் புகழும் குலவணிகர் - மன்னன்
செல்வக் குமரனைக் கண்டிடவே
ஆசையெழுத் தங்கத் தாலங்களிற் - பல
அற்புதப் பண்டங்கள் ஏந்திவந்தார். 34

கம்பளி சால்வை கரும்படங்கள் - வாசக்
கத்தூரி பச்சைக்கற் பூரங்களும்
அம்பொன் மணிமுத்து மாலைகளும் - வகைக்(கு)
ஆயிர மாயிரம் கொண்டுவந்தார். 35

பத்து மடிப்பிலே மூடினாலும் - முகம்
பார்வை மறைத்திடாப் பட்டுக்களும்
சித்திரச் சேலைத் தினுசுகளும் - நல்ல
செம்பொற் சரிகையுந் தாங்கிவந்தார். 36

வந்தவர் யாவரும் வாழ்த்திநின்றார் - திறை
வைத்தடி போற்றி வணங்கிநின்றார்
சிந்தைக் கினிய திருமகனுக் கவர்
சித்தார்த்தன் என்னவே நாமமிட்டார். 37

### அசிதமுனி வருதல்

வேறு

மன்னன் திருமா மகனைக் காணப்
பற்பல நாட்டுளார் பற்பலர் வந்தனர்.
அவரொடு,
மண்ணாசை விட்டு மறச்செவி யடைத்தோன்

ஐம்புலன் அடக்கி அறச்செவி திறந்தோன்
அரச நீழலில் அனுதினந் தங்கி
அருந்தவம் புரியும் அசிதமா முனிவன்
புத்த ஞாயிறு புவியி லுதித்ததென்று
இமயவ ரெடுத்த இசையொலி யதனைத்
தியான வேளையில் தெளிவுறக் கேட்டு



மனத்தில் அடங்கா
மகிழ்வொடு வந்தனன்.
வந்த முனிவனை
மன்னவன் அடிபணிந்து
ஆசனம் உதவி
அர்ச்சனை செய்து
மாயையை நோக்கி
மதலையை எடுத்தவன்
திருவடி வைத்திடச்
செப்பினன். அவளும்
கணவ னிட்ட
கட்டளை போற்றி
மைந்தனை எடுத்து வருவது கண்டு:

### அசிதமுனி உரைத்தல்

மாமுனி எழுந்து வணங்கி நின்று
"பொறு பொறு, தாயே! பொறு" எனத் தடுத்து
"மதலாய்! நின்னடி மலரினைத் தொழுதேன்.
அவனே நீயாம் ஐய மதற்கிலை.
பகவன் நீயே பரமன் நீயே
புனிதன் நீயே புராணன் நீயே

தருமன் நீயே தலைவன் நீயே
ஆதி நீயே அறவோன் நீயே
ஆயிர வாரத் தாழியான் நீயே !
உண்மை ஒளியால் உள்ளிருள் போக்கி
நன்மை விளக்கும் ஞாயிறு நீயே !
யானும் இன்றுன் இணையடி பணிந்து
பாரிற் பிறந்த பயனெலாம் பெற்றேன்.
மன்னர் மன்னவ ! மானிடத் தருவில்
ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட் கப்பால்
ஒருமுறை மலரும் ஒண்மலர் இதுவாம்.
மலரிதன் மணமே அறிவின் மணமாய்
மனத்தின் மாசு மாற்றிடுமையா !
மலரிதன் மதுவே அருளின் மதுவாய்
மன்னுயிர்க் கின்பம் வளர்த்திடுமையா !
இம்மா மகனை ஈன்றவர் போல
மாதவஞ் செய்தோர் மாநிலத் துண்டோ ?
ஆயினும், அரசே ! அரிவாள் போலுன்
நெஞ்சினை யறுக்கும் நெடுந்துய ரொன்றிம்
மகவால் உனக்கு வருவது திண்ணம்.
மங்கையர்க் கரசி மாயா தேவி !
வாழ்க்கையோ துன்ப மயமாம் ; அதனால்,
ஏந்திய முத்தினை ஈன்றபின் இப்பி
மாண்டு மண்ணில் மறைவது போல,
இற்றைக் கேழாம் நாளில் இறவா
இன்ப வீடுநீ எய்துவது
உண்மை யாம்"என் றுரைத்தே கினனே. 38

## 9. புத்தரும் ஏழைச்சிறுவனும்

[அரண்மனையிலிருந்து வெளிப்பட்டுச் சென்ற புத்தர் வழி நடந்த களைப்பால் சோர்ந்து கிடந்தார். அவரைக் கண்ட ஓர் இடைச்சிறுவன், தான் தாழ்ந்த குலத்தினனாதல் பற்றி, தன் கலயத்தில் பால் கறந்து அவருக்குக் கொடுக்கத் தயங்கினான். பிறப்பினால் உயர்வு தாழ்வுகள் பாராட்டலாகாது என்று புத்தர் அவனுக்குப் போதித்த வரலாறு இதனுள் கூறப்படுகிறது.]

புண்ணிய மூர்த்தி புத்தமா முனிவன்
உண்மையை உணர்ந்திவ் வுலகினி லென்றும்
அழியா இன்பம் அடையும் அவாவினால்
மன்னர் வாழ்வையும் மறுத்தவ னாகித்
தந்தையை மறந்து தனயனைத் துறந்து
மங்கை யசோதை மதிமுகம் நீத்து
நள்ளிர வதனில் நன்னகர் நீங்கி
உண்ணு முணவும் உறக்கமு மின்றி
இரவும் பகலும் இடைவிடா தெங்கும்
நடந்து மெலிந்து நலிவுற் றொருநாள்
வேனில் வெயிலில் வெந்தெரி கானலில்
கைகால் தளர்ந்து கண்களும் மூடி
மூச்சும் அடங்கி முகமும் வெளிறி
உயிரும் உடம்பில் ஊச லாட
விஞ்சிய மயக்கால் வீழ்ந்து கிடந்தனன். 1

வேறு

ஆடுகள் மேய்த்துவரும் - ஒருவன்
ஆயர் குலச்சிறுவன்
வாடிக் கிடந்தவனைச் - செல்லும்
வழியின் மீதுகண்டான். 2

வையகம் வாழ்ந்திடவே - பிறந்த
மாதவச் செல்வன்முகம்
வெய்யிலில் வெந்திடாமல் - தழைகள்
வெட்டி யருகில்நட்டான். 3

தெய்வ குலத்திவனை - எளியேன்
தீண்டலும் ஆகாதினிச்
செய்வதும் யாதெனவே - சிறிது
சிந்தை தயங்கிநின்றான். 4

உள்ளந் தெளிந்துடனே - வெள்ளா(டு)
ஒன்றை யழைத்துவந்து
வள்ளல் மயக்கொழிய - மடுவை
வாயில் கறந்துவிட்டான். 5

நட்ட தழைகளெல்லாம் - வளர்ந்து
நாற்புற மும்கவிந்து
கட்டிய மாளிகைபோல் - வனத்தில்
காட்சி யளித்தஅம்மா. 6

பூவொடு காய்கனியும் - தளிரும்
பொலிந்து நிரம்பியங்கே
மேவு பலமணிகள் - இழைத்த
விதானமும் ஆனஅம்மா. 7

ஐயனை இவ்வுலகம் - காணுதற்
கரியவோர் தெய்வமெனக்
கைகள் தொழுதுநின்றான் - சிறுவன்
களங்க மிலாவுளத்தான். 8

நிலத்திற் கிடந்தஐயன் - மெல்ல
நிமிர்ந்து தலைதூக்கிக்
“ கலத்தினி லேகொஞ்சம் - பாலைக்
கறந்து தருவாய் ” என்றான். 9

“ ஐயையோ ! ஆகா ” தென்றான் - சிறுவன்
“ அண்ணலே ! யானும் உனைக்
கையினால் தீண்டவொண்ணா - இடையன்ஓர்
காட்டு மனிதன் ” என்றான். 10

உலகம் புகழ்பெரியோன் - இந்த
உரையினைக் கேட்டநாள்
அலகில் கருணையினால் - சொன்ன
அமுத மொழிஇதுவாம் : 11

“ இடர்வரும் போதும் - உள்ளம்
இரங்கிடும் போதும்
உடன்பிறந் தவர்போல் - மாந்தர்
உறவு கொள்வரப்பா. 12

ஓடும் உதிரத்தில் - வடிந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும் - சாதி
தெரிவதுண் டோஅப்பா. 13

எவர்உடம் பினிலும் - சிவப்பே
இரத்த நிறமப்பா
எவர்விழி நீர்க்கும் - உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா. 14

நெற்றியில் நீறும் - மார்பில்
நீண்ட பூணூலும்
பெற்றிவ் வுலகுதனில் - எவரும்
பிறந்த துண்டோஅப்பா. 15

பிறப்பினா லெவர்க்கும் - உலகில்
பெருமை வாராதப்பா
சிறப்பு வேண்டுமெனில் - நல்ல
செய்கை வேண்டுமப்பா. 16

நன்மை செய்பவரே - உலகம்
நாடும் மேற்குலத்தார்
தின்மை செய்பவரே - அண்டித்
தீண்ட வொண்ணாதார்." 17

நிலத்துயர் ஞானி - இவை
நிகழ்த்தி "என் தம்பீ !
கலத்தினி லேகொஞ்சம் - பாலைக்
கறந்து தா" என்றான். 18

ஆயர் சிறுவனும் - கலத்தில்
அளிக்க வாங்கியுண்டு
தாயினும் இனியன் - கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. 19



## 10. கருணைக்கடல்

[அரச வாழ்வைத் துறந்து நள்ளிருளில் வெளிப்பட்டுச் சென்ற புத்தர், பிம்பிசார மன்னனுடைய யாகத்துக்காகக் கொண்டுபோகப்பட்ட ஆட்டுமந்தையின் மத்தியில் துன்புற்றிருந்த ஒரு நொண்டி ஆட்டுக்குட்டியைத் தம் தோளில் சுமந்துகொண்டு சென்று யாகசாலையை அடைந்து, மன்னனுக்கு அறவுரை போதித்து, நாடெங்கும் உயிர்க்கொலையை நிறுத்திய வரலாறு இதனுள் கூறப்படுகிறது.]

### ஆட்டு மந்தையைக் கண்டிரங்குதல்

மந்தை பெரியமந்தை - உணவின்றி
 வாடி மெலியும்மந்தை
சிந்தை தளரும்மந்தை - நடக்கவும்
 சிவ னிலாதமந்தை. 1

கண்ணிலே கண்டபுல்லை - நின்றொருவாய்
 கௌவிட வொட்டாரையோ
தண்ணீர் குடிப்பதற்கும் - விலகிடச்
 சம்மதி யாரேஐயோ. 2

காடு மலைகளெல்லாம் - ஓடியோடிக்
 கால்களும் ஓய்ந்தனவோ
ஆடுக ளாயிடினும் - எவரிவ்
 அநியாயம் செய்வரையோ. 3

தன்னந் தனியாகி - ஒருமறி
 தாவிமுன் னோடுதையோ
பின்னோ ரிளமறியும் - கிந்தியிங்கு
 பீடைப் படுதேஐயோ. 4

கல்லெறி கொண்டதுவோ - விழுந்தொரு
 கால்முட மானதுவோ
செல்லும் வழிநீள - உதிரமும்
 சிந்திப் பெருகுதையோ. 5

ஓடும் மறிதேடித் - தாயுமுன்னில்
 ஓரடி வைத்தவுடன்
வாடும் மறியையெண்ணி - விரைந்துபின்
 வந்து தயங்குதையோ. 6

**தாயாட்டின் துயர் போக்குதல்**

வேறு

இத்தனையுங் கண்டுமனம் இரங்கி நொண்டும்
 இளமறியை இருகரத்தின் எடுத்து வையம்
அத்தனையுந் தாங்குபுயம் அணிய ஏந்தி
 அருளுருவாம் அண்ணலும்அத் தாயை நோக்கி: 7

வேறு

" அல்ல லுறவேண்டாம் - இனித்துயர்
 ஆறி வருவாயம்மா
செல்லு மிடத்திலுன் றன் - மதலையைச்
 சேர்த்து விடுவேனம்மா. 8

4. கிந்துதல் - நொண்டி நடத்தல்.

ஏழைப் பிராணிகளின் - இடர்களைந்(து)
இன்ப மளிப்பதுபோல்
வாழும் உலகிதனிற் - செயுமொரு
மாதவம் வேறுமுண்டோ? 9

மீளாத் துயர்க்கடலில் - உயிரெலாம்
வீழ்ந்து முழுகையிலே
பாழாங் குகைதேடிச் - செயுந்தவம்
பாவமே ஆகுமம்மா." 10

### இடையரைக் கண்டு வினவுதல்

வேறு

என்றுகனிந் துளமுருகி நின்ற காலை
எமன்விட்ட தூதுவர்போல் ஆட்டை யெல்லாம்
குன்றிருந்து துரத்திவரு மவரைக் கண்டு
குவலயத்தில் அருள்மாரி பொழியும் ஐயன்: 11

வேறு

"மாலைப் பொழுதின்னும் ஆகவில்லை - வெயில்
மண்டை பிளந்து வெடிக்குதையோ
சாலை வழியிந்த ஆடுகளும் - எங்கு
சாய்ந்து செலுமையா கூறும்" என்றான். 12

### இடையர் மறுமொழி கூறுதல்

அம்மொழி கேட்டவ் விடையருமே - "எம்மை
ஆளும் இறைவன தாணையினால்
செம்மறி நூறுவெள் ளாடும்ஒரு - நூறு
சேர்த்து வருகிறோம்" என்றுரைத்தார். 13

இன்றிரா யாகம் முடியுதென்றார் - அதில்
இத்தனை யுங்கொலை யாகுமென்றார்
நின்றுசொல நேரம் இல்லையென்றார் - இன்னும்
நீண்ட வழிபோக வேண்டுமென்றார். 14

வள்ளலும் உள்ளம் வருந்தியானும் - அந்த
மாமகம் காண வருவேனென்று
துள்ளும் மறியுஞ் சுமந்துகொண்டு - தாயும்
சோர்ந்து தொடர வழிநடந்தார். 15

### இராஜகிருக நகரத்தை யடைதல்

வேறு

மானேந்தும் ஈசனுளம் நாண ஆட்டின்
மறியேந்து பெருங்கருணைப் புனித வள்ளல்
வானேந்து மதில்மீது கொடிக ளாடும்
மாநகரின் திருவாயில் வந்த போது : 16

### மாலைக் காலம்

வேறு

செங்கதிர் வெம்மை தணிந்ததடி - வாசத்
தென்றல் உலாவி எழுந்ததடி
பொங்கி வருஞ்சோணை மாநதியும் - ஒரு
பொன்னிறம் பெற்றுப் பொலிந்ததடி. 17

முல்லை மலர்ந்து மகிழ்ந்ததடி - ஆம்பல்
மூடிய வாயும் திறந்ததடி
எல்லை யிலாமலர்ச் சோலையிலே - வண்டும்
இன்னிசை பாடித் திரிந்ததடி. 18

தாயும் இரங்கி வருகுதடி - கன்றும்
தாவிக் குதித்தோடிச் செல்லுதடி
ஆயும் பொழிலில் பறவையெல்லாம் - அந்தி
அங்காடி போல ஒலிக்குதடி.

**வீதியிற் கண்டவர் வியந்து நிற்றல்**

வையகந் தன்னில் உயிர்களின் மீதருள்
மாரி பொழியும் பெரியவனும்
ஐயனைக் கண்டவர் கொண்ட அதிசயம்
ஆராலே கூற இயலுமடி.

வாயிலைக் காத்திடும் சேவகரும் - வழி
மாறி விலகி ஒதுங்கிநின்றார்
தாயினும் மிக்க தயாளன்இவன் - போல்இத்
தாரணி கண்டது முண்டோவென்றார்.

பாதையிற் சென்றவர் பார்த்துநின்றார் - ஒரு
பக்கமாய் வண்டிகள் ஓட்டிநின்றார்
மாதவம் ஈதலால் வேறுளதோ - என
வாயார வாழ்த்திப் புகழ்ந்துநின்றார்.

சந்தை இரைச்சல் அடங்கியது - கடைச்
சண்டையு மில்லா தொடுங்கியது
வந்தவர் போனவர் கண்களுக்கும் - அந்த
வள்ளல் முகம்விருந் தானதம்மா.

கூடம் எடுத்தகை தாழ்ந்திடாமல் - ஒரு
கொல்லனும் கண்டு திகைத்துநின்றான்
ஊடுபா வோட்டிய சாலியனும் - நூலை
ஓட்டி முடியாது விட்டுவந்தான்.

மண்ணைச் சுமந்து வரும்துயவன் - ஈதோர்
மாமுனி என்று வணங்கிநின்றான்
எண்ணெய்க் குடமேந்து வாணியனும் - இவர்
யாரோ பெரியர் எனப்பணிந்தான். 25

பள்ளிச் சிறுவரும் சாடிவந்தார் - அவர்
பக்கத் தண்ணாவியும் ஓடிவந்தார்
கள்ளரும் உள்ளம் மறந்துநின்றார் - வட்டக்
காரரும் காசுப்பை விட்டுவந்தார். 26

மாடும் அரிசியைத் தின்றதம்மா - அதை
மாற்றி யடிப்பாரும் இல்லையம்மா
வீடும் திறந்து கிடந்ததம்மா - உலை
வெந்திடு சோறும் குழைந்ததம்மா. 27

பெண்டுகள் வாசலில் கூடிநின்றார் - இந்தப்
பேரரு ளாளனும் யாரோவென்றார்
கண்டவர் உள்ளம் கனியுதென்றார் - இவன்
கண்ணி னழகினைப் பாருமென்றார். 28

கன்னி யொருமகள் மையெழுதி - இரு
கண்ணும் எழுதுமுன் ஓடிவந்தாள்
பின்னு மொருமகள் கூந்தலிலே - சூடும்
பிச்சி மலர்கையிற் சுற்றிவந்தாள். 29

---

26. அண்ணாவி - உபாத்தியாயர். வட்டக்காரர் - சில்லறை கொடுப்போர்.

பாலுக் கழுத மதலையுமே - ஐயன்
பக்கம் வரக்களிப் புற்றதென்றால்
சேலொக்கும் மாதர் விழிகள் அவன் - முகச்
செவ்வியில் ஆழ்வ ததிசயமோ ! 30

கண்ணிற் கருணை விளங்குதென்றார் - நடை
கம்பீர மாகவுங் காணுதென்றார்
எண்ணில் இடையனும் ஆகானென்றார் - இவன்
இராஜ குலத்தில் பிறந்தோனென்றார். 31

யாகப் பசுவை எடுத்துவரும் - இவன்
எண்ணரும் பக்தி யுடையனென்றார்
மாகந் தொழுதேவ ராஜனென்றார் - உயர்
மாதவச் செல்வன் இவனேயென்றார். 32

செம்பு நிறைந்துபால் சிந்திடவே - சிலர்
சிந்தை மறந்து கறந்துநின்றார்
எம்பிரான் செல்லும் வழியின் சிறப்பெலாம்
எங்ஙனம் சொல்லி முடிப்பேனம்மா. 33

வேறு

வையமிசை உயிர்கள்படுந் துயரை எண்ணி
மறுகும்உளத் தயலொன்றும் அறியா னாகி
ஐயனும்அவ் வீதிவழி நடந்து மன்னன்
அரியமகஞ் செய்யுமிடம் அணுகி னானே. 34

32. மாகம் - உலகம். 34. மகம் - யாகம்.



யாகசாலை வருணனை

வேறு

தாரணி மன்னவன் பிம்பிசாரன் - யாக
சாலை நடுவினில் வந்துநின்றான்
ஆரண மோதிய அந்தணரும் - நிரந்(து)
அங்கிரு பக்கமாய்க் கூடிநின்றார். 35

மந்திர மோதி எரிவளர்த்தார் - புகை
வானை யளாவி எழுந்ததம்மா
இந்தன மிட்டுப் பெருக்கிநின்றார் - தீயும்
ஏழுநா விட்டுச் சுழன்றதம்மா. 36

36. இந்தனம் - விறகு.

பண்டங்கள் வாரி யிறைத்தாரம்மா - சோம
பானமும் அள்ளிச் சொரிந்தாரம்மா
குண்டம் நிறையநெய் விட்டாரம்மா - எரி
கோபுரம் போல உயர்ந்ததம்மா. 37

வேதம் விதித்த விதிமுறையில் - ஒரு
வெள்ளாடு கண்டு பிடித்துவந்து
பாதக மான பலியிடவே - அங்கு
பாரிற் கிடத்தி யிருந்தாரம்மா. 38

ஆடுகள் விட்ட உதிரமெல்லாம் - அங்கோர்
ஆறாக ஓடிப் பரந்ததம்மா
நாடியவ் வேள்விக் களத்தை விரித்திட
நாவும் நடுங்கி ஒடுங்குதம்மா. 39

நீட்டிக் கழுத்தை அறுப்பதற்கோ - அதன்
நெஞ்சை வகிர்ந்து பிளப்பதற்கோ
தீட்டிய கத்தியும் கையுமாக - ஒரு
தீக்ஷிதர் முன்வந்து நின்றாரம்மா. 40

**அர்ப்பணம் செய்தல்**

வேறு

'யாகத் திறைவரே! எண்ணருந் தேவரே!
அம்புவி யாளும் அரசர் பெருமான்
பிம்பி சாரப் பெருந்தகை இந்நாள்
மறைகள் விதிக்கும் வழிவகை யறிந்து
முறையிற் செய்து முடிக்கும்இம் மகத்தில்
பேணி உமக்கிடும் பெரும்பலி யிதுவாம்.

உயிரொடு துள்ளி ஒழுகிடும் உதிரம்
கண்களிற் கண்டு களிப்பீ ராகுக!
சீரிய குணத்தெம் செங்கோல் மன்னன்
பாரிற் செய்த பழியும் பாவமும்
தாங்கியிவ் வாடு சாவக் கையினில்
வாங்குமிவ் வாளால் வதைத்தவ் வூனையும்
எரிவாய் இடுவன், யாவும்
பொரியாய்ப் புகையாய்ப் போவது குறித்தே.' 41

### புத்தர் தடுத்தல்

### வேறு

என்று சொல்லியாக தீக்ஷிதரும் - வாளை
ஏந்திய கையினை ஓங்கையிலே
பொன்றும் உயிரினைக் காக்கவரும் - அந்தப்
புண்ணிய மூர்த்தியும் ஓடிவந்து: 42

" அண்ணலே இக்கொடும் பாவியிவ் வேளையில்
ஆட்டினைக் கொல்லா தருள்புரிவீர்
திண்ணிய ஞான முடையவரும் - இந்தத்
தீவினை செய்வரோ" என்றுரைத்தான். 43

காலிலே கட்டிய கட்டவிழ்த்தான் - அதன்
கண்ட மிறுக்கிய கட்டவிழ்த்தான்
வாலிலே கட்டிய கட்டவிழ்த்தான் - அதன்
வாயினிற் கட்டும் அவிழ்த்துவிட்டான். 44

### அறவுரை கூறுதல்

நின்றவர் கண்டு நடுங்கினரே - ஐயன்
நேரிலே நிற்கவும் அஞ்சினரே
துன்று கருணை நிறைந்தவள்ளல் - அங்கு
சொன்ன மொழிகளைக் கேளுமையா : 45

“ வாழு முயிரினை வாங்கிவிடல் - இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும்
வீழு முடலை எழுப்புதலோ - ஒரு
வேந்தன் நினைக்கிலும் ஆகாதையா. 46

யாரும் விரும்புவ தின்னுயிராம் - அவர்
என்றுமே காப்பதும் அன்னதேயாம்
பாரில் எறும்பும் உயிர்பிழைக்கப் - படும்
பாடு முழுதும் அறிந்திலீரோ ? 47

நேரிய உள்ளம் இரங்கிடுமேல் - இந்த
நீணிலம் முற்றுமே ஆண்டிடலாம்
பாரினில் மாரி பொழிந்திடவே - வயல்
பக்குவ மாவ தறிந்திலீரோ ? 48

காட்டும் கருணை யுடையவரே - என்றும்
கண்ணிய வாழ்வை யுடையவராம்
வாட்டும் உலகில் வருந்திடுவார் - இந்த
மர்மம் அறியாத மூடரையா. 49

ஆட்டின் கழுத்தை அறுத்துப் போசுக்கிறீர்
ஆக்கிய யாகத் தவியுணவை
ஈட்டும் கருணை இறையவர் கைகளில்
ஏந்திப் புசிப்பரோ கூறுமையா. 50

மைந்தருள் ஊமை மகனை ஒருமகன்
வாளால் அரிந்து கறிசமைத்தால்
தந்தையும் உண்டு களிப்பதுண்டோ - இதைச்
சற்றுநீர் யோசித்துப் பாருமையா. 51

காடு மலையெலாம் மேய்ந்துவந் தாடுதன்
கன்று வருந்திடப் பாலையெல்லாம்
தேடிஉம் மக்களை ஊட்டுவதும் - ஒரு
தீய செயலென எண்ணினீரோ ? 52

மேடையில் நீங்களும் மூடிப் படுத்திட
மெல்லிய கம்பளி தானளித்து
வாடையி லாடிக் கொடுகுவதும் - அதன்
வஞ்சகச் செய்கையோ சொல்லுமையா. 53

அம்புவி மீதில்இவ் வாடுகளும் - உம்மை
அண்டிப் பிழைக்கும் உயிரலவோ
நம்பி யிருப்பவர் கும்பி எரிந்திடில்
நன்மை உமக்கு வருமோஐயா ? 54

---

53. கொடுகுவது - குளிரால் நடுங்குவது.

காட்டுப் புலியின் கொடுமையஞ்சி - உங்கள்
கால்நிழல் தங்கிய ஆடுகளை
நாட்டுப் புலியெனக் கொல்லுவதோ - அந்த
நான்மறை போற்றிய நீதிஐயா. 55

மண்ணில் வளர்ந்திடும் புல்லையுண்ணும் - வான
மாரி பொழிந்திடும் நீரையுண்ணும்
எண்ணிநீர் செய்யும் உதவியென்னும் - இதை
ஏனோ உணர்ந்திலீர் மானிடரே. 56

பிள்ளையைக் கொன்று கறிசமைத்தீர் - அதன்
பெற்றோரை உண்ண அழைத்துநின்றீர்
வள்ளலே உள்ளந் தெளிந்தவரே - இது
வாழ்வை யளிக்கும் செயலாமோ? 57

மன்னுயி ரெல்லாம் உலகில் ஒருதாயின்
மக்களென் றுண்மை யறிந்திலீரோ
தன்னுயிர் போற்றிப் பெரும்பழி செய்வது
சண்டாளர் கண்ட நெறியலவோ? 58

மாண்ட மனிதனோர் ஆடுமாவான் - உடல்
மாறியோர் ஆடும் மனிதனுகும்
நீண்ட உலகின் இயற்கைஐயா - இது
நீதிநூல் கண்டிடும் உண்மைஐயா. 59

பாரில் உதிரம் குளிப்பதனுல் - ஒரு
பாவமும் நீங்குவ தில்லைஐயா
சீரிய தேவரும் இச்செயல் - கண்டுதம்
சிந்தை களித்திட மாட்டாரையா. 60

தாயென நம்பி வரும்உயிரை - யாக
சாலை நடுவில் கிடத்திஒரு
பேயெனக் கீறிப் பிளப்பதனால் - என்ன
பேறும் பெருமையும் பெற்றீரையா ? 61

துட்டப் பிசாசைக் குறித்திடினும் - இந்தத்
தூண்டிலில் வந்த தகப்படுமோ
வெட்டிக் கொலைசெய்ய வேண்டாமையா - இதை
விட்டொழிதல் மிக்க மேன்மைஐயா. 62

ஆயிரம் பாவங்கள் செய்தவெல்லாம் - ஏழை
ஆட்டின் தலையோ டகன்றிடுமோ
தீயவும் நல்லவும் செய்தவரை - விட்டுச்
செல்வ தொருநாளு மில்லைஐயா. 63

முன்னைப் பிறப்பினில் செய்தவினை - யாவும்
முற்றி முதிர்ந்து முளைத்தெழுந்து
பின்னைப் பிறப்பில் வளர்ந்திடு மென்பது
பித்தர் உரையென எண்ணினீரோ ? 64

நெஞ்சினில் வாயினில் கையினில் செய்திடும்
நீதி அநீதிகள் யாவையுமே
வஞ்சமி லாது மறுபிறப்பில் - உம்மை
வந்து பொருந்தாமற் போயிடுமோ ? 65

கன்று பசுவை மறந்திடினும் - செய்த
கருமங்கள் உம்மை விடுமோஐயா
கொன்று பழிதேட வேண்டாமையா - இனிக்
கொல்லா விரதம்மேற் கொள்ளுமையா. 66

தானியம் பற்பல தாமிலேயோ - சுவை
தங்கிய காய்கனி தாமிலேயோ
வான மழைதரு நீரிலேயோ - இவை
வாழ்ந்திடப் போதும் உணவலவோ ? 67

ஊனுண வின்றி உறவுகொண்டு - நிலத்
துள்ளதை யாவரும் உண்டிருந்தால்
மானும் புலியும் ஒருதுறையில் - நீரை
வந்து குடிப்பதும் காணலாமே. 68

ஆதலால் தீவினை செய்யவேண்டாம் - ஏழை
ஆட்டின் உயிரையும் வாங்கவேண்டாம்
பூதலந் தன்னை நரகம தாக்கிடும்
புத்தியை விட்டுப் பிழையுமையா." 69

வேறு

வாய்பேசா உயிரெல்லாம் வாய்பெற் றங்கு
வாதாடி வழக்கிட்ட வாறீ தென்னத்
தாய்போலுந் தயவுடைய தரும மூர்த்தி
சாற்றியநல் லறவுரைகள் யாவுங் கேட்டு: 70

**கொலை தவிர்தல்**

வேறு

தீக்ஷிதரும் வாளை விட்டெறிந்தார் - ஓமத்
தீயெரி குண்டம் அழித்துவிட்டார்
மோக்ஷம் இவையுந் தருமோவென்றார் - ஞான
மூர்த்தியின் பாதம் பணிந்துநின்றார். 71

"செய்பிழை யாவும் பொறுத்தருள்வீர்" - எனச்
சேவித்து மன்னனும் தாழ்ந்துநின்றான்
"ஐயனே நாட்டில் கொலைதவிர்த்து - நானே
ஆணையும் கட்டுவேன்" என்றுரைத்தான். 72

### அரசன் கொலை தவிர்க்கக் கட்டளையிடல்

வேறு

"மன்னுயி ரெல்லாம் தன்னுயிர் போல
நிலமுழு தாளும் நெடுமுடி யண்ணல்
பிம்பி சாரப் பெரும்பெயர் வேந்தன்
மெய்யகங் கண்டிவ் வையக முய்ந்திடத்
திருவருள் புரிந்த செய்தி யிதுவாம்:

பாக சாலையிற் பக்குவம் செய்தும்
யாக சாலையில் எரிவாய் ஊட்டியும்
பலவா முயிரின் குலவே ரறுத்தல்
பழியும் பாவமும் பயக்கும் செயலாம்.

ஆதலின்,
ஊனை யுண்பதும் உயிர்க்கொலை புரிவதும்
இந்நாள் முதல்இந் நன்னாட் டெல்லையில்
இல்லா தொழிக. ஈதெம் ஆணை.
அருளுடை யோர்க்கே அருளும்
உறுதுணை யாமென் றுளங்கொள் வீரே.' 73

வேறு

மந்திர வோலை எழுதுபவர் - அந்த
மன்னவ னாணை இம் மாநிலத்தில்
சந்திர சூரியர் உள்ளளவும் - நிலை
தந்திடச் சாசனம் கண்டாரம்மா. 74

பாறைகள் மீது வரைந்துவைத்தார் - வழிப்
பக்கமும் தூணில் பொறித்துவைத்தார்
ஆறு குளங்கள் துறைகளிலும் - கல்லில்
ஆணை அழியா தெழுதிவைத்தார். 75

அங்காடி வீதியிற் கண்டிடலாம் - சந்தி
அம்பலந் தோறுமே கண்டிடலாம்
கங்கா நதிக்கரை எங்கும்இவ் வாணையைக்
காணா இடமேதும் இல்லைஐயா. 76

வேறு

அந்நாள் முதலாப் பின்னா ளெல்லாம்
மாதமும் மாரி வானம் பொழிந்தது
நாடு செழித்தது நகரம் சிறந்தது
உண்மை யறிவும் உதய மாயது
செம்மை வளர்ந்தது தீமை தேய்ந்தது
புத்தன் உரையைப் பொன்னுரை யாக
நித்தம் நித்தம் நினைத்த பயனாய்க்
கொல்லா விரதம் குவலயத்து
எல்லா உயிர்க்கும் இன்பளித் ததுவே. 77

# 11. புத்தரும் மகளிழந்த தாயும்

[தன் மகவையிழந்த ஓர் ஏழைத் தாய் அதை உயிர்ப் பிக்குமாறு புத்தரை வேண்டியபோது அவர் அவளுக்கு அற வுரை கூறி, பிறப்புளதேல் இறப்புண்டு என்பதைப் போதித்த வரலாறு இதனுள் கூறப்படுகிறது.]

மண்ணில் வாழ்வுறும் மக்கள் மடிவது
திண்ண மென்றுளந் தேறத் தெளிவுரை
அண்ணல் அன்றோர் அணங்கினுக் கோதிய
புண்ணி யம்பெறு காதை புகலுவாம். 1

வேறு

மூடமான இளமறியை முதுகில் ஏந்தி
மூவுலகும் கருணையினால் வென்ற வீரன்
திடமாகப் பலஉயிரும் அளிக்குஞ் சோணைத்
தெய்வநதிக் கரைவந்து சேர்ந்த போது: 2

மகளிழந்த தாய் புத்தரைக் காணுதல்

வேறு

மானைப் பழித்த விழியுடையாள் - ஒரு
மாமயில் போலும் நடையுடையாள்
தேனைப் பழித்த மொழியுடையாள் - பெண்ணின்
தெய்வ மெனத்தகும் சீருடையாள். 3

ஆறாகக் கண்ணீர் வடித்துநின்றாள் - கையில்
ஆண்மக வொன்றையும் ஏந்திநின்றாள்
தேறாத உள்ளமும் தேற்றுவிக்கும் - ஞான
தேசிகன் சேவடி போற்றிநின்றாள். 4

வேறு

சந்திர மதிபோல் நின்ற தையலை நோக்கி ஐயன்
வெந்துயர் விளைந்ததென்னை விளம்புக எனலும்அன்னாள்
நைந்துநொந் துருகி யுள்ளம் நயனத்தின் வழியா யோட
மைந்தனைக் காட்டி இந்த மறுமொழி கூற லுற்றாள் : 5

அவள் கூறுதல்

வேறு

"அத்திமர மோங்கியெழும் அருஞ்சோலை யதனில்
அயலொருவர் துணையின்றி அடியாளும் அன்பாய்ப்
புத்திரனைப் போற்றிவரும் பொறுமையினைக் கண்டு
புண்ணியநீ கொண்டபரி வளவுண்டோ ஐயா ? 6



தலைநாளில் நீகண்ட சிறுமகனும் இன்று
தள்ளாடு முயிரோடு கிடக்கின்றான் ஐயா
தொலையாத கொடும்பாவி யானும்இனி யிந்தத்
தொல்லுலகில் வாழ்வதிலோர் பயனுண்டோ ஐயா? 7

### மகனை அரவு தீண்டல்

சிரித்தமுக மெனமலர்ந்து செழித்தசெடி நடுவே
சிறுமகனும் விளையாடித் திரிந்திடும்அவ் வேளை
விரித்தபட மெடுத்தரவொன் றடுத்தொருகை பற்றி
விளங்குமணிக் கடகமென வளைந்துகிடந் ததுவே. 8

பால்மணம்மா றுதசிறு பாலகனும் அறியான்
படஅரவை விளையாட்டுப் பண்டமெனக்கொண்டான்
வாலினையும் தலையினையும் வயிற்றினையும் வலித்து
வருத்தமெழச் சிறுகுறும்பு செய்துவிட்டான் ஐயோ.

சிறுபொழுது சென்றிடஎன் செல்வமக.னுடலில்
சீதமிகப் பரந்துணர்வு தீர்ந்துவிட்ட தையா
நிறுத்தவிழி ஒருநிலையில் நின்றுவிட்ட தையா
நீட்டியகால் மடங்காது நிமிர்ந்துவிட்ட தையா. 10

### கண்டோர் கூறுதல்

விடமேறி மடிந்ததென விளம்புகின்றார் சிலரே
விதியாலே விளைந்ததென விரிக்கின்றார் சிலரே
தடையில்லை இதுமூடு சன்னியென்றார் சிலரே
சஞ்சீவி யளித்தாலும் சாமென்றார் சிலரே. 11

வயித்தியரைக் கண்டிந்த வரலாறு சொல்லி
மயக்கமிது நீங்கஒரு மருந்திலையோ என்றேன்
பயித்தியமோ இனியேதும் பயனில்லை என்றார்
பட்டமரம் தளிர்த்திடுமோ பாரிடத்தில் என்றார். 12

அன்பாக அரவிட்ட சிறுமுத்த மதனுல்
ஆவிக்கும் இடையூறுண் டாமோஎன் ஐயா
வன்பாரில் மகவிழந்து வாழ்வேனே ஐயா
மலையேறிக் குதித்துயிரை மாய்ப்பேனே ஐயா. 13

கண்டாரில் மிக்கஉளக் கனிவுண்டையர் ஒருவர்
'காரிகையே மலைமீது காவியுடை அணிந்து
முண்டிதமாய் அலையுமொரு முனிவர்அடி பணிந்தால்
முடியாத காரியமும் முடியும்'என உரைத்தார். 14

தாயின் துயரம்

வேறு

காடும் மலையுங் கடந்துவந்தேன் - உன்னைக்
கண்டு துயரெல்லாம் போக்கவந்தேன்
வாடும் மலர்ச்செண்டு போல்கிடக்கும் - இந்த
மைந்தன் உயிரெழச் செய்யுமையா. 15

நெஞ்சிற் கிடத்தி வளர்த்தபிள்ளை - கண்ணில்
நித்திரை நீக்கியான் காத்தபிள்ளை
விஞ்சு தவத்தினில் பெற்றபிள்ளை - என்னை
விட்டுப் பிரிந்தறி யாதபிள்ளை. 16

பெற்ற வயிறு துடிக்குதையா - ஒரு
பிள்ளையும் வேறெனக் கில்லையையா
உற்ற உறவினர் இல்லையையா - என்மீ(து)
உள்ளம் இரங்கிட வேணுமையா. 17

வேறு

வாய்முத்தம் தாராமல்
மழலையுரை யாடாமல்
சேய்கிடத்தல் கண்டெனக்குச்
சிந்தைதடு மாறுதையா. 18

முகம்பார்த்துப் பேசாமல்
முலைப்பாலும் உண்ணாமல்
மகன்கிடக்கும் கிடைகண்டு
மனம்பொறுக்கு தில்லைஐயா. 19

நீடும் மதியினைப்போல்
நிலவெறிக்கும் செல்வமுகம்
வாடிநிறம் மாறியதென்
வயிற்றிலெரி மூட்டுதையா. 20

'பின்னி முடிச்சிடம்மா
பிச்சிப்பூச் சூட்டிடம்மா'
என்னும் மொழிகளினி
எக்காலம் கேட்பனையா! 21

நெஞ்சிற் கவலையெலாம்
நிற்காமல் ஓட்டும்அந்தப்
புஞ்சிரிப்பைக் காணாது
புத்திதடு மாறுதையா. 22

இட்டளைந்து கூழைஎனக்(கு)
இன்னமுதம் ஆக்கியகை
கட்டழிதல் கண்டுமனம்
கறங்காய்ச் சுழலுதையா. 23

சோலைப் பசுங்கிளிகள்
தோழனையும் காணுமல்
நாலு திசைகளிலும்
நாடித் திரியாவோ ? 24

அன்னப் பறவைகளென்
அழகனைப் பார்க்கவந்தால்
என்னமொழி கூறஇனி
என்நா எழுமையா ? 25

துள்ளிவிளை யாடஎன்றன்
சுந்தரனைத் தேடிவரும்
புள்ளிமான் கன்றினுக்கெப்
பொய்சொல்லி நிற்பனையா ? 26

சித்திரத் தேரும்
சிறுபறையும் கூடிஎனைப்
பித்தியிலும் பித்தி
பெரும்பித்தி ஆக்குதையா. 27

குஞ்சை யிழந்தகுயில்
கூவியழக் கண்டகனு
நெஞ்சை யறுக்குதையா
நினைப்பொழிய மாட்டாதையா. 28

கொம்படர்ந்த மாவின்
குலையடர்ந்த பூம்பிஞ்சு
வெம்பிவிழக் கண்டகனு
மெய்யாய் விடுமோஐயா ? 29

கழுத்திற் கயிறிறுக்கிக்
கன்றுவிழக் கண்டகனு
பழுத்துப் பலித்திடுமோ
பலன்மாறி நின்றிடுமோ ? 30

தாயாகி உள்ளம்
தருக்கி யிருந்ததுபோய்ப்
பேயாகி இன்று
பிணந்தூக்கி நிற்பேனோ? 31

இந்தப் பிறவியில்யான்
எப்பிழையும் செய்தறியேன்
எந்தவிதம் என்வயிற்றில்
இவ்விடியும் வீழ்ந்ததையா ? ” 32

வேறு

கன்றொ ழிந்தகா ராவின் கலக்கமொத்(து)
அன்ற ரற்றி அழுத அரிவையை
என்றும் எங்கணும் எவ்வுயி ருந்தொழ
நன்று கண்டமெய்ஞ் ஞானியும் நோக்கியே : 33

புத்தர் கூறுதல்

வேறு

“ தாயேநின் மனக்கவலை - ஒழிந்திடத்
தக்கநல் மருந்தளிப்பேன்
சேயினை எழுப்பிடுவேன் - விளையாடித்
திரியவும் செய்திடுவேன். 34

நாவிய கடுகுவேண்டும் - அதுவுமோர்
நாவுரி தானும்வேண்டும்
சாவினை அறியாத - வீட்டினில்
தந்ததா யிருக்கவேண்டும். 35

பக்கமாம் பதிகளிலே - சென்றுநீ
பார்த்திது வாங்கிவந்தால்
துக்கமும் அகலுமம்மா - குழந்தையும்
சுகமாக வாழுமம்மா.” 36

அவள் சென்று வந்து கூறுதல்

வேறு

என்றுரைத்த மொழிகேட்டவ் வேழை மார்பில்
ஏந்தியணைத் திடுமகனோ டூரில் எங்கும்
சென்றுகடு கிரந்துவெறுங் கைய ளாகித்
திரும்பிமுனி திருவடியைச் சிரமேற் கொண்டு: 37

வேறு

“புவியெலாம் நிறைந்த புகழோய்! புலவர்
கவியெலாம் நிறைந்த கருணையங் கடலே!
ஊரெலாம் அலைந்தேன் ஒவ்வொரு மனையும்
ஏறி யிறங்கினேன் என்குறை உரைத்தேன்.
ஏழை ஒருமகள் - ஏழை யலாதெவர்
ஏழைக் கிரங்குவர் - என்கதை கேட்டு
மார்போ டணைத்த மதலையைக் கண்டு
மாருக் கண்ணீர் வடிவதை நோக்கி

ஆறாத் துயரம் அடைந்தன ளிவளெனப்
பரிவு கொண்டென் பக்கம் நின்று
நாவிக் கொழித்த நாவுரிக் கடுகையும்
அளந்தென் மடியில் அளித்திட வந்தனள்.
பிள்ளை யென்றிடில் பேயு மிரங்குமே!
பெண்டிர் இரங்குதல் பேசவும் வேண்டுமோ?
யானும்,
இட்ட கடுகை ஏற்பதன் முன்னம்,
'தாயரே! நீவிர் தங்கும் மனையிது
சாவறி யாத தனிமனை தானோ?
தந்தை தாயர் தமக்கை தங்கை
மைந்தர் எவரும் மரித்தது முண்டோ?
உரைத்திடும்' என்றேன். உரைகேட் டவரும்,
'வினவிய தென்னை? விரிநீ ருலகில்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்றார்
இறந்தார் என்கை இயல்பே அம்மா!
காலையில் உதித்த கடுங்கதிர்ச் செல்வன்
மாலையில் தளர்ந்து மறைவது மிலையோ?
இம்மா நிலத்தில் இயற்கையின் குறிப்பெலாம்
அம்மா நீயும் ஆய்ந்திலை போலும்!
இவள், கணவனை யிழந்த கைம்பெண் அம்மா
இவள், தந்தையை யிழந்த தமியள் அம்மா
இவள், மைந்தனை யிழந்த வறியவள் அம்மா
இவள், தமையனை யிழந்த தங்கை யம்மா
இவள், மாமனை யிழந்த மருகி யம்மா

இவள், அன்னையை யிழந்த அகதி யம்மா !
இறந்தவர் எண்ணிலர் இருப்பவர் சிலரே.
பிறந்தவர் இறப்பதும் இறந்தவர் பிறப்பதும்
உலகின் இயற்கை. ஒழித்தலும் எளிதோ ?'
எனவாங்கு,
தேறுதல் மொழிகள் தெரிந்தவை கூறிக்
கண்முன் சான்றுகள் காட்டி நின்றனர்.
யானும்,உன்
கட்டளை யுணர்ந்து கவலை கைம்மிக
மற்றொரு வீட்டின் வாயிலிற் சென்றேன்.
அங்குளார்,
கடுகினை யளந்து கட்டிவைத்(து), 'அம்மா !
உழுதவர் இந்நாள் உலகி லில்லை.
விதைத்தவர் அன்றே விண்ணுல கெய்தினர்.
காத்தவர் காலமும் கழிந்து விட்டது.
அடிமையு மிறந்துநாள் ஐந்தா றாகுது.
காலனை எவரே கடக்க வல்லவர் ?'
என்று கூறினர். என்செய ஐயா ? 38

வேறு

ஐயமிடு மனைகளிலே மரண மென்றும்
அறியாத மனையேது மில்லை யில்லை
வையகத்தில் பிறப்புளதேல் இறப்பு முண்டு
மாற்றரிய விதியிதுவென் றுணர்ந்து கொண்டேன்

கையமர்ந்த மகவினையும் கானி விட்டேன்
கண்விழியாப் பிணம்வைத்துக் காப்ப துண்டோ
செய்யதிரு வடிபணிந்து போற்றி இந்தச்
செய்தியினைத் தெரிவிக்க வந்தேன்" என்றாள். 39

### புத்தர் தேற்றுதல்

மங்கைமனத் தெளிவையெலாம் உரைத்த உண்மை
வார்த்தையினால் அறிந்தவளை நோக்கி "அம்மா!
எங்குமிலாப் பொருள்தேடச் சென்று நீயும்
யான்நினைத்த பொருளதனைப் பெற்று வந்தாய்
தங்குமிந்த உலகியற்கை மாறா தம்மா
தனயனைநீ எண்ணிமனம் தளர வேண்டாம்
அங்கமெலாம் வாயாக அழுதிட் டாலும்
அவனெழுந்து நின்துயரம் அகற்ற லுண்டோ? 40

### வேறு

பசும்புல் லடர்ந்து பன்மலர் விரிந்து
விசும்பு மண்ணில் விழுந்த தோவெனக்
கண்டவர் ஐயுறு காட்சிய தாகி
மண்டல வளமெலாம் மலிந்து தங்குமிப்
புலத்தின் வழிமன் புரமது சென்று
கொலைக்கள வேள்விக் குண்டினுக் கிரையாய்
ஆவதை அறியும் அறிவிலா ஆட்டினைப்

பாவிக ளோட்டும்இப் பரிசு போல,
ஆசையும்,
இன்ப வழியில் இதமா யிழுத்துத்
துன்ப மென்னும் தொடக்கில்
மன்பதை யுலகை மாட்டி விடுமே. 41

வேறு

இம்மா நிலத்திவ் வுண்மையெலாம்
யானும் அறியச் செல்கின்றேன்
அம்மா நீயும் உன்மகனை
அடக்கம் செய்போ" என்றுரைத்தான்
வெம்மா வினையின் வேரறுத்து
விளங்கும் ஞான ஒளிகண்டிங்(கு)
எம்மா தவருந் தொழுதேத்த
எழிலார் கமலத் தெழுந்தோனே. 42

## 12. இலக்கிய பஞ்சகம்

வள்ளுவர் தந்த திருமறையைத் - தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே - என்றும்
உத்தம ராகி ஒழுகுவமே. 1

பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து - கம்பன்
பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே - நூலின்
நன்னயம் முற்றுந் தெளிகுவமே. 2

தேனிலே ஊறிய செந்தமிழின் - சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும் - நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே. 3

கற்றவர் மெச்சும் கலித்தொகையாம் - இன்பக்
கற்பனை சேருங் களஞ்சியத்தை
முற்ற அளந்து தெரிவோமே - காதல்
மூழ்கும் துறைகண்டு வாழ்வோமே. 4

பண்டை இயற்கை வளங்களெல்லாம் - பத்துப்
பாட்டின் வளத்தினிற் கண்டறிந்து
மண்டல மெங்கும் கமழும் அருந்தமிழ்
வாசம் நுகர்ந்து மகிழ்வோமே. 5

---

## 13. ஔவை

ஔவைக் கிழவி நம்கிழவி
அமுதின் இனிய சொற்கிழவி
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி. 1

நெல்லிக் கனியைத் தின்றுலகில்
நீடு வாழும் தமிழ்க்கிழவி
வெல்லற் கரிய மாந்தரெலாம்
வியந்து போற்றும் ஒருகிழவி. 2

கூழுக் காகக் கவிபாடும்
கூனக் கிழவி அவளுரையை
வாழும் வாழ்வில் ஒருநாளும்
மறவோம் மறவோம் மறவோமே. 3

## 14. பாரதி பாடலும் பட்டிக்காட்டானும்

[பட்டிக்காட்டான் பட்டணம் போனான்; பாரதி பாடலைப் பண்ணொடு கேட்டான்; அதில் அவன் மனம் ஈடுபட்டது; சில தினங்களில் ஊருக்குத் திரும்பினான்; அங்கே தன் நண்பர்களுக்கு அப்பாடல்களின் அருமைபெருமைகளை உணர்ந்தமட்டில் விவரித்துக் கூறுகிறான்.]

வெண்பா

உள்ளக் கருத்தையெலாம் உள்ளபடி யானிந்த
வெள்ளைக் கவியில் விளம்பினேன் - தெள்ளுதமிழ்
வெண்பாப் புலியும் விகட கவியுமெனைக்
கண்பார்த்துக் காத்தல் கடன்.

---

பாட்டுக் கொருபுலவன் பாரதியடா - அவன்
பாட்டைப் பண்ணொடொருவன் பாடினனடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா - அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாயடா. 1

சொல்லுக்குச் சொல்லழகும் ஏறுமேயடா - கவி
துள்ளும் மறியைப்போலே துள்ளுமேயடா
கல்லும் கனிந்துகனி யாகுமேயடா - பசுங்
கன்றும்பால் உண்டிடாது கேட்குமேயடா. 2

குயிலும் கிளியும்பாட்டில் கூவுமேயடா - மயில்
குதித்துக் குதித்துநடம் ஆடுமேயடா
வெயிலும் மழையுமதில் தோன்றுமேயடா - மலர்
விரிந்து விரிந்துமணம் வீசுமேயடா. 3

அலைமேலே அலைவந்து மோதுமேயடா - அலை
அழகான முத்தையள்ளிக் கொட்டுமேயடா
மலைமேலே மலைவளர்ந் தோங்குமேயடா - அதை
வனங்கள் அடர்ந்தடர்ந்து சூழுமேயடா. 4

விண்ணி லொளிருமீன்கள் மின்னுமேயடா - விண்ணில்
விளங்கும் மதிநிலவு வீசுமேயடா
கண்ணுக் கினியசோலை காணுமேயடா - அதில்
களித்திள மான்கள்விளை யாடுமேயடா. 5

தேனும் தினையும்பாவில் உண்ணலாமடா - மிகத்
தித்திக்கும் முக்கனியும் உண்ணலாமடா
கானக் குழலிசையும் கேட்கலாமடா - ஊடே
களிவண்டு பாடுவதும் கேட்கலாமடா. 6

நாட்டு மொழியுமவன் பாட்டினிசையில் - மிக்க
நல்ல கற்கண்டினிமை சொட்டுமேயடா
ஏட்டிலிம் மந்திரந்தான் கண்டவருண்டோ - ஈதவ்
ஈசன் திருவருளென் றெண்ணுவாயடா. 7

உள்ளந் தெளியுமொரு பாட்டிலேயடா - மிக்க
ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலேயடா
கள்ளின் வெறிகொளுமோர் பாட்டிலேயடா - ஊற்றாய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா. 8

வேறு

‘ கரும்புத் தோட்டத்திலே’ - எனுங்கவி
காதைச் சுடுகுதடா
இரும்பு நெஞ்சமுமே - நீராய்
இளகி யோடுதடா. 9

‘ செந்தமிழ் நாட்டின்’ - முதன்மொழி
செவியிற் சேருமுன்னே
அந்தமில் லாமல் - உள்ளத்தில்
அமுத மூறுதடா. 10

‘ பாப்பாப் பாட்டிலே’ - நெஞ்சைப்
பறிகொடுத்தேனடா
சாப்பா டேதுக்கடா - சீனி
சர்க்கரை ஏதுக்கடா. 11

அன்னை ‘ பாஞ்சாலி - சபதம்’
அறைதல் கேட்டேனடா
முன்னைக் கதையெல்லாம் - கண்ணின்
முன்ந டந்ததடா. 12

‘ வந்தே மாதர’த்தைப் - பாடவே
வாய்தி றந்தவுடன்
சந்தேக மில்லை - ஒருபுதுச்
சக்தி தோன்றுதடா. 13

'எங்கள் நாடு'தா ன் - பூபாள
இசையி லேறிடுமேல்
கங்கை யா றுபோல் - உள்ளத்தில்
களிப்பொ ழுகுதடா. 14

'சின்னஞ் சிறுகிளி' - கனவில்
தினமும் கா ணுதடா
கன்னங் குழியவே - முத்தமும்
கனிந்த ளிக்குதடா. 15

'கண்ணன் காதலன்' - எனக்கொரு
களிய முதமடா
விண்ண முதமுமே - அதனை
வெல்ல மாட்டாதடா. 16

'குயிலின் பாட்டி'லே - காதல்
கொப்பு ளிக்குதடா
செயல்ம றந்தேனடா - லாகிரி
சிரசிற் கொண்டதடா. 17

'சுதந்திரப் பாட்டில்' - உள்ளம்
துடிது டிக்குதடா
பதமெ ழும்புதடா - கையும்
படப டக்குதடா. 18

தொண்டு செய்யுமடிமை' - என்னும்
சுடுச ரம்ஓடி
மண்டையைத் தாக்குதடா - நெஞ்சம்
மடியப் பாயுதடா. 19

பெண்டு பிள்ளைகளின் - பெருமை
பெரித றிந்தேனடா
சண்டைகள் செய்ததெல்லாம் - எண்ணித்
தலைக விழ்ந்தேனடா. 20

ஏழை துயரெலாம் - அவனும்
எடுத்த டுக்கையிலே
மூளை கலங்குதடா - விம்மி
மூச்சும் முட்டுதடா. 21

பாவின் நயமெலாம் - யானும்
பகர வல்லேனோ
ஆவின் பாற்சுவையை - நாழி
அளந்து காட்டிடுமோ? 22

# 15. அன்பின் வெற்றி

[தமிழ்நாட்டிலுள்ள ஆண்டாள் சரித்திரம் போலவே வடநாட்டிலே மீராபாய் என்னும் பக்தையின் சரித்திரம் வழங்கிவருகிறது. ஆண்டாள் பாடிய பாசுரங்களை யொப்ப ஹிந்திமொழியில் மீராபாய் பாடிய பாடல்கள் பிரபலமாக வழங்கிவருகின்றன. கீழ்வரும் பாடல்கள் மீராபாயின் பாடல்களைத் தழுவிப் பாடப்பட்டனவாகும்.]

க

[ராஜபுதனத்திலுள்ள ஒரு சிற்றரசனுக்குப் புதல்வியாக மீராபாய் 1601-ம் ஆண்டில் பிறந்தாள். சிறு குழந்தையாக இருந்தபோது அவள் விளையாடிக்கொண்டிருந்த கிருஷ்ண விக்கிரகத்தைச் சுட்டி 'இவரே உன் மாப்பிள்ளை' என்று தாயார் விளையாட்டாகச் சொன்னதைக் கருத்திலே கொண்டு, மீராபாய், கண்ணனையே தன் நாயகனாக வரித்து, அவனிடத்திலே அளவற்ற அன்பு செலுத்திவந்தாள். சாது ரவிதாஸ் என்ற ஒரு பக்தர் பூஜித்துவந்த கிரிதரகோபால விக்கிரகத்தைப் பெற்று, அதை அன்போடு பூஜித்து ஆடியும் பாடியும் பஜனை செய்துவரும் நாளில், கிரிதரகோபாலன் தன்னை மணந்ததாக ஓரிரவிலே கனாக்கண்டு, பொழுது புலர்ந்தபின் தாயினிடம் தன் கனவைக் கூறுகிறாள் :]

அன்னையே தாயே அழகன் ஜகதீசன்
என்னை மணக்க இரவில் கனாக்கண்டேன்
நென்னல் இரவுகண்ட நீண்ட கனாமுழுதும்
உன்னை ஒளியாமல் உரைக்கின்றேன் கேளம்மா. 1

ஆல மரங்கள் அடர்ந்து வளர்ந்தவொரு
சோலையும் அந்தச் சோலை நடுவாக
நீல மணிநீர் நிறைந்த குளமொன்றும்
காலை எழுமுன் கனக்கண்டேன் அம்மாநான். 2

நங்கையர் கூடி நலங்கனிந் தென்மீது
குங்குமம் பூசிக் குளிர்சந் தனம்பூசி
மங்கள மாக மஞ்சள் மிகப்பூசி
அங்குநீ ராட்டக் கனக்கண்டேன் அம்மாநான். 3

தோரணம் நாட்டித் துழாய்மாலை தொங்கவிட்டுப்
பூரண கும்பம் பொலிவாக முன்வைத்துத்
தாரணி போற்றத் தகுமோர் புரோகிதர்வந்(து)
ஆரணம் ஓதக் கனக்கண்டேன் அம்மாநான். 4

செய்தற் கரிதாம்அத் திருமணப் பந்தரின்கீழ்
வைய மளந்து வளர்ந்த வடிவழகன்
ஐம்பத் தறுகோடி ஆட்கள் நடுவேஎன்
கையைப் பிடிக்கக் கனக்கண்டேன் அம்மாநான். 5

முன்செய் தவப்பயனால் முகுந்தன் கிரிதரனே
அன்பு நிறைந்திடுமென் அகமுடையா னாகவந்தான்
இன்ப மணமும்நேற் றிரவிலே யானதம்மா
துன்பம் ஒழிந்ததம்மா சுகமும் பிறந்ததம்மா. 6

உ

[மீராவின் அழகையும் பாட்டையும்பற்றிய புகழ் நாடெங்கும் பரவிற்று. மேவாட் மஹாராணாவின் மூத்த குமாரனை போஜராஜன் அவள் புகழைக் கேட்டு, அவளைப் பார்க்கவும்

அவள் பாட்டைக் கேட்கவும் விரும்பி, தன் தலைநகராகிய சித்தோரினின்றும் புறப்பட்டு மாறுவேடத்தோடு சென்று, அவளுடைய ஹரிபஜனைக்காகக் காத்திருந்தான். எளிய உடையோடு தோன்றி மீராபாய் நந்தகுமாரன் புகழைப் பாடுகிறாள் :]

வேறு

நித்தம் நித்தம் நீராடில்
நெடுமால் அருளைப் பெறலாமேல்
தத்தும் தவளை மீன்களும்அத்
தனிப்பே றடைய வேண்டாவோ ? 7

காயும் கனியும் அருந்துவதால்
கண்ணன் கழலைப் பெறலாமேல்
ஆயும் கிளைவாழ் குரங்குகளும்
அப்பே றடைய வேண்டாவோ? 8

வாடும் புல்லைத் தின்பதனால்
மாயன் கிருபை பெறலாமேல்
ஆடும் மாடும் மான்களும்அவ்
அரும்பே றடைய வேண்டாவோ ? 9

பெண்ணின் இன்பம் துறப்பதனால்
பெருமான் பாதம் பெறலாமேல்
மண்ணில் எல்லா அலிகளும்அம்
மாபே றடைய வேண்டாவோ ? 10

பாலை நிதமும் குடிப்பதனால்
பரமன் அடியைப் பெறலாமேல்
ஞால மீது சிசுக்களும்அந்
நற்பே றடைய வேண்டாவோ? 11

உண்மை யன்பை உடையவரே
உலகை யளந்த பெருமானை
அண்மை யாகக் கண்டிடுவர்
அல்லார் காணார் காணாரே. 12

௩

[மீராவின் பாட்டிலும் அவள் அழகிலும் ஈடுபட்ட போஜராஜன் அவளை மணந்து தன் நகருக்கு அழைத்துச் செல்கிறான். கிரிதரகோபால விக்கிரகத்தையே துணையாக உடன்கொண்டு செல்கிறாள் மீரா. சக்திவழிபாட்டைக் குல தருமமாகவுடைய பரம்பரையில் வந்த அவளது மாமியார் மீரா செய்யும் விஷ்ணு பூஜையைப் பொறுக்காது, விக்கிரகத்தைப் பிடுங்கிஎறிகிறாள். அப்போது, வருத்தத்தோடு மீரா பாடுகிறாள் :]

வேறு

கண்ணனைக் காணாமல் காதல்கைம் மீறியது
பெண்ணின் நலமிழந்தேன் பெரும்பித்தி யாகிவிட்டேன்
புண்ணைப் பொறுத்தவரும் புண்செய் தவருமல்லால்
மண்ணில் அதன்வருத்தம் மற்றோர் அறிவாரோ? 13

நஞ்சினை யுண்டு நலியு மவர்போல
விஞ்சு மதன்கொடுமை வேறெவரும் காண்பாரோ

நெஞ்சத் துயரமெலாம் நீங்க முகில்வண்ணன்
அஞ்சல் அளித்தென்னை ஆட்கொள்வ தெந்நாளோ? 14

அன்பர் படுக்கையுமவ் வாகாய மீதேயாம்
என்றன் படுக்கையுமிங் கீட்டிகளின் மேலேயாம்
வன்பில் விதிஎனக்கு வகுத்தவழி ஈதானல்
இன்ப நலமெல்லாம் எவ்வா றடைவதம்மா. 15

நீடும் மனத்துயரை நீக்கும் மருத்துவனை
நாடும் நகர்ப்புறமும் நான்கு திசையுமுள்ள
காடும் மலையிடமும் கானற் பெருவெளியும்
தேடி யலைந்தலுத்தேன் தெரியநான் கண்டிலனே. 16

தள்ளற் கரியாள் தமியள் இவளென்றென்
உள்ளங் கவர்ந்த ஒருவன் எதிர்நின்று
வள்ளத் தமுதம் வழங்க வரினல்லால்
எள்ளத் தனையும் என்துயரம் நீங்கிடுமோ? 17

௺

[மீராவின் துயரத்தைக் கண்ட போஜராஜன் அவள் விருப்பத்தை நிறைவேற்றக் கருதி அரண்மனையிலேயே கிரிதாரிக்கு ஒரு கோவில் கட்டுவித்தான். கும்பாபிஷேக தினத்தன்று மீரா வந்து பஜனைசெய்கிறாள் :]

வேறு

வானெங்கும் மழையிருண்டு கவிந்த தன்பர்
வந்தின்று மனையகத்தே தங்கு கின்றார்
ஆனசிறு சிறுதுளியாய்த் தூற்றித் தூற்றி
ஆனந்தப் பேரேரி நிறைந்த தம்மா

ஈனமறப் பலநாளின் பிறகிந் நாளே
　என்விழிகள் அவர்முகத்தைக் கண்ட அம்மா
யானுமுளம் பித்தேற இன்னும் கைவிட்(டு)
　ஏகுவரோ என்றுமிக நடுங்கி னேனே. 18

(௫)

[ஹரிபஜனையில் ஈடுபட்டிருந்த மீரா தன் நாயகனிடம் அன்பு செலுத்த இயலவில்லை. இதனால் போஜராஜன் கவலையுற்றிருக்கிறான். இதனிடையில், ஒருநாள் மீரா நைவேத்தியத்தை விக்கிரகத்தின்முன் வைத்து அதை உண்ணும்படி வேண்டுகிறாள் :]

விதம்விதமாய்ப் பண்டங்கள் செய்து வைத்தேன்
　விண்ணமுத மெனக்கறிகள் சமைத்து வைத்தேன்
இதமுறவே என்மீதில் இரங்கி நீஇவ்
　இராஜவிருந் துண்டருள வேண்டு மையா
பதமலரை முடியணிந்து பணிந்து நின்றேன்
　பகவானே கிரிதரனே பாரில் என்றும்
சதமெனவே நம்பிவரும் அடியா ருள்ளம்
　சலியாது காத்தாளும் தேவ தேவே. 19

சா

[விக்கிரகம் உண்ணாதிருப்பதைக் கண்டு மீரா வருந்தி மெய்சோர்ந்து கிடக்க, விக்கிரகம் பிறகு நைவேத்தியத்தை உண்கிறது. கண்ட மீரா ஆனந்தமாய் விக்கிரகத்தோடு பேசி விளையாடிக்கொண்டிருக்கிறாள். இதைக் கண்ட போஜராஜன் ஐயுற்று 'யாரிடம் பேசுகிறாய்' என்று அவளை வினவ, அவள் கிரிதரனே தன் நாயகன் என்று கிரிதரனைக் காட்டி வருணிக்கிறாள் :]

வேறு

நந்த குமரன் வடிவழகை
 நானும் கண்ட நாள்முதலா
இந்த உலகம் மேலுலகம்
 இரண்டும் வேம்பே ஆனதம்மா
முந்து மயிலின் தோகையவன்
 முடியின் மணிபோல் ஒளிவிடுமே
சந்தத் திலகம் ஈரேழு
 தலமும் அடிமைகொண்டிடுமே. 20

மீனை வண்டை மானையவன்
 விழிகள் மறக்கச் செய்திடுமே
கானிற் படரும் கோவையும்அக்
 கனிவா யிதழைக் காட்டிடுமே
ஈன மறுநல் மாதுளைவித்(து)
 இலங்கும் பல்லுக் கிணையாமே
யானம் மூக்குக் குவமையினை
 எங்கே கண்டு கூறுவனே. 21

அம்பொற் குழைகள் மிசையாட
 அரைஞாண் சதங்கை இசைபாட
நம்பன் கண்ணன் அழகியவோர்
 நடனுய் வந்து நடிக்கின்ருன்
உம்பர் தொழும்அவ் வுத்தமனின்
 உவமை காணு உறுப்பழகுக்(கு)
இம்பர் எளியேன் அர்ப்பணமாய்
 என்னை இன்று வைத்தேனே. 22

எ

[இதைக் கேட்டு போஜராஜன் கவலையிலாழ்கிறான். தேவி அவன் கனவிலே தோன்றி, காலக்கிரமத்தில் மீரா அவனிடம் அன்புடையவளாவாளென்றும் அதுவரையில் பொறுத்திருக்கவேண்டுமென்றும் கூறுகிறாள். அவன் ஒருவாறு தேறி, தானும் விஷ்ணுசேவையில் ஈடுபடுகிறான். இதற்கிடையில், மீரா மதுயாமினிவிரதத்தை மேற்கொண்டு தெருக்களில் பஜனை செய்யத் தீர்மானிக்கிறாள். அவள் மைத்துனியாகிய ஊதாபாய் வெகுண்டு தடுக்கவும் மீரா கேட்காமல் உறுதியாயிருந்து, பாடுகிறாள் :]

வேறு

என்றுமே கிரிதரனை யன்றி வேறிங்(கு)
ஏதுமொரு துணையறியேன் எழுந்து முன்னம்
குன்றுயர்த்த கோமானே வணங்குந் தெய்வம்
குலப்பெருமை குடிப்பெருமை எல்லாம் விட்டேன்
நன்றுதருந் திருக்கூட்டம் நாடிச் சார்ந்தேன்
நாணிழந்தேன் எவரையும்நான் மதிக்க மாட்டேன்
துன்றுகண்ணீர் விட்டன்புக் கொடிவ ளர்த்தேன்
சுகமென்னுங் கனியையது தந்த தம்மா. 23

பத்தரெலாம் இதுகண்டு மனம கிழ்ந்தார்
பாமரரே அறியாது வருந்தி நின்றார்
சித்தமுமே மீராநின் அடிமை யானாள்
நீஅவளை ஆண்டருள வேண்டு மையா

அத்தியிடர் காத்தபெருங் கருணை யாளா
அரவணைமேல் துயில்கொள்ளும் ஆதி நாதா
சித்தமிசை குடிகொண்ட ஞான ரூபா
தேவகியின் திருமைந்தா தேவ தேவா. 24

அ

[மீராவின் செயல்களால் வெறுப்புற்ற போஜராஜன் அவளை நாட்டைவிட்டு வெளியே அனுப்பிவிடுகிறான். காட்டின் வழியே மீரா பாடிக்கொண்டே செல்கிறாள் :]

எத்திசையும் மேகங்கள் எழுந்து மின்னி
இடிமுழங்கிப் பெருமழையும் பெய்யக் கண்டோம்
தத்திவரும் குளிர்வாடை வீசக் கண்டோம்
தவளையொடு சாதகமும் கத்தக் கண்டோம்
சித்தமகிழ் பூங்குயிலும் கூவக் கண்டோம்
ஸ்ரீநந்த குமரன்வர இன்னுங் காணேம்
பத்தியொடு பணிகின்றேன் கிரித ராவுன்
பாதமலால் வேறுதுணை அறியே னையா. 25

க

[காட்டுவழியே சென்று தன் தந்தையின் இல்லமடைந்து, அங்கிருந்து தீர்த்தயாத்திரை செய்கிறாள். கூர்ஜர தேசத்தில் சாது ரவிதாசரைக் கண்டு பணிகிறாள். கணவனை வழிபடுமாறு அவர் கூறிய அறிவுரைகள் பயன்பெறவில்லை. அவர் முன்னிலையில் மீரா பகவானைத் துதிக்கிறாள் :]

24. அத்தி - யானை; கஜேந்திரன்.

காசியிலே இறப்பதனால் பயனென் றில்லை
காஷாயம் தரிப்பதொரு வேஷ மேயாம்
ஆசையினை வேருடனே அறுக்க வேண்டும்
அழியுமுடல் அபிமானம் அகற்ற வேண்டும்
பேசுலகில் அழியாத பொருளொன் றில்லை
பெரியவர்க்கும் சிறியவர்க்கும் மரண மொன்றே
பாசமுறு சம்சாரம் அந்தி யோடு
பறந்தகலும் பறவையினை யாட்டே யாமால். 26

மூத்திநெறி நாடாது யோகி யாகி
மூச்சடக்கி இருப்போர்கள் பின்னும் பின்னும்
இத்தரையில் வந்துபிறந் திறத்தல் திண்ணம்
இவ்வுண்மை எந்நாளும் பொய்ப்ப தில்லை
பத்தியொடு கைகூப்பிப் பணிகின் றேன்உன்
பாதமலால் வேறுதுணை யொன்று மில்லை
நித்தியனே யமபாசம் அண்டா தென்னை
நீஆண்டு காத்தருள வேண்டு மையா. 27

கo

[ரவிதாசர் அவள் பாடிய பாடலின் கருத்தை அவளுக்கு விளக்கிக் கூறி, ஸ்வதர்மத்தைக் கடைபிடிப்பதே கடமை என்று மீண்டும் போதிக்கிறார். அவள் அதை உணர்ந்தும், அவள் மனம் சம்சாரபந்தத்தில் கட்டுப்படவில்லை. கண்ணனுடைய பிரிவை எண்ணி வருந்திப் பலமுறை பாடுகிறாள்:]

இரவுபக லெப்பொழுதும் உன்னைக் காண(து)
இருக்கமனம் வருவதில்லை ஐயா நீதான்
வரும்வழியில் முகம்வைத்து மேடை நின்று
மாலையாய்க் கண்ணீரும் வடித்து நிற்பேன்

உரியகுலம் குடியாவும் மாயை என்னும்
உண்மையினை உள்ளபடி உணர்ந்து கொண்டேன்
குருமொழியில் மனப்பேயை அடக்கி உன்றன்
குரைகழலே தஞ்சமெனக் கும்பிட் டேனே. 28

கண்ணுமுனைக் காணுமல் கலக்கங் கொள்ளும்
கணமேனும் உள்ளத்தில் அமைதி யில்லை
உண்ணுதற்கும் பசியில்லை உறக்க மில்லை
ஓரிரா ஓர்யுகமாய்க் கழியு தையா
நண்ணிளனை வாள்போல அறுக்கும் இந்த
நலிவையெலாம் யாவரிடம் சொல்லி நிற்பேன்
எண்ணிஎண்ணி நைந்துருகும் என்னை யாள
எந்நாளிங் கெழுந்தருள்வாய் எம்பி ரானே. 29

கக

[ஒரு முறை சமாதிநிலையில் கண்ணனுடைய தரிசனம் கிடைக்கப்பெற்றபோது பாடுகிறாள் :]

வேறு

கார்முகிலின் மேனிபெறும் நந்தகுமரா - என்றன்
கண்களிலே குடியிருப்பாய் நந்தகுமரா
மார்பினிலே வைஜயந்தி மாலையணியும் - உன்றன்
வடிவினிலே மயங்கிநின்றேன் நந்தகுமரா
ஆரமுத மூறுமிதழ் மீதிலமரும் - குழல்
அழகினுக்கோர் அளவுமுண்டோ நந்தகுமரா

சேருமணி யாடரைஞாண் பாதசலங்கை - ஒலி
செய்திடவே வந்தருள்வாய் நந்தகுமரா
பாரும்விண்ணும் பணிந்துதொழும் நந்தகுமரா-என்றும்
பத்தரையாள் ஈசன்நீயே நந்தகுமரா. 30

கஉ

[சமாதியில் கண்ட கண்ணன் திருமுகம் மீராவுக்குத் தன் கணவனை ஞாபகப்படுத்திற்று. அப்பொழுதே தன் கடமையை உணர்ந்து சித்தோருக்குத் திரும்பினாள். பத்து வருஷகாலம் போஜராஜன் அவளோடு கூடி இல்லறம் நடத்தியபின், போருக்குச் சென்று, போரில் உயிர்துறந்தான். அவன்தம்பி உதயசிம்மன் ராணாவானான். மீராவின் விஷ்ணு பக்தியைக் கண்டு வெறுப்படைந்து அவளைக் கொல்லமுயன்றான். அவன் செய்த முயற்சிகள் பயனற்றுப்போகின்றன. கிரிதரனுடைய கருணையை நினைந்து மீரா பாடுகிறாள் :]

வேறு

தணியா அரவின் கூடையொரு
சாளக் கிராமம் ஆயிடுமே
அணியார் கிண்ணத் தாம்விஷமும்
அமுதாய் இனிமை தந்திடுமே
திணியார் சூலப் படையுமலர்ச்
சேக்கை யாக மாறிடுமே
மணியார் வண்ணன் அடியருளம்
மலையா தென்றும் காப்பானே. 31

கந

[மறுபடியும் நாட்டைவிட்டுச் சென்ற மீரா இறுதியில் பிருந்தாவனத்துக்கு வந்து சேருகிறாள். அங்குள்ள பழைய கண்ணன் கோவில் அடைத்துக் கிடக்கிறது. அது திறக்கச் செய்ய ஒருவராலும் இயலவில்லை. மீராவே அது திறக்கும் படி பாடவல்லவள் என்பதை யுணர்ந்த ஒருவர் அவளைக் கோவிலுக்கு அழைத்துச் செல்ல, அவள் அங்கே பாடுகிறாள்:]

வேறு

ஆளடிமை யாகவெனை அமர்த்திக் கொள்வாய்
அழகாக நந்தவன வேலை செய்வேன்
நாள்விடிய எழுந்துன்னை நமஸ்க ரிப்பேன்
நலமிகவே நின்கதைகள் பாடி நிற்பேன்
மீள்கூலி யாயுனது காட்சி போதும்
மேற்செலவுக் குன்நாம செபமே போதும்
நீள்செல்வம் பத்தியலால் வேறொன் றில்லை
நித்தியனே நின்மலனே நிகரில் லோனே. 32

பொருவரிய யோகியர்மா தவத்தின் மிக்கோர்
புள்ளுயர்த்தோன் அடிமறவாப் பத்திச் செல்வர்
பெருமைதரு மாபிருந்தா வனத்தில் இன்று
பேறுபல பெற்றிடவே கூடி நின்றார்
அருமறைக்கும் எட்டாத ஆதி நாதன்
அரையாமத் தன்புநதிக் கரையில் வந்து
கருதரிய கண்காட்சி தருவான் சற்றும்
கலங்காம லிருப்பாய்என் ஏழை நெஞ்சே. 33

கச

[பாட்டு முடியவும் கதவு திறக்கிறது. கண்ணனைத் ரிசித்துக்கொண்டு மீரா அங்கே இருந்துவருகிறாள். அவள் ரிவினால் சித்தோர் ராஜ்யம் க்ஷீணமடைந்தது எனக்கருதிய ராணா அவளை அழைத்துவருமாறு பக்தர்களை அனுப்பு கிறான். அவள் திரும்பிச் செல்ல மனமின்றி, தன்னை ஏற்றுக் கொள்ளும்படி கண்ணனை வேண்டுகிறாள் :]

வேறு

என்றும் எனைநீ ஏற்றுக்கொள்
எனக்குத் துணைவே றெவருமில்லை
கன்று பசியும் எனக்கில்லை
கண்ணில் உறக்கம் சிறிதுமில்லை
துன்று முடலும் குறுகிஒரு
துரும்பாய்த் தேய்தல் கண்டிலேயோ
நன்று தருவாய் எனைக்கூடி
நடுவிற் பிரியா தருள்வாயே. 34

கரு

[விக்கிரகம் இரண்டாய்ப் பிளந்து மீராவைத் தன்னுள் க்கிக்கொண்டது. இவ்வாறு மீரா தன் 67-ம் வயதில் மபதம் அடைந்தாள்.]

## 16. இரக்ஷகர்

அன்னியர் ஆட்சியிலே - யூதர்
அடைந்த துன்பமெலாம்
பன்ன லெளிதோவம்மா - நினைக்கில்
பதைக்கு துள்ளமம்மா. 1

நீசர் சண்டாளர் - சற்றும்
நெஞ்சினில் அச்சமில்லார்
ஈச னுக்குரிய - பீடத்தில்
ஏறி யிருந்துகொண்டார். 2

உண்ண உணவுமின்றி - உழைப்புக்(கு)
ஓய்வொரு நாளுமின்றிக்
கண்ணீர் சொரிந்துநின்றூர் - யூதர்
கலங்கித் தட்டழிந்தார். 3

அல்லும் பகலும்மே - துயரில்
ஆழ்ந்து மூழ்கிடினும்
நல்ல காலம்வரும் - வருமென
நம்பி நாள்கழித்தார். 4

“ இருளொ துங்கிடவே - கதிரோன்
எழுந்து கிளர்வதுபோல்
அருளி றைமகனும் - நம்மை
ஆள வந்திடுவான். 5

உண்மை யொளிவீசும் - அப்போ(து)
உலகில் நீதியோங்கும்
அண்மையி லேநாமும் - நன்மை
அடைவோம்” என்றிருந்தார். 6

“ அருங்கு ணச்செல்வன் - புவியில்
அவத ரித்திடுநாள்
நெருங்கி வந்ததிதோ - மிகவும்
நெருங்கி வந்ததிதோ. 7

வருவீர் வருவீரே - எவரும்
வருவீர்” என்றுநலம்
மருவு காலிலிமா - நகரிலோர்
வார்த்தை கேட்டதம்மா. 8

சின்னாள் சென்றிடவோர் - அற்புதத்
தீர்க்க தரிசிதோன்றி
எந்நா டும்அறியச் - சிங்க
ஏறுபோ லேஎழுந்து : 9

“ விடுவீர் எப்பொருளும் - விடுவீர்
விட்டுவந் தென்வழியைத்
தொடர்வீர் தொடர்வீரே ” - என்று
சொல்மு ழக்கஞ்செய்தான். 10

பூமியை ஆளுதற்குத் - தேவ
புத்திரன் வந்துதித்தான்
க்ஷேமம் பிறக்குமென - யூதர்
சிந்தை களித்திருந்தார். 11

“ ஈசன் நாமத்தை - அனுதினம்
ஏத்திப் புகழவேண்டும்
தாச தாசனைப் - பணிந்து
தருமம் காக்கவேண்டும். 12

உன்னுயி ரைப்போல - இந்த
உலகில் உயிரையெல்லாம்
மன்னும் அன்பொடுநீ - என்றும்
மதித்து வாழவேண்டும். 13

மேவும் எனதாட்சி - அந்த
விண்ணுல காட்சியேயாம்
ஏவல் இடம்பொருளில் - எனக்கிங்(கு)
ஏதும் மயக்கமில்லை. ” 14

என்னும்இப் பொன்னுரைகள் - நாட்டில்
எங்கும் எடுத்துரைத்தான்
மன்னுயிர் காத்திடவே - மண்ணில்
வந்து பிறந்தமகன். 15

ஏழை படும்பாட்டை - அவனும்
எண்ணி எண்ணிநைவான்
ஏழையோ டேழையாக - உலகில்
எங்கும் அலைந்திடுவான். 16

கால்முடம் நீக்கிடுவான் - குருட்டுக்
கண்களும் காணவைப்பான்
சாலப் பெருநோயும் - கையால்
தடவிப் போக்கிடுவான். 17

தேச விவகாரம் - அவனும்
செவியிற் கொள்வதில்லை
காசு பணத்தையவன் - என்றுமே
கைகளால் தொட்டதில்லை. 18

பக்கத்தில் உள்ளவர்கள் - தேச
பக்தர் புரோகிதர்கள்
மிக்க பழிசுமத்தி - அவனுளம்
வெந்திடச் செய்துவிட்டார். 19

“ யூதரின் மன்னவன்யான் - எனவந்(து)
ஓதுகின் றான் இவனை
நீதிசெய் வீர் ”எனவே - மன்றத்தில்
நிறுத்தி வழக்காடினார். 20

ஏசுவி னைச்சிலுவை - மரத்தில்
ஏற்றிக் கொல்வதென்றே
நாசகா லர்கூடி - விதியங்கே
நாட்டி விட்டாரையோ ! 21

“ மன்னுயிர் காத்திடவே - இங்கு
வந்து பிறந்தமகன்
தன்னுயிர் காக்கவொண்ணா - தின்று
தயங்கி நிற்கின்றான் ! 22

முழக்கம் செய்துவந்தான் - வழக்கை
முடித்து நிற்கின்றான்
ஒழுக்கம் காட்டவந்தான் - இங்கே
உயர்வு பெற்றுவிட்டான் ! ” 23

என்று பற்பலரும் - அவனை
ஏளனம் செய்துநின்றார்
ஒன்றும் உரையாமல் - உரவோன்
உள்ளம் அடங்கிநின்றான். 24

“ யாதும் அறியாதார் - அவர்பிழை
யாவும் பொறுத்திடுவாய்
நாதனே !” என்றீசன் - அருளை
நயந்து வேண்டிநின்றான். 25

விண்ணையே நோக்கிநின்றான் - எதனை
வேண்டி நின்றனனோ
எண்ணிய எண்ணமெல்லாம் - இங்கே
யாவர் அறிவரம்மா ! 26

“ உன்னையே நம்பிநின்றேன் - உதவிக்(கு)
ஒருவரை யுங்காணேன்
என்னைக்கை விட்டனையோ - ஈசா !”
என்று வருந்திநின்றான். 27

தெய்வ உதவியெதும் - அந்நாள்
தெரிய வந்ததில்லை
செய்தவிண் ணப்பமெல்லாம் - வீணாய்ச்
சிதைந்து போனதையோ ! 28

சரணம் நீயென்றே - தலையைத்
தாழ்த்து நின்றதலால்
மரண வேளையிலும் - ஈசனை
மறந்த தில்லைஅவன். 29

ஆவி பெற்றனனே - இன்றும்
அம்புவி வாழ்பவனே
யாவர் அறிந்திடுவார் - அறியினும்
யாவரே கூறவல்லார் ?

## 17. சரத்காலம்

பொன்னொளியும் மரகதத்தின் பொலிவும் செந்நெற்
புலங்காட்ட அதன்மீது நிழலை வீசும்
ன்னரிய சரற்கால மேகந் தன்னைப்
பரிதிவிரைந் தெழுந்தோடி வெருட்டிச் செல்லத்
தன்னைமறந் தொளிமயக்கில் மயங்கி வண்டு
சாருமலர்த் தேன்மறந்து சுழன்று பாட
மன்னுகுளம் நதிக்கரையில் வாழுந் தாரா
மனங்களித்துக் குரலெழுப்பித் திரியும் மாதோ. 1

நீலநெடு வான்முகட்டைத் தாக்கி நிற்போம்
நிரந்தோடி வெளியிடத்தைக் கொள்ளை கொள்வோம்
வேலையிது காலையெதும் செய்ய வேண்டாம்
வீட்டினுக்கு யாவருமே திரும்ப வேண்டாம்
மேலெழுந்த பெருவெள்ள நுரையே போல
விளங்குமெழிற் சிரிப்பினொளி மிதக்கு தம்மா
சீலமிகு சோதரரே கூடி இன்று
தெம்மாங்கு பாடிவிளை யாடு வோமே. 2

விரித்துவிடு பாய்காற்றுப் பிடித்த தோடம்
விரைந்துகுதித் தோடியழ கமையக் கண்டேன்
பெருத்தநிதி யிருக்குமிடம் பாடக் கேட்டேன்
பெறும்வழிகள் அறிந்தாசை பெரிதும் கொண்டேன்
திருத்தமுறச் சுடரொளிதன் முகத்தில் வீசத்
திரண்டுபுயல் பின்வரமா லுமியும் நின்றான்
கருத்தொடெதைப் பாடுவன்யான் களிப்பி லொன்றாய்க்
கண்ணீரும் புன்னகையும் கலந்த அன்றே. 3

உள்ளமதை ஆகாயம் பரவ விட்டேன்
உன்கரமும் என்கனவில் தீண்டப் பெற்றேன்
மெள்ளஉன் றன் முகமறைக்கும் திரையை நீக்கி
விழிகளையான் கண்டுதொழக் கருணை செய்வாய்
கள்ளவிழும் வனத்திலெழும் இசையு டெம்மைக்
களிப்பொடுநீ வரவேற்கும் குறிப்பைக் கண்டேன்
வள்ள லுன் றன் திருக்கழலின் ஒலியென் னுள்ளம்
மலியநிறைந் தானந்தம் அளிக்கு தையா. 4

---

இவை ஸ்ரீ ரவீந்திரநாத தாகூர் பாடிய 'தோட்டக்காரன்' என்ற நூலிலுள்ள 'சரத்கால விழா' என்னும் கவிதையின் கருத்தையொட்டி எழுதப்பெற்றவை.

## 18. சந்திரன்

மீனினம் ஓடிப் பரக்குதம்மா - ஊடே
வெள்ளி ஓடமொன்று செல்லுதம்மா
வானும் கடலாக மாறுதம்மா - இந்த
மாட்சியி லுள்ளம் முழுகுதம்மா. 1

முல்லை மலர்ப்பந்த லிட்டனரோ - தேவர்
முத்து விதானம் அமைத்தனரோ
வெல்லு மதியின் திருமணமோ - அவன்
விண்ணில் விழாவரும் வேளையிதோ. 2

அம்புயம் வாடித் தளர்ந்ததம்மா - அயல்
ஆம்பலும் கண்டு களிக்குதம்மா
இம்ப ருலகின் இயல்பிதம்மா - மதிக்(கு)
இன்னார் இனியாரு முண்டோஅம்மா. 3

மாற்றம் உலகின் இயற்கையென - இங்கு
மாந்தரும் கண்டு தெளிந்திடவோ
போற்று மிறைவன்இம் மாமதியம் - விண்ணில்
பூத்து நிலவ விதித்தனனே. 4

அம்புலிக் கூட்டில் முயல்வருமோ - ஈதோர்
அண்டப் புளுகோ அறியேனம்மா
பம்பி யெழுமலை அங்குளதும் - மேலைப்
பண்டிதர் கண்ட கனவேஅம்மா. 5

கூனக் கிழவி நிலவினிலே - ராட்டில்
கொட்டை நூற்கும்பணி செய்வதைஇம்
மாநிலம் கண்டு மகிழ்ந்திடவே - காந்தி
மாமதி யோங்கி வளருதம்மா. 6

சின்னஞ் சிறுவில்லாய்க் கண்டதம்மா - பின்னர்
செம்பொற் குடம்போலே தோன்றுதம்மா
என்ன அதிசயம் பாராயம்மா - ஈதோர்
இந்திர சாலமோ கூறுயம்மா. 7

வளர்ந்து வளர்ந்து பெருகுதம்மா - உடல்
வட்டந் திருந்தி வருகுதம்மா
தளர்ந்து தளர்ந்துபின் போகுதம்மா - கண்ணில்
சற்றுந் தெரியாம லாகுதம்மா. 8

பாலாழி மீது படர்ந்தவெண்ணெய் - ஒரு
பந்தா யுருண்டு திரண்டதுவோ
மேலா யுலகில் ஒளிசெயவே - ஈசன்
விண்ணக மிட்ட விளக்கிதுவோ. 9

இரவைப் பகலா யியற்றுதம்மா - வெப்பம்
இல்லா திளைப்பெலாம் ஓட்டுதம்மா
அரவம் விழுங்கினும் அஞ்சாதம்மா - எங்கள்
ஆண்டவன் சூடும் மணியேயம்மா. 10

பொன்மரம் காய்த்த கனியிதுவோ இந்தப்
பூமகள் ஆடும் கழங்கிதுவோ
கண்மன முங்களி கொள்ளக் கவினொளி
காட்டி விளங்கும் மதியிதுவோ. 11

கண்ணுதல் உள்ளக் கருணையதோ - கொற்கைக்
காவலர் கண்ட புகழதுவோ
மண்ணகஞ் செய்திடு புண்ணியமோ - இன்று
வானகம் வந்து நிலவுதம்மா. 12

## 19. கிளி

தேமலர்ச் சோலையிலே - வாசமெழு
தென்றல் உலாவையிலே
மாமண மங்கையைப்போல் - பெரிது
மகிழ்ந்துநீ தங்கினையோ ? 1

பச்சிலையும் கனியும் - நிறைந்து
படர்ந்து வளர்ஆலின்
உச்சியிற் சென்றிருந்தால் - எப்படியான்
உன்னையும் கண்டிடுவேன் ? 2

நாடுமென் னுள்ளத்திலே - குடிபுகும்
நாயகி கையமர்ந்து
பாடி யமுதளிக்கும் - அழகிய
பைங்கிளி நீயலவோ ? 3

பூனைகள் இங்குவரா - வேடர்தம்
பொறியின் பயமும்இல்லை
யானுனைக் காத்திடுவேன் - இறங்கிநீ
என்கையில் வந்திடாயோ ? 4

வட்டமா யுன்கழுத்தில் - ஒருநாளும்
வாடாத ஆரமதை
இட்டவர் ஆரடியே - எனக்கும்
இயம்புவையோ கிளியே. 5

மாணிக்க மூக்கழகும் - மரகத
வர்ண வடிவழகும்
காணக்கண் ணாயிரந்தான் - இருப்பினும்
கண்டு முடிந்திடுமோ. 6

கத்திரி போலவெட்டிக் - கனியினைக்
கௌவி யெடுத்தோடச்
சித்திர வாயளித்த - கடவுள்
திருவருள் சற்றேஅம்மா. 7

சாய்ந்து தலைவணங்கி - இனிய
தமிழைநீ கற்குமுறை
ஆய்ந்த புலவருமே - எழுதி
அயர்ந்துகை சோர்வரம்மா. 8

பறக்கச் சிறகிருந்தும் - மரக்கிளை
பற்றிநீ ஏறுவதேன்
திறத்தை உலகினுக்கு - மிகவும்
தெரிவிக்கவோ கிளியே. 9

காட்டுத் தினைக்கதிரைப் - பறித்துநீ
கண்டித் தருந்தாமல்
கூட்டுக் கெடுத்தோடும் - குறிப்பெது
கூறுவையோ கிளியே. 10

ஒற்றை யொருகாலில் - நின்றுகனி
உண்ணும் அரியவித்தை
கற்றதும் யாவரிடம் - அவரைநீ
காட்டுவையோ கிளியே. 11

கானத் தினைப்புனத்தில் - குறமகள்
காவலிற் கொள்ளையிடல்
ஈனச் செயலல்லவோ - குலத்துக்(கு)
இழுக்கமும் வந்திடாதோ ? 12

செம்பவழ வாயைத் - திறந்துநீ
செப்பும் மொழிகேட்கில்
உம்பர் அமுதமெல்லாம் - செவியகத்(து)
ஓடி யொழுகுமடி. 13

கொம்பிற் கொலுவிருந்து - களித்துநீ
கூவுங் குரல்வருமேல்
பம்பி யெழுஞ்சோலை - எனக்குப்
பரம பதமடியோ. 14

உண்ணும் கனியிலெழும் - சுவையினை
உள்ளம் களிகொளவே
பண்ணிற் கலந்திடநீ - தெரிந்துசெய்
பக்குவம் ஏதடியோ ? 15

பேசு மரகதமே - உனைத்தினம்
பேணி வளர்த்திடுவேன்
ஆசை யமுதமொழி - அளிக்கநீ
அண்டையில் வந்திடாயோ ? 16

பண்ணுக் கிசைந்ததம்மா - பழத்தொடு
பாலுங் கலந்ததம்மா
மண்ணுக் கமுதமம்மா - உனதுசெவ்
வாய்மொழி தத்தையம்மா. 17

மாணிக்கச் செப்பினிலே - அமுதை
வடித்துச் சுவைபெருக்கி
பேணி யுனக்களித்த - பிரமன்
பெரியன் பெரியனம்மா. 18

சின்னஞ் சிறுபள்ளியில் - உனக்கொரு
சிங்காரப் பெஞ்சுமிட்டுத்
தின்னக் கனியளித்துப் - பாலபாடம்
செப்புவன் வாகிளியே. 19

கண்ணுக் கினிமையாகி - எனதிரு
காதும் குளிரச்செய்யும்
வண்ணப் பசுங்கிளியே - குயிலுமுன்
மாதவஞ் செய்ததுண்டோ? 20

பாலுக்குச் சினியைப்போல் - பசுந்தமிழ்ப்
பாடலுக் கின்னிசைபோல்
சோலைக்குப் பைங்கிளியே - உனது
துணையும் பெரிதேயம்மா. 21

உள்ளக் களிப்பெழுந்து - வெளியில்வந்(து)
உன்னுருக் கொண்டதுவோ
மெள்ளப் பிடித்துநெஞ்சில் - அணைத்திட
வேட்கை மிகுதேயம்மா. 22

## 20. மலர்கள்

மண்ணி லிருந்து பொருள்வரினும் - அதை
மாற்றி மணம்பெறச் செய்திடுவோம்
கண்ணுக் கினிய நிறங்களெல்லாம் - விண்ணிற்
காணுங் கதிரிடம் பெற்றிடுவோம். 1

வண்டின் வரவெதிர் பார்த்துநிற்போம் - நல்ல
வாசனை வீதியில் வீசிநிற்போம்
உண்டு களிக்க மதுவளிப்போம் - சற்றே
உட்காரப் பீடமும் இட்டுவைப்போம். 2

மங்கைய ரோடு குமரரையும் - மனம்
வாய்த்த மணஞ்செய்து வாழவைப்போம்
தங்கமும் பொன்னும் மணிகளுமே - எம்மைத்
தாழ்ந்து வணங்கமேல் தங்கிடுவோம். 3

ஈசன் அடியில் பணிந்திருப்போம் - அவர்
ஏந்து முடிமீதும் ஏறிநிற்போம்
பூசனை செய்யும் அடியவரின் - உள்ளம்
பொங்கு களிப்பெலாம் காட்டிநிற்போம். 4

மன்னருங் கண்டெதிர் வந்திடுவர் - கட்டி
மார்போ டணைத்து மகிழ்ந்திடுவர்
இந்நிலத் தின்பம் பெருகிடவே - நாங்கள்
என்றும் உயிர்வாழ்ந் திருப்போமம்மா. 5

---



## 21.

## சூரியகாந்தி

ஆகாய வீதி
யுலாவி வருமிந்த
ஆதித்தனோஉன
தன்பனடி
வேகாமல் வெந்து
வெயிலில் உலர்ந்துநீ
விண்ணிலே கண்ணாக
நிற்பதேனோ? 1

பொன்னிற முண்டு பொலிவுண்டு கண்டுனைப்
போற்ற இனிய வடிவுமுண்டு
என்ன அரிய வரம்பெற இன்னும்நீ
இத்தவம் செய்வது பூமகளே. 2

காயும் கதிரவன் மேனியை நோக்கஉன்
கண்களும் கூசிக் கலங்காவோ
நேயம் மிகுந்தவர் காய வருத்தம்
நினைப்பதும் இல்லையோ சொல்லடியே. 3

காலையி லேகதிர் வீசிவர - நிதம்
கண்டு களித்து மகிழ்ந்திடும்நீ
மாலையி லேமுகம் வாடித் தளர்ந்திட
வந்த வருத்தமும் ஏதடியே ? 4

செங்கதிர் செல்லும் திசையது நோக்கிஉன்
செல்வ முகமும் திரும்புவதேன்
மங்கையே உன்மண வாளனுகில் - அவன்
வார்த்தை யொன்றுசொல்லிப் போகானோ ? 5

ஆசை நிறைந்தஉன் அண்ணலை நோக்கிட
ஆயிரங் கண்களும் வேண்டுமோடி
பேசவும் நாவெழ வில்லையோடி - கொஞ்சம்
பித்தற் பெருமையும் வந்ததோடி ? 6

மஞ்சள் குளித்து முகமினுக்கி - இந்த
மாயப் பொடிவிசி நிற்கும்நிலை
கஞ்ச மகள்வந்து காணிற் சிரிக்குமோ
கண்ணீர் உகுக்குமோ யாரறிவார்? 7

உன்பெயர் சூரிய காந்தியென்றார் - அதன்
உண்மையும் இன்றே அறிந்துகொண்டேன்
இன்ப மளித்திடும் பூவுல கத்துனக்(கு)
யாரும் இணையில்லை இல்லையம்மா. 8

7. கஞ்சமகள் - தாமரையாகிய நங்கை ; சூரியன் அதன் காந்தனுகையால் அவனை விரும்பிநிற்கும் சூரியகாந்தியைக் கண்டு தாமரை நகைக்குமோ அழுமோ என்றார்.

## 22. கடல்

[கற்களும் பாறைகளும் அடர்ந்த கடற்கரையில், கடல் கொந்தளிப்பாயிருந்த தருணத்தில், மணலிலே விளையாடிக் கொண்டிருந்த குழந்தை கடலைநோக்கிக் கூறியது.]

எல்லை அறியாப் பெருங்கடலே - நீதான்
இரவும் உறங்காயோ கடலே
அல்லும் பகலும் அலைகடலே - உனக்(கு)
அலுப்பும் இலையோ கருங்கடலே ! 1

உருண்டு திரண்டு வருங்கடலே - உடைந்(து)
ஓடிப் போவதேன் கடலே
வெருண்டு மதிகெட் டாய்கடலே - பாறை
விலகிப் போகுமோ கடலே ! 2

பொங்கு திரைகளோ கடலே - அவை
புரவி நிரைதாமோ கடலே
எங்கும் உனதொலியோ கடலே - அன்றி
இடியின் முழக்கமோ கடலே ! 3

ஓடம் எடுத்தெறியும் கடலே - தயை
உனக்குச் சற்றிலையோ கடலே
ஆடல் விடுதனைக் கடலே - நீயும்
அழிப்ப தழகாமோ கடலே! 4

மலையை வயிற்றடக்கும் கடலே - எண்ணில்
மகர மீனுலவும் கடலே
விலைகொள் முத்தளிக்கும் கடலே - சிப்பி
விளையா டற்குதவும் கடலே! 5

மழைக்கு மூலமும் நீ கடலே - அதை
வாங்கி வைப்பதும் நீ கடலே
வழுத்து மகிமையெலாம் கடலே - எவர்
மதித்து முடி[illegible] கடலே! 6

## 23. வெண்ணிலா

மீன்கள்கோடி கோடிசூழ வெண்ணிலாவே - ஒரு
வெள்ளியோடம் போலவரும் வெண்ணிலாவே. 1

பானுவெங் கதிர்குளிக்கும் வெண்ணிலாவே - நித்தம்
பாற்கடலும் ஆடுவையோ வெண்ணிலாவே. 2

ஆம்பல்களி கூரவரும் வெண்ணிலாவே - உனக்(கு)
அம்புயம்செய் தீங்கெதுவோ வெண்ணிலாவே. 3

இரவையும்நண் பகலாக்கும் வெண்ணிலாவே - உன்னை
இராகுவும் விழுங்கிடுமோ வெண்ணிலாவே. 4

வளர்ந்து வளர்ந்துவந்த வெண்ணிலாவே - மீண்டும்
வாடிவாடிப் போவதேனோ வெண்ணிலாவே. 5

கூகைஆந்தை போலநீயும் வெண்ணிலாவே - பகல்
கூட்டினில் உறங்குவாயோ வெண்ணிலாவே. 6

பந்தடிப்போம் உன்னையென்று வெண்ணிலாவே - நீயும்
பாரில்வர அஞ்சினையோ வெண்ணிலாவே. 7

பளிங்குபோலு முன்னுருவில் வெண்ணிலாவே - கறை
பற்றியே இருப்பதேனோ வெண்ணிலாவே. 8

பூமியின் உருநிழலோ வெண்ணிலாவே - அது
போகாக் குறுமுயலோ வெண்ணிலாவே. 9

குன்றும் குகைகளுமோ வெண்ணிலாவே - அன்றிக்
கூனக் கிழவிதானோ வெண்ணிலாவே. 10

ஆழியும்நீ வரக்கண்டு வெண்ணிலாவே - குதித்(து)
ஆடுவதெக் காரணமோ வெண்ணிலாவே. 11

ஆதாரம் ஒன்றில்லாமல் வெண்ணிலாவே - நீயும்
அந்தரத்தில் நிற்பதேனோ வெண்ணிலாவே. 12

சுற்றித் திரிவதுமேன் வெண்ணிலாவே - உனக்குச்
சொந்தஇடம் ஒன்றிலையோ வெண்ணிலாவே. 13

அண்டிவாராய்நீயெனினும் வெண்ணிலாவே - இன்னும்
அகன்றெங்கும் போய்விடாதே வெண்ணிலாவே. 14

பறக்கச் சிறகிருந்தால் வெண்ணிலாவே - உன்றன்
பக்கம்வந்து சேருவேனே வெண்ணிலாவே. 15

பால்போல் நிலவெறிக்கும் வெண்ணிலாவே - என்றன்
பாங்கில்விளை யாடவாராய் வெண்ணிலாவே. 16

பாங்கில்விளை யாடவந்தால் வெண்ணிலாவே - நல்ல
பால்தருவேன் பழந்தருவேன் வெண்ணிலாவே. 17

துன்பமிகத் தாமடைந்தும் வெண்ணிலாவே - பிறர்க்குச்
சுகமளிப்பார் உன்போலுண்டோ வெண்ணிலாவே. 18

இருளதனை விழுங்கவல்ல வெண்ணிலாவே - உன்னை
இருள்விழுங்கும் சூழ்ச்சியெதோ வெண்ணிலாவே. 19

## 24. குழந்தை

எங்கே யிருந்துவந்தாய் குழந்தாய் - அதை
யானும் அறிந்திடச்சொல் குழந்தாய்
எங்கும் நிறைவெளியில் இருந்தேன் - சற்றே
இங்கும் இருக்கவந்தேன் அம்மா. 1

நீல மலர்போலும் விழிகள் - எங்கு
நீதேடிப் பெற்றாயென் குழந்தாய்
ஞாலம் இதற்குவரும் வழியில் - வானம்
நன்கொடை தந்ததிவை அம்மா. 2

கண்ணில் ஒளிவிளங்கக் கண்டேன் - அந்தக்
காட்சியின் காரணமென் குழந்தாய்
விண்மீன் ஒளிசிறிது தங்கி - அங்கு
மின்னி விளங்குகின்ற தம்மா. 3

நெஞ்சம் களிக்கவரும் குழந்தாய் - கண்ணில்
நீர்த்துளி நின்றகதை எதுவோ
வஞ்சப் புவியில்எனைத் தேடி - அது
வழியெதிர் வந்துநின்ற தம்மா. 4

ஒளிரும்உன் நெற்றியிலே இந்த - மென்மை
உண்டான தெப்படிஎன் குழந்தாய்
தளிருந் தழையச்செய்யுங் கரமொன்(று) - அதைத்
தடவி அளித்த துண்டென் அம்மா. 5

பூவின் அழகுனது முகத்தில் - என்றும்
பொலிந்திடும் காரணமென் குழந்தாய்
தேவரும் கண்டறியாக் காட்சி - யானும்
தெளிவுறக் கண்டபலன் அம்மா. 6

புன்னகை பூத்திடும் வேளை - ஒரு
புதுமையும் காண்பதேனோ குழந்தாய்
முன்னம் அரம்பையர்கள் மூவர் - ஒன்றாய்
முத்தம் அளித்தகுறி அம்மா. 7

ஆசைக் குழந்தாய்இச் செவிகள் - உன்னை
அடைந்த வரலாறே துரையாய்
ஈசனும் பேசிடவாய் திறந்தான் - கேட்க
இவையும் எழுந்தனஎன் அம்மா. 8

இன்பச் சிறுகரங்கள் இவைதாம் - உனக்(கு)
எவ்வா றமைந்தனஎன் குழந்தாய்
அன்பு வளர்ந்திவ்வுரு வாகி - என்னை
அண்டி அணைந்திருக்கு தம்மா. 9

ஆவி குளிரவருங் குழந்தாய் - இந்த
அழகிய கால்கள்எங்கே கொண்டாய்
தேவப் பிறவிகளின் சிறகோ(டு) - ஒரு
சிங்காரப் பெட்டியிலே கண்டேன். 10

இந்தக் கருவியெல்லாஞ் சேர - நீதான்
எவ்வா றமைந்தனைஎன் குழந்தாய்
எந்தை இறைவனுளங் கொண்டான் - உடன்
யானும் எழுந்துநின்றேன் அம்மா. 11

மனமிக மகிழ்ந்திடக் குழந்தாய் - நீயென்
மடியினில் வந்தவகை எதுவோ
தினமும்நீ செய்தபெருந் தவத்தால் - அந்தத்
திருவருள் கூட்டிவைத்த தம்மா. 12



இவை மாக்டோனல்ட் என்பவர் செய்த ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டவை.

## 25. கைத்திறன்

வெயில்வரினும் மழைவரினும் விரிகுடையாம் கையே
வெயர்வைவரின் ஆற்றுசிறு விசிறியதாம் கையே
துயிலவொரு மகவைத்தொட்டில் இட்டசைக்கும்கையே
துரிதமுடன் எழுதவொரு தூவிகொளும் கையே. 1

இனியசெந்நெற் புலம்உழுதற் கேர்பிடிக்கும் கையே
இன்னிசைகள் எழுப்பவீணை ஏந்துமெழிற் கையே
கனியுதிர்ப்பக் கல்லெறியும் கவண்பிடிக்கும் கையே
கண்களிப்பப் படமெழுதிக் காட்டும்என்றன் கையே. 2

தானதர்மம் செய்யவெதும் தளர்விலதாம் கையே
தளர்பவரைக் கண்டுதலை தாங்கஎழும் கையே
பானம்செய்தற் கேற்றவொரு பாத்திரமாம் கையே
பையுரவைப் போலவந்து பயமுறுத்தும் கையே. 3

மலரெடுத்து நல்லசெண்டு மாலைகட்டும் கையே
வாய்க்கினிய பண்டமெலாம் வைத்துதவும் கையே
சலமதனில் ஓடம்விடச் சலிப்பிலதாம் கையே
தரையில்மோட்டார்ரயில் நடத்தச்சமர்த்துளதாம்கையே.

கோபுரம்சேர் கோயிலொடு குடிசைகட்டும் கையே
குளங்கிணறு குட்டையெலாம் குழித்துதவும் கையே
ஆபரணம் பணிமணிகள் ஆய்ந்துசெய்யும் கையே
ஆடைகள்பா வாடைகளும் ஆக்குமெழிற் கையே. 5

மல்லயுத்தம் செய்வதற்கு வந்துநிற்கும் கையே
வாள்பிடித்து வகைவகையாய் மரமறுக்கும் கையே
நெல்லைக்குத்தும் அரிசிதீட்டும் நொய்கொழிக்கும் கையே
நேயரொடு பாண்டியாடி நிதம்ஜெயிக்கும் கையே. 6

நாடியசீர் நாடடைய ராட்டுருட்டும் கையே
நல்லகதர் நெய்யமிகு வல்லமைகொள் கையே
பாடியவாய் தேனூறும் பாரதியார் பாடல்
பண்ணமையப் பாடுதற்குப் பாணிகொட்டுங் கையே.7

அழைப்பதற்கும் அகற்றுதற்கும் அபிநயிக்கும் கையே
ஆக்குதற்கும் அழிப்பதற்கும் ஆற்றல்பெறும் கையே
உழைப்பதற்கும் ஊட்டுதற்கும் ஊக்கமுறும் கையே
உதவுதற்கும் ஏற்பதற்கும் உரிமைகொளும் கையே. 8

மக்களைத்தம் ஒக்கல்வைத்து வளர்த்திடுமென் கையே
வண்ணமலர் தலைக்கணிந்து வாசமூட்டுங் கையே
தக்கபெரி யோர்க்குமிகத் தான்வணங்கும் கையே
தரணியிலுன் திறமையெலாம் சாற்றலெளி தலவே. 9

## 26. ஆறு

கல்லும் மலையும் குதித்துவந்தேன் - பெருங்
காடும் செடியும் கடந்துவந்தேன்
எல்லை விரிந்த சமவெளி எங்கும்நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்துவந்தேன். 1

கட்டும் அணையேறிச் சாடிவந்தேன் - அதன்
கண்ணறை தோறும் நுழைந்துவந்தேன்
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன் - மடைச்
சீப்புகள் மோதித் திறந்துவந்தேன். 2

காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன் - அதில்
கண்குளி ரப்பயிர் கண்டுவந்தேன்
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன் - அங்கென்
ஆசை தீரவிளை யாடிவந்தேன். 3

ஏறாத மேடுகள் ஏறிவந்தேன் - பல
ஏரி குளங்கள் நிரப்பிவந்தேன்
ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன் - மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன். 4

ஆயிரம் காலால் நடந்துவந்தேன் - நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்துவந்தேன்
நேயமுறப் புன்செய்க் காட்டிலும் அங்கங்கு
நீரை இறைத்து நெடுகவந்தேன். 5

பஞ்சை அரைத்துநூல் நூற்றுவந்தேன் - சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்துவந்தேன்
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரிற் - குழாய்
நீராக வும்சென்று பாய்ந்துவந்தேன். 6

மாங்கனி தேங்கனி வாரிவந்தேன் - நல்ல
வாச மலர்களும் அள்ளிவந்தேன்
தீங்கரும் பாயிரம் தள்ளிவந்தேன் - மிகத்
தேனும் தினையுமே சேர்த்துவந்தேன். 7

அல்லும் பகலும் அலைந்துவந்தேன் - எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன்
நில்லும் எனக்கினி நேரமில்லை - இன்னும்
நீண்ட வழிபோக வேண்டும்அம்மா. 8



இவை குட்ரிச் என்பவர் எழுதிய ஆங்கிலப்பாடல்களைத் தழுவிச் செய்யப்பட்டவை.



## 27. கிளி



பச்சைக்கிளியே வாவா
பாலுஞ்சோறும் உண்ணவா
கொச்சிமஞ்சள் பூசவா
கொஞ்சிவிளை யாடவா. 1

கவலையெல்லாம் நீங்கவே
களிப்பெழுந்து பொங்கவே
பவழவாய் திறந்துநீ
பாடுவாயோ தத்தம்மா. 2

வட்டமாயுன் கழுத்திலே
வானவில்லை ஆரமாய்
இட்டமன்னர் யாரம்மா
யானறியக் கூறம்மா. 3

பையப்பையப் பறந்துவா
பாடிப்பாடிக் களித்துவா
கையில்வந் திருக்கவா
கனியருந்த ஓடிவா. 4

பவழக்காரத் தெருவிலே
பவழங்காண வில்லையாம்
எவரெடுத்துச் சென்றனர்
எனக்கறிந்து சொல்வையோ. 5

பங்கஜாட்சி கையிலே
பவழங்காண வில்லையாம்
எங்குமுன்னைத் தேடினுர்
எடுத்ததுண்டோ தத்தம்மா. 6

அரசர்மார்பில் ஆரத்தை
ஆரோகொண்டு போனாராம்
திருடிச்சென்றார் எவரம்மா
தெரியுமானால் சொல்லம்மா. 7

## 28. காக்காய்

காக்காய் காக்காய் பறந்து வா
கண்ணுக்கு மை கொண்டு வா. 1

கோழீ கோழீ கூவி வா
குழந்தைக்குப் பூ கொண்டு வா. 2

வெள்ளைப் பசுவே விரைந்து வா
பிள்ளைக்குப் பால் கொண்டு வா. 3



## 29. பசு

**ப**ச்சைப்புல்லைத் தின்றுவெள்ளைப்
பால்தரநீ என்ன
பக்குவஞ் செய்வாய் அதனைப்
பகருவையோ பசுவே
உச்சியுடல் நக்கி ஈன்ற
உடனுனது கன்றை
உயிரெழுப்பும் மாயமெதோ
உரைத்திடுவாய் பசுவே ! 1

**வா**ய்க்கினிய பால்தருவாய்
வயற்குரமும் தருவாய்
வண்டிகட்டக் காளையும்நீ
வளர்த்தளிப்பாய் பசுவே
தாயில்லாப் பிள்ளைகட்குத்
தாயாவாய் நோயால்
தளர்பவர்க்கு மருத்துவச்சி
தானுவாய் பசுவே ! 2



## 30. காலைப்

அருண னுதித்தனன்
அளிகளும் மொய்த்தன
அம்மா நீ எழுந்தோடி

பசிய புல் நுனியில்
பனித்துளி தானே நீ
பைங்கிளி எழுந்தோடி

பொழுது விடிந்தது
பூஞ்செடி பொலிவதைப்
பொன்னேநீ எழுந்தோடி

காகம் கரைந்தது
கனியுதிர் காவினைப்
கண்ணே நீ எழுந்தோடி



## பாட்டு



அம்புஜம் விண்டது
பாராய்
வாராய். 1

பதித்தவெண் முத்தமோ
பாராய்
வாராய். 2

பொற்கோழி கூவிற்று
பாராய்
வாராய். 3

காலையும் ஆயிற்று
பாராய்
வாராய். 4



## 31. கடிகாரம்

[கடிகாரம் வாங்கித் தரும்படி கேட்டுக்கொண்ட தன் மகளிடம், ஏழையான ஒரு தாய், "மகளே, நேரத்தை அறிவதற்கு இயற்கையிலேயே அநேக லக்ஷியங்களிருக்க நமக்கு வேறு கடிகாரமும் வேண்டுமோ?" எனக் கூறுகின்றாள்.]

சேவற் கோழியுண்டு காகமுண்டு - வானம்
செக்கச் சிவந்து தெரிவதுண்டு
மேவு பொன்னே! அதி காலை தெரிந்திட
வேறும் கடிகாரம் வேண்டுமோடி? 1

செங்கதிர் பொங்கி வருவதுண்டு - நல்ல
செந்தா மரைகள் மலர்வதுண்டு
மங்கையே! காலைப் பொழுதை யுணர்ந்திட
மற்றும் கடிகாரம் வேண்டுமோடி? 2

தன்னிழல் தன்னடி யாவதுண்டு - சுடர்
தானுந் தலைநேர் எழுவதுண்டு
இன்னமுதே! பகல் உச்சியி தென்றிட
ஏதும் கடிகாரம் வேண்டுமோடி? 3

விண்மணி ஆழியில் வீழ்வதுண்டு - வாசம்
வீசு மந்தாரை மலர்வதுண்டு
கண்மணியே! மாலைக் காலம் குறித்திடக்
கையில் கடிகாரம் வேண்டுமோடி? 4

முல்லை யரும்பு விரிவதுண்(டு) - ஆம்பலின்
மொட்டுகள் மெள்ள அவிழ்வதுண்டு
மெல்லியலே! மாலை வேளை யறிந்திட
வெள்ளிக் கடிகாரம் வேண்டுமோடி? 5

அம்புலி நட்சத் திரங்களுண்டு - கணக்(கு)
ஆக்கி யறிய வழிகளுண்டு
இன்பமே! நேரம் இரவில் அறிந்திட
இன்னும் கடிகாரம் வேண்டுமோடி? 6

கம்மென வாசம் கமழ்பாரி சாதம்இக்
காவில் மலர்ந்து சொரிவதுண்டு
அம்மையே! நள்ளிர வீதென்று சொல்லிட
ஆர்க்கும் கடிகாரம் வேண்டுமோடி? 7

காலை மாலைஎந்த வேளையும் - சூரிய
காந்தி மலர்தானே காட்டிடாதோ
வேலை யெழுந்த திருவே! உனக்கினி
மேலும் கடிகாரம் வேண்டுமோடி? 8

சுற்றுப் பொருளெல்லாம் உற்று நோக்கி - அவை
சுட்டும் மணிநேரம் கண்டறிவாய்
பெற்ற முத்தே! இந்த உண்மை அறிவோர்க்குப்
பின்னும் கடிகாரம் வேண்டுமோடி? 9

## 32. தாலாட்டு

ஆராரோ ஆராரோ
ஆரிவரோ ஆராரோ.

மாமணியோ முத்தோ
மரகதமோ மன்னவர்தம்
தாம முடிமீது
தயங்கும் வயிரமதோ. 1

முல்லை நறுமலரோ
முருகவிழ்க்குந் தாமரையோ
மல்லிகைப் பூவோ
மருக்கொழுந்தோ சண்பகமோ.

தெள்ளமுத முண்டு
தெவிட்டாக் கனியுண்டெம்
உள்ளங் குளிர
உரையாடும் பைங்கிளியோ. 3

கற்கண்டு சீனி
கனியுங் கனிந்தொழுகு
சொற்கொண் டெமக்குச்
சுகமளிக்கும் பூங்குயிலோ. 4

நெஞ்சிற் கவலையெலாம்
நீங்கத் திருமுகத்தில்
புஞ்சிரிப்பைக் காட்டிஎம்மைப்
போற்றும் இளமதியோ. 5

பல்லக்கில் அம்மான்
பவனி வரும்பொழுது
மெல்ல மடியிருந்து
விளையாடும் பைங்கிளியோ. 6

பூமாலை வாடும்மணம்
பொன்மாலைக் கில்லையென்று
பாமாலை வைத்தீசன்
பாதம் பணிபவனோ. 7

பாலமுதம் உண்டுதமிழ்ப்
பாமாலை பாடியிந்தத்
தாலம் புகழவரும்
சம்பந்தன் நீதானோ. 8

கொன்றையணிந் தம்பலத்தில்
கூத்தாடும் ஐயனுக்கு
வன்றொண்ட னாக
வளர்ந்தவனும் நீதானோ. 9

---

7. பாமாலை வைத்துப் பணிந்தவர் - அப்பர்.
9. வன்றொண்டர் - சுந்தரர்.

கல்லைப் பிசைந்து
கனியாக்குஞ் செந்தமிழின்
சொல்லை மணியாகத்
தொடுத்தவனும் நீதானே. 10

பூவில் அயனும்இந்தப்
பூமீது வள்ளுவர்தம்
பாவின் நயமுணரப்
பாலகனாய் வந்தானே. 11

கம்பன் கவியின்
கனியமுதம் உண்டிடமால்
அம்புவியில் வந்திங்(கு)
அவதாரம் செய்தானே. 12

தேவாரப் பாகும்
திருவா சகத்தேனும்
நாவார உண்ணஎம்மான்
நன்மகவாய் வந்தானே. 13

ஆக்கம் பெருக
அறம்வளர நாட்டையெலாம்
காக்கும் பெருமான்
கருணைத் திருவுருவோ. 14

---

10. செந்தமிழின் சொல்லை மணியாகத் தொடுத்தவர் - மாணிக்கவாசகர்.

14. அறம் வளரக் காக்கும் பெருமான் - புத்தர்.

புள்ளி மயிலோடு
புனங்காத்து நிற்குமந்த
வள்ளி மணவாளன்
மதலையாய் வந்தானே. 15

ஆயர் பதியில்
அற்புதங்கள் செய்துநின்ற
மாயவனே இங்கெமக்கு
மகவாகி வந்தானே. 16

நாலாயிரக் கவியின்
நல்லமுதம் உண்டிடமால்
பாலாழி நீங்கியொரு
பாலகனாய் வந்தானே. 17

பெண்கள் சிறுவீட்டைப்
பேணா தழித்தவர்தம்
கண்கள் சிவக்கவைக்கும்
கண்ணபிரான் நீதானே. 18

ஆரடித்தார் நீயழுதாய்
அடித்தாரைச் சொல்லியழு
சீரெடுத்த செல்வச்
சீமான் திருக்குமரா. 19

பாலை விரும்பினையோ
பணிகாரம் வேண்டினையோ
சோலைப் பசுங்கிளியே
சுந்தரமே சொல்லியழு. 20

சப்பாணி கொட்டித்
தளர்ந்தனையோ அல்லதுன் றன்
கைப்பாவைக் காகக்
கலங்கி அழுதனையோ. 21

தித்திக்கும் தேனும்
தினைமாவும் கொண்டுன் றன்
அத்தை வருவாள்
அழவேண்டாம் கண்மணியே. 22

மாங்கனியும் நல்ல
வருக்கைப் பலாக்கனியும்
வாங்கியுன் அம்மான்
வருவார் அழவேண்டாம். 23

கண்ணுறங்கு கண்ணுறங்கு
கண்மணியே கண்ணுறங்கு
ஆராரோ ஆராரோ
ஆரிவரோ ஆராரோ. 24



# 33. கோழி

### சேவற் கோழி



கோழீ கோழீ வாவா
  கொக்கோ கோ என்றுவா
கோழீ ஓடி வாவா
  கொண்டைப் பூவைக் காட்டுவா. 1

குத்திச் சண்டை செய்யவோ
  குப்பை கிண்டி மேயவோ
கத்திபோலுன் கால்விரல்
  கடவுள் தந்து விட்டனர்? 2

காலை கூவி எங்களைக்
  கட்டில் விட் டெழுப்புவாய்
வேலை செய்ய ஏவுவாய்
  வெற்றி கொண்ட கோழியே. 3

### பெட்டைக் கோழி

கோழி கோழி வாவா
கூரை விட் டிறங்கிவா
கோழி முட்டை இடவா
கூட்டில் அடை காக்கவா. 4

பெட்டைக் கோழி வாவா
பிள்ளை களைக் கூட்டிவா
குட்டை நெல்லைக் கொட்டினேன்
கொத்திக் கொத்தித் தின்னவா. 5

வஞ்ச மாய்ப் பருந்ததோ
வானில் வட்டம் போடுது
குஞ்ச ணைத்துக் காப்பாயோ
கூட்டில் கொண்டு சேர்ப்பாயோ. 6

## 34. நாய்

வீட்டுவாசல் காப்பவன்
வேட்டையாட வல்லவன்
ஆட்டுக்கிடைப் பாண்டியன்
அன்புமிக்க தோழன். 1

உண்டசோற்றை எண்ணி
உயிரும்விடத் துணிபவன்
மண்டலத்தில் நாய்போல்
வாய்த்ததுணை உண்டோ. 2

5. குட்டை - சிறு கூடை.

## 35. ஆகாயவிமானம்

கப்பல் என்றுமே - மெல்லக்
கடலில் நீந்துவதாம்
தபபித் தப்பியே - ரயிலும்
தரையில் ஊருவதாம். 1

வானமீ தெழுவேன் - அங்கே
வட்டம் சுற்றிடுவேன்
கானம் மலையெல்லாம் - யானோர்
கணத்தில் தாண்டிடுவேன். 2

இடைவி டாதுதபால் - உலகில்
எங்கும் கொண்டுசெல்வேன்
சடைவி லாமலே - பலரைத்
தாங்கியும் போவேன். 3

நன்மை செய்யவந்தேன் - அதை
நன்குண ராமல்
வன்மைப் போரில்எனை - இழுத்து
மாட்டி விட்டாரையோ. 4

தீவினை செய்ய - என்னைத்
தினமும் ஏவுகிறார்
பூவுலக மெல்லாம் - சுட்டுப்
பொசுக்கச் சொல்லுகிறார். 5

அன்பைக் கொன்றுவிட்டார் - மனிதர்
அரக்கராகி விட்டார்
துன்பம் செய்திடவே - இன்று
துணிந்திறங்கி விட்டார். 6

ஆசைப் பேயெங்கும் - தலைவிரித்(து)
ஆடு கின்றதையோ
நாச காலமையோ - புவியும்
நரக மாகுதையோ. 7

காட்டில் ஓநாயும் - நரியும்
கடுவாயும் புலியும்
நாட்டு நாகரிகம் - கண்டு
நகைக்க லாச்சுதையோ. 8

சாந்த மூர்த்தியின் - அகிம்சா
தருமம் மேற்கொண்டு
மாந்தர் இவ்வுலகில் - நன்றாய்
வாழ்வ தெந்நாளோ? 9



## 36. புலிக்கூடு

பந்தம் எரியுதோடி - கண்களைப்
பார்க்க நடுங்குதடி
குந்தம்வாள் ஈட்டியெல்லாம் - கூடவே
கொண்டு திரியுதடி. 1

வாயைப் பிளக்குதடி - கையுறை
வாளும் உருவுதடி
பேயைப் படைத்தபின்னே - இதனையும்
பிரமன் படைத்தானடி. 2

வாலை முறுக்குதுபார் - வால்நுனி
வட்டஞ் சுழலுதுபார்
சாலப் பதுங்குதுபார் - நம்மீது
சாடவும் நோக்குதுபார். 3

இடித்து முழங்குதடி - தொண்டையும்
இரும்பாலே செய்ததோடி
அடுத்து நெருங்காதேடி - அதுமிக
ஆங்காரம் கொள்ளுதடி. 4

கூட்டில் அடைத்திடினும் - இரையினைக்
கொண்டு கொடுத்திடினும்
காட்டில் வளர்ந்தகுணம் - புலிகளும்
காட்டா திருக்குமோடி. 5

புன்னைப் புதுமலரும் - குவளையின்
பூவும் கலந்ததுபோல்
மின்னி மிளிரும்உடல் - கொடியஇவ்
வேங்கைக்கும் வேண்டுமோடி. 6

மானைப் படைத்ததெய்வம் - புலியையும்
வளர்த்து விடலாமோடி
தேனைப் பழித்தசொல்லாய் - எனக்குநீ
தெரிந்துரை செய்வாயோடி. 7

---

இவை வில்லியம் ப்ளேக் என்பவர் ஆங்கிலத்தில் செய்த பாடலைப் பின்பற்றி எழுதப்பட்டவை.



## 37. ஸைக்கிள்

தங்கையேபார் தங்கையேபார்
ஸைக்கிள்வண்டி இதுவேபார். 1

சிங்கார மானவண்டி
சீமையிலே செய்தவண்டி. 2

இரும்பாலே செய்தவண்டி
எங்கெங்கும் ஓடும்வண்டி. 3

மாடில்லை குதிரையில்லை
மாயமதாய்ப் பறந்திடும்பார். 4

தீயில்லை புகையுமில்லை
தீவிரமாய்ச் சென்றிடும்பார். 5

காலாலே மிதிப்பதனல்
கடும்விசையில் போயிடும்பார். 6

ஒன்றன்பின் ஒன்ருக
உருளும்பை தாக்களைப்பார். 7

அக்காளும் தங்கையும்போல்
அவைபோகும் அழகைப்பார். 8

7. பைதா - சக்கரம்.

## 38. பொம்மைக் கலியாணம்

பொம்மைக்கும் பொம்மைக்கும் கலியாணம்
பூலோக மெல்லாம் கொண்டாட்டம்
பாவைக்கும் பாவைக்கும் கலியாணம்
பகலும் இரவும் வேலையாம்.

கொட்டகை போடுது சிலந்தி
குறடு கட்டுது கறையான்.
கோலம் போடுது நண்டு.

கண்ணுக்குமை காக்கை கூட்டுது
கழுத்துக்காரம் தத்தை கட்டுது
கொண்டைக்குப்பூ கோழி வளர்க்குது.

குயில்கள் இனிய குரலிற்பாடும்
மயில்கள் நல்ல நடனமாடும்.

வண்டினம் எல்லாம் வந்துகூடி
வாய்க்கினிய அமுதம் வைக்கும்.

ஊராரே நீர் வாரீரோ
வந்து மணமும் காணீரோ
கண்டு வாழ்த்திப் போகீரோ.

---

## 39. எலிக் கலியாணம்

எலிக்கும் எலிக்கும் கலியாணம்.
இரவிலே சுப முகூர்த்தமாம்.
வீட்டெலி வந்தது, காட்டெலி வந்தது,
வெள்ளெலி வந்தது, முள்ளெலி வந்தது,
குண்டெலி வந்தது, சுண்டெலி வந்தது.
எங்கெங்கு முள்ள எல்லா எலிகளும்
கூட்டமாய்க் கூடிக் குதிலுள் நுழைந்தபின்
நல்ல விருந்தேழு நாளாய் நடந்தது.
மங்கல மாக மணமும் நடந்தது.
வாழ்க வாழ்கவே மணமக்கள்
வாழ்க வாழ்கவே.

---

## 40. முத்தந் தா

கண்ணே மணியே முத்தந்தா
கட்டிக் கரும்பே முத்தந்தா
வண்ணக் கிளியே முத்தந்தா
வாசக் கொழுந்தே முத்தந்தா. 1

தேனே பாலே முத்தந்தா
தெவிட்டாக் கனியே முத்தந்தா
மானே மயிலே முத்தந்தா
மடியில் வந்து முத்தந்தா. 2

---

# 41. பசுவும் கன்றும்



தோட்டத்தில் மேயுது
வெள்ளைப் பசு - அங்கே
துள்ளிக் குதிக்குது
கன்றுக் குட்டி.



அம்மா வென்குது
வெள்ளைப் பசு - உடன்
அண்டையில் ஓடுது
கன்றுக் குட்டி. 2



நாவால் நக்குது
வெள்ளைப் பசு - பாலை
நன்றாய்க் குடிக்குது
கன்றுக் குட்டி. 3

முத்தம் கொடுக்குது
வெள்ளைப் பசு - மடி
முட்டிக் குடிக்குது
கன்றுக் குட்டி

## 42. ஊக்கமுள்ள காகம்

தண்ணீர் கிடையாமல் - காகமொன்று
தவித்த வேளையிலே
மண்ணுற் செய்ததொரு - சாடியினை
வழியிற் கண்டதம்மா. 1

சாடியின் மீதிருந்து - தலையைச்
சரித்து நோக்கிடவே
சாடியிலே தூரில் - சற்றே
தண்ணீர் தெரிந்ததம்மா. 2



காகம் உடனெழுந்து
சிறுசிறு
கற்கள்
பொறுக்கிவந்து
ஊக்கமாய்ச் சாடியினுள்-
அவற்றை
ஒவ்வொன்ருய்
இட்டதம்மா. 3

இட்டிடவே நீரும் -
மேலே
எழுந்து வந்ததம்மா
சட்டமாகக் குடித்
காகம் [துக் -
தளர்ச்சி
தீர்ந்ததம்மா. 4

ஊக்க முடையவர்க்குத் - துன்பம்
உலகில் இல்லையம்மா
ஆக்கம் பெருகுமம்மா - இதைநீ
அறிய வேண்டுமம்மா. 5

## 43. அப்பம் திருடின எலி

செட்டியார் வீட்டில் அடுக்களையில் - சென்ற
　　தீபா வளியன் றிரவுதனில்
வட்டியில் அப்பம் இருந்ததம்மா - அதை
　　வாசத்தி னால்அறிந் தோரெலிதான் : 1

‘ நெய்யினில் சுட்ட பணிகாரம் - இது
　　நேர்த்தியாய்ச் சுட்ட பணிகாரம்
பையப் பையக்கடித் துண்பதற்கும் - வெகு
　　பக்குவ மான பணிகாரம். 2

யார்க்கும் கிடையாப் பெருநிதியாம் - இதை
　　யான்இன் று பெற்றதென் பாக்கியமே
பார்க்கும் பொழுதேநீர் வாயினிலே - ஊறிப்
　　பாய்கின் றதே பசி யாகின் றதே.’ 3

[அப்போது வேறு சில எலிகள் சத்தமிடக் கேட்டு :]

‘ என்ன சத்தம் ஓஓ தம்பிமார்கள் - கூடி
　　இங்கு விளையாட வந்தனரோ
அன்னவர் ஓடி வருமுன்னமே - யானும்
　　அப்பத்தைக் கொண்டு மறைந்திடுவேன். 4

ஏதும் ஒருபொடி யாகிலும் - யானவர்க்(கு)
　　ஈந்திடேன் முற்றுமே தின்றிடுவேன்
ஓதிய தானம் தனக்குப்போக - மீதி
　　உள்ளவர் அல்லவோ செய்திடுவார் ?’ 5



என்று சொல்லிஅந்த அப்பத்தினை - வாயில்
ஏந்திக் கடித்திழுத் தோடிடவே
கன்றப் பசித்த இளைஞரெல்லாம் - வந்து
கால்கடுக்கத் தேடிப் போயினரே. 6

ஆரும் அறியாத மூலையிலே - அந்த
அப்பத்தை அவ்வெலி கொண்டுவைத்துக்
கூரிய பல்லால் கறம்பி ஒருபொடி
கூடச் சிதறாமல் தின்றதம்மா. 7

மட்டுக்கு மிஞ்சிப் புசித்ததனால் - மூச்சு
வாங்க வருந்தி வயிறூதி
கட்டப் படுவதைச் சுற்றத்தார் எல்லோரும்
கண்டொரு பண்டிதர்க் காளும்விட்டார். 8

பண்டிதர் வந்துகை பார்த்தனர் அவ்வெலி
 பண்டம் முழுதையும் உண்டகதை
விண்டதும் கேட்டுக் குறிகளும் நோக்கி
 விதிப்படி ஆய்ந்து விளம்பினரே. 9

'அப்பம் முழுதும்நீ தின்றனையே - அதை
 அன்பிற் குரியஉன் தம்பியர்க்கும்
ஒப்பவே பங்கிட் டளித்திருந்தால் - துன்பம்
 ஒன்றும்வந் துன்னை அணுகாதே. 10

அன்றியும் உன்தம்பி மாருங் கடும்பசி
 ஆறிக் களித்திருப் பார்களன்றோ
இன்றினிச் செய்வதென் இவ்வுலகம் - விட்டு
 யாத்திரை போவது திண்ணம்' என்றார். 11

ஆனதனாலே கிடைத்த பொருளை - நாம்
 ஆகும் மட்டும்பகுத் துண்ணவேண்டும்
ஈனமாந் தன்னயத் தால்வருந் துன்பமே
 இன்ப மளிக்கும் பொதுநயமே. 12

அளவு கடந்திடில் ஆரமுதும் - விஷம்
 ஆகும் என்றுநம தான்றோர்கள்
உளபடியே சொன்ன வாக்கியத் துண்மையை
 உள்ளத்திற் கொள்ளுங்கள் தோழர்களே. 13

## 44. நெற்பானையும் எலியும்

பாட்டியின் வீட்டுப் பழம்பானை - அந்தப்
பானை ஒருபுறம் ஓட்டையடா
ஓட்டை வழியொரு சுண்டெலியும் - அதன்
உள்ளே புகுந்துநெல் தின்றதடா. 1

உள்ளே புகுந்துநெல் தின்றுதின்று - வயி(று)
ஊதிப் புடைத்துப் பருத்ததடா
மெள்ள வெளியில் வருவதற்கும் - ஓட்டை
மெத்தச் சிறிதாகிப் போச்சுதடா. 2

பானையைக் காலை திறந்தவுடன் - அந்தப்
பாட்டியின் பக்கமாய் வந்தவொரு
பூனை எலியினைக் கண்டதடா - ஓடிப்
போய்அதைக் கௌவியே சென்றதடா. 3

கள்ள வழியினிற் செல்பவரை - எமன்
காலடி பற்றித் தொடர்வானடா
உள்ள படியே நடப்பவர்க்குத் - தெய்வம்
உற்ற துணையாக நிற்குமடா. 4





## 45. முதல் துயரம்

*பிள்ளை*

முல்லை பூத்ததம்மா - இருவாட்சி
மொட் டவிழ்ந்ததம்மா
மல்லிகைப் பூவும் - மலர்ந்துநல்
வாசம் வீசுதம்மா ! 1

தும்பி பாடுதம்மா - கிளிபயில்
சோலை தேடுதம்மா
தம்பி எங்கேஅம்மா - விளையாடத்
தனியே நின்றேனம்மா ! 2

படரும் முந்திரியில் - கனிமிகப்
பழுத் துதிருதம்மா
தொடரும் வேனிலும் - நமக்கிங்கே
தொடங்கி விட்டதம்மா ! 3

சின்னஞ் சிறுபிஞ்சு - வெள்ளரியில்
    செழித் திருக்குதம்மா
கன்னிக் காய்பறிக்கத் - தம்பியையும்
    காணோ மேயம்மா! 4

அம்பொன் மாலைகள் - செடிபல
    அணிந்து நின்றஅம்மா
தம்பி இல்லாமல் - அழகவை
    தருவ தில்லையம்மா! 5

புனைந்த சித்திரம்போல் - வண்ணாத்திப்
    பூச்சி சுற்றுதம்மா
துணைவன் இல்லாமல் - யானும்அதைத்
    தொடர்ந்து செல்லேனம்மா! 6

வளர்த்த ரோஜாவும் - புதுமண
    மகிழ்ச்சி காட்டுதம்மா
அழைத்து வாராயம்மா - தம்பியும்
    அறிந்தி டானோஅம்மா? 7

தாய்

யார ழைத்தாலும் - அவன்செவிக்(கு)
    எட்ட மாட்டாதே
பாரில் நம்மைஅவன் - இனிவந்து
    பார்க்க மாட்டானே. 8

வாச மலரைப்போல் - வளர்ந்தவன்
வாடி விட்டானே
ஈசன் சந்நிதியில் - விளையாடி
இருக்கின் றனப்பா ! 9

பிள்ளை

குயிலைத் தேடானோ - கிளியொடு
கொஞ்ச வாரானோ
மயிலை நோக்கானோ - நம்மையெலாம்
மறந்தும் போனானோ ? 10

வேனிற் காலமெலாம் - நம்மையிங்கு
விட் டிருப்பானோ
யானும் என்னசெய்வேன் - தனித்தினி
இருப்ப தெப்படியோ ? 11

காலை மாலைதனில் - சிற்றோடைக்
கரையில் சோலைதனில்
சீலச் செல்வனொடு - சுற்றிநிதம்
திரிதல் போச்சுதையோ ! 12

இனிய கதையெலாம் - அவனைப்போல்
யாவர் சொல்வாரம்மா
கனியைச் செந்தேனை - இனிஎந்தக்
காலம் காண்பேனையோ ! 13

---

இவை பெலீஷியா ஹீமன்ஸ் என்ற அம்மையார் பாடிய ஆங்கிலப்பாடலைத் தழுவி எழுதப்பட்டவை.

## 46. ரோஜாவே ஏன் வாடுகிருய் ?



கள்ளன் வந்தான்
கள்ளன் வந்தான்
கதவை யுடைத்தான் -
வீட்டுக்
கதவை யுடைத்தான்.

கொள்ளை யிட்டென்
பொருளை யெல்லாம்
கொண்டு போய்விட்டான்
ஐயோ
கொண்டுபோய்விட்டான். 1

கத்திகட்டிக் காத்துநின்ற
காவ லாளரைப் - பல
காவ லாளரை
எத்திவிட்டுப் பறந்துசென்ருன்
என்ன மாயமோ - ஐயோ
என்ன மாயமோ. 2

காலைஎழும் கதிரவனும்
கண்ட தில்லையோ - இதைக்
கண்ட தில்லையோ
ஓலமிட்டும் கேட்கவில்லை
ஓடுகின்ருனே - ஐயோ
ஓடுகின்ருனே. 3

பூவுலகில் வாழ்ந்ததினிப்
போதும் போதுமே - எனக்குப்
போதும் போதுமே
தேவர்திரு வடிபணியச்
செல்லுகின்றேனே - இதோ
செல்லுகின்றேனே. 4

---

## 47. மூன்று விஷயங்கள்

கூவிப் பறக்குமொரு - கிளியினைக்
கூட்டில் அடைத்துவைத்தால்
தேவர் உலகமெல்லாம் - அதுசினத்
தீயை எழுப்பிடுமே. 1

மன்னிய சோலையிலே - ஒரு குயில்
வாடி வருந்துமெனில்
கின்னரர் கிம்புருடர் - தளர்ந்துதம்
கீதம் இழப்பாரையோ. 2

சிட்டுக் குருவிக்கேனும் - ஒருசிறு
தீங்கினைச் செய்பவரை
நட்டநல் நண்பராக - உலகமும்
நம்பிக்கை கொள்வதுண்டோ ? 3

---

இவை பிளேக் என்பவர் பாடிய ஆங்கிலப்பாடலைத் தழுவி எழுதப்பட்டவை.

## 48. ஒரு பறவையின் சிந்தனை

[முட்டையிற் கருவா யிருந்தபொழுது முட்டையினள வாகவும், கூட்டிற் குஞ்சா யிருந்தபொழுது கூட்டினளவாக வும், சிறு பறவையான பொழுது தழை கொடிகளாகவும், பெரும் பறவையாகி வெளியில் சஞ்சரிக்கத் தொடங்கியபின் இன்னதென்று உண்மை யறியாதபடி நீலநிறமாகவும் இவ் வுலகம் பறவைக்குத் தோன்றியது. அதுபோல, மனிதனும் பருவத்துக்கேற்ற அறிவுடையவனுயிருக்கிறுன். உலக அனு பவம் முதிரும்பொழுது உண்மைஞானம் உதயமாகிறது. இப்பாடல்களிலே பறவை தனது அனுபவத்தைக் கூறு கிறது.]

க. முட்டைக் கரு



ஆதியில் ஒருசிறு
வீட்டை அண்டியான்
ஏதுமங் கொருகுறை
யின்றி வாழ்ந்தனன்
ஓதுமிவ் வுலகுருச்
சிறுத்து ருண்டவோர்
சோதிவெண் நீல்நிறத்
தோடென்
றெண்ணினேன். 1

உ. கூட்டில் குஞ்சு

வீடிது வீழ்ந்திட
வேறு மோரிடம்
கூடியே சிலதினம்
குடியி ருந்தனன்
ஈடறு வையகம்
உலகம் என்அனை
நாடிய காப்பகம்
என்று நம்பினேன்.2



ங. இறகு முளைக்கும் சிறு பறவை

கண்ணுறு பொருளவை காண ஓர்தினம்
எண்ணிஎன் கூட்டரு கிறங்கி நின்றனன்
திண்ணிய உலகிலை தழையிற் செய்ததாம்
புண்ணிய மில்விழி பொருந்தினே னென்றேன். 3

ச. பறக்கும் பெரும் பறவை

முடிவினில் மரம்தழை முகடு தாண்டிவிண்
படுமெழில் நீல்நிறப் பரப்பைக் கண்டனன்
தொடுமுல குண்மையில் எங்ஙன் தோன்றுமோ
அடிமுடி அறிகிலன் அறிவர் யாவரே. 4

---

2. வையகம் - வைக்கோல் வீடு.

இவை ஒரு பழைய ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப் பட்டவை.

## 49. குதிரைகள் புலம்பல்

கற்றுத் தெளிந்தநல் மானிடரே - எம்மைக்
காக்கப் பிறந்த பெரியோரே
சற்றும் அறிவிலா எம்மொழிக்குச் - செவி
சாய்க்கத் திருவுளம் கொள்வீரே. 1

வளர்ந்து வரும்வாலை வெட்டிவெட்டித் - தேய்ந்த
மாறுபோ லாக்கிக் குறைத்திடும்நீர்
தளர்ந்த பொழுதெங்கள் ஈப்பகை ஓட்டிடத்
தக்க உதவிகள் செய்வதுண்டோ ? 2

இரும்புக் கடிவாளம் மாட்டுவதேன் - வாயை
ஈசன் படைத்த திதற்காமோ
பெரும்புவி மீதினில் உங்களுக்கும் - இந்தப்
பேதைகள் செய்த பிழைகளுண்டோ ? 3

வம்புகள் பேசிடும் வாயையன்றோ - பூட்டி
வைப்பது நீதி முறையாகும்
நம்பி யிருப்போர்க்குத் துன்பம் இழைப்பது
நல்லோர் பெரியோர் செயலாமோ ? 4

வெள்ளிப்பூண் கட்டிய சேணமிட்டால் - நெஞ்சு
வேதனை யில்லா திருந்திடுமோ
அள்ளி யிடும்பிடிப் புல்லுக்காக - எங்கள்
ஆவியைக் கொள்வ தழகாமோ ? 5

பக்கம் திரும்பியே பார்த்திடாமல் - எங்கள்
பார்வையைக் கட்டி மறைப்பதுமேன்
திக்கெலாம் தந்த பிரமனிலும் - நீவிர்
தீவிர புத்தி உடையவரோ ? 6

திண்ணிய லாடமும் கட்டுவதேன் - அதில்
தீயெழ எம்மையும் ஓட்டுவதேன்
புண்ணியம் நீர்செய்ய வேண்டாமையா - எம்மைப்
போக்கிலே விட்டிடில் போதுமையா. 7

எண்ணிக்கை அற்றதோல் பட்டைகளைக் - கட்டி
எம்மீ திறுக்கி முறுக்கிவைப்பீர்
கண்ணுக் கழகவை ஆயிடினும் - எங்கள்
கண்டம் நெரிவ தறியீரோ ? 8

பற்றி முதுகினில் ஏறிக்கொள்வீர் - எம்மைப்
பட்சிகள் போலப் பறக்கச்செய்வீர்
சற்றும் இரக்கம் இலாதவரோ - நீங்கள்
சாத்திரம் கற்ற பயன்இதுவோ ? 9

ஈசன் அளித்தகால் இரண்டிருக்க - நீரும்
எங்கள் குறுக்கை முறிப்பதேனோ
தாசரைப் போல்வேலை செய்திடினும் - தயை
சற்றும் உமக்கு வருவதுண்டோ ? 10

கையில் சவுக்கொன்று போதாதென்றே - இரு
காலிலும் முட்கலைக் கட்டிக்கொண்டீர்
ஐயையோ ஏழையேம் ஆவி பறித்திட
ஆயிரம் கூற்றுவர் வேண்டுமேயோ ? 11

வண்டியில் கொண்டெமை மாட்டுகின்றீர் - காலை
மாலையெலாம் தட்டி ஓட்டுகின்றீர்
நொண்டினு லும்விட்டுப் போகமாட்டீர் - உடல்
நோவ அடித்து வெருட்டுகின்றீர். 12

மோட்டார் வண்டிவந்தும் மோட்சமில்லை - நாங்கள்
முன்செய்த தீவினைக் கென்செய்குவோம்
ஏட்டா லெழுத அடங்கிடுமோ - கஷ்டம்
யாரிடம் சொல்லி அழுதிடுவோம் ? 13

கோடிகோடி ஸைக்கில் வந்திடினும் - எங்கள்
கூட்டத்துக் கேதுமோர் நன்மையுண்டோ
ஓடிஓடி உயிர் ஓய்ந்திடவோ - எம்மை
உண்டாக்கி விட்டான் உடையவனே ? 14

மேடு பள்ளங்களில் ஓடவேண்டும் - வெய்ய
வேனில் மழைகளில் ஓடவேண்டும்
காடு செடிகளில் ஓடவேண்டும் - இந்தக்
கஷ்டங்கள் யாரிடம் சொல்வோமையா ? 15

கொட்டகைக் கூடாரம் போட்டுக்கொள்வீர் - அதில்
கூத்தாடிக் கூத்தாடி ஓடச்சொல்வீர்
பட்டினி யாக இறந்திடினும் - இந்தப்
பாடெவர் பட்டுப் பிழைப்பரையோ? 16

ஆங்காரத் தாலும்பே ராசையாலும் - நீங்கள்
அண்டை அரசரைப் போர்க்கிழுத்தால்
தாங்காத் துயரெலாம் தாங்கிச்சலித்து - யாம்
சாவதும் எங்கள் தலைவிதியோ? 17

காலினைப் பாறியே நிற்கவொட்டீர் - வாயிற்
கௌவிய புல்லையும் தின்னவொட்டீர்
மூலை முடுக்கென்றும் எண்ணமாட்டீர் - எம்மை
மூச்சு விடாமல் துரத்துவீரே. 18

ஆழக்குக் காணம் அளித்திடுவீர் - அதற்(கு)
ஆயிரம் வேலையும் இட்டிடுவீர்
ஏழைக் கிரங்கெனும் நீதிமொழி - நீங்கள்
ஏட்டில் படித்ததை ஏன்மறந்தீர்? 19

சித்தம் இரங்கிட வேண்டுகின்றோம் - எம்மை
க்ஷேமமாய்க் காத்திடக் கெஞ்சுகின்றோம்
புத்த முனியருள் போதனையை - என்றும்
போற்றுதல் உங்கள் கடனுமே. 20

# 50. புல்

[புல் தனது சரிதத்தைத் தானே கூறுகிறது.]

பசும்புல் என்பெயர். பட்ட பாடெல்லாம்
ஒருபெருங் கதையாம். உரைப்பதும் எளிதோ?
விரிவிடம் படுமொரு வீட்டின் முன்றிலில்
வளர்ந்தேன். அங்குள மனிதரோ கொடியர்.
தத்தம் மக்களும் தாமுமே என்றும்
பெற்றுப் பெருகிப் பெருங்குடி யாகி
வாழக் கருதுவர். வருத்திட லென்? அவர்
வாயிற் படியில் வாடி வணங்கி
வயிற்றிற் கின்றிநா வறண்டு 'தண்ணீர்
தண்ணீர்' என்று தவித்துத் தவித்து
வாணா ளெல்லாம் வருந்தி நொந்தேன்.
குடிக்க நீரும் கொடுத்திலர் பாவிகள்.
விண்ணி லிருப்பினும் மண்ணில் யான்படும்
வருத்தமும் வாட்டமும் கண்டவ் வானம்
அளித்த தமுதம்; ஆர வுண்டனன்.
விசும்பில் துளிகள் வீழி னல்லால்
பசும்புல் தலையிப் பாரிற் காணுமோ?
மனிதரும் போற்றி வாழ்வமோ யாமும்?
கேளீர் கதையினும்: கிடைத்த நீரை
அருந்திப் பலநாள் அயர்வும் நீங்கித்
தெளிந்து நிமிர்ந்தேன். சிறிதென் உடலில்

பச்சையும் பிடித்தது. பார்த்தனர் பாவிகள்.
தரிக்கிலர் உள்ளம். தழைக்கும் தலையைக்
காலால் மிதித்தனர் கழுத்தையும் அறுத்தனர்.
ஆட்டையும் மாட்டையும் அடித்து மேய்த்தனர்.
படர்ந்த இடமெலாம் பாழே யாக்கினர்.
இருந்த இடமும் இல்லா தியற்றினர்.
உயிரும் உடலும் குறுகி ஒருசிறு
வேராய்த் தரையுள் வெகுநா ளாக
ஒளித்திருந் தேன். அவ் வுறைவிடந் தேடி
வான்மழைத் தோழன் வந்தெனைக் கண்டு
'மனிதன் செயலால் வலியிழந் தனையோ ?
என்துணை யிருக்க இடருனக் குண்டோ ?
அறிவிலி போலும்நீ ! அஞ்சேல் அஞ்சேல்.
யாவையும் காப்பவன் ஈசன்' என்றெலாம்
தேற்றிய மொழியெனக் ஊற்றமும் உறுதியும்
பெரிதும் அளித்தது. பெயர்த்தும் மெலமெலத்
தலையெடுத் தேன்அதைத் தறுகணர் கண்டு
பிடித்தனர் வெட்டினர் பிடுங்கி எறிந்தனர்
சாணியைக் கரைத்துத் தலையில் கொட்டினர்
துடைப்பங் கொண்டு துரத்தி யடித்தனர்.
யாவும் சகித்தங் கிருந்தனன். என்செய்வேன் ?
தளர்ச்சி யுற்றிலேன். தகும் நற்காலம்
வருமெனச் சற்று மறைந்து தங்கினேன்.
ஐவரை விடயான் அதிபல சாலியோ ?
மறைந்து சின்னாள் வாழுங் காலை,
ஒருதினம் வீட்டில் உள்ளார் அனைவரும்
உறவினர் இருக்கும் ஓரூர் சென்றனர்.

வெகுநா ளாகியும் மீண்டிலர். யானும்,
இதுவே தருணம் என்று நினைத்து,
விரைவின் வளர்ந்து, விரும்பிய படியெலாம்
தழைத்துச் செழித்துச் சார்விட மெங்கும்
படர்ந்து பற்றிப் பல்கிளை யாகி,
வாய்த்தஇவ் வித்தாம் மக்களைப் பெற்று
வாழ்ந்திருக் கின்றேன். மற்றவர் வாழும்
வீட்டையும் இடித்து விடும்வலி இந்நாள்
எனக்குண் டாயினும், இழிவென விடுத்தேன்.
இணங்கி யிருப்பவர் பிணங்கிப் பிரியவும்
பிணங்கிப் பிரிந்தவர் இணங்கிக் கூடவும்
செய்வினை என்போல் செய்ய வல்ல
மந்திர வாதியிவ் வையகத் துண்டோ?
செய்பிழை யாவும் தெரிந்து பொறுத்தேன்.
பொறுத்தவர் என்றும் பூமி யாள்வார்.
எனக்குச் சொந்த மில்லா இடமெதாம்?
புல்லே யாயினும் புல்லிய குணமிலை.
அற்பர் இகழினும் அறிவால் பொறுப்பேன்.
தலையில் மிதிப்பினும் தயவால் சகிப்பேன்.
முயற்சி கைவிடேன். முயற்சி கைவிடாத்
திறமுடை யோரைத் திருமகள்
பெரிதும் உவந்து பேணமுன் நிற்குமே.

## 51. மலையும் அணிலும்

‘அற்பத் திருடா’ என்றெனை யழைத்த
வெற்பே! யானும் விளம்பக் கேளாய்.
அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரு வண்மையும் உனக்கென்(று)
உரைமொழி முற்றும் உண்மையே. ஆயின்,
ஒருவகைப் பொருளின் ஒருல காமோ
ஒருவெயில் மழையின் ஓராண்டு தேறுமோ?
பற்பல பொருளும் பற்பல பருவமும்
ஒன்றாய்க் கூடினே உலகாம், ஆண்டாம்.
ஆதலின், யானிவ் வகிலமீ துதித்தே
இருப்பதை இழுக்கா எண்ணவும் மாட்டேன்.
என்தொழில் இயற்றவும் யாவர் வேறுளார்?
உன்பெரும் உருவெனக் கில்லை. உனக்கும்,
என்சிறு வடிவிலை. மேலும், என்றன்
உள்ளக் களிப்பில் உற்று நோக்கில்
எள்ளத் தனையும் உனக்கிலை யிலையே.
அணிற்பிளை சாடி ஓடி அலைந்து
விளையா டற்கு விரிவிடம் பெறுவாய்.
ஐய மிதற்கிலை. அடலும் ஆற்றலும்
ஒவ்வொரு வர்க்கும் ஒவ்வொரு விதமாம்

---

இது எமெர்ஸன் என்பவர் செய்த ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதப்பட்டது.

அறத்தொடும் முறையொடும் ஆழ்ந்த அறிவொடும்
அனைத்துமிவ் வுலகில் அமைக்க லாயின.
வனங்களை முதுகில் வகித்து நின்றிட
வல்லைநீ யாயின், மற்றிங் கெனைப்போல்
நெல்லைக் கொறிக்க நின்னா லாகுமோ?
யாவரே பெரியர் யாவரே சிறியர்?
ஒன்றிற் பெரியர் ஒன்றிற் சிறியராம்.
ஒன்றிற் சிறியர் ஒன்றிற் பெரியராம்.
ஆதலின், அற்பர் ஆகா தவரென
ஓதுதல் மடமையின் சாதனை யாமே.

---

## 52. குருட்டுப் பையன்

[கண் தெரியாததால் குருடர் மிக்க மனவருத்த முடையவராய் இருப்பரென்று நாம் எண்ணுகிறோம். ஆனால், பிறவிக் குருடர் பார்வை இன்னதென்று ஒரு பொழுதும் அறியப் போவதில்லையாதலின், அவர் கண்ணில்லாமையை ஒரு குறையாக எண்ணாமல், பின்வரும் பாட்டிற் கூறியுள்ள குருட்டு வாலிபனைப் போல எண்ணவும் கூடும். இந்தப் பாட்டு காலே ஸிப்பர் என்பார் செய்த ஆங்கிலக் கவியைத் தழுவி எழுதப்பட்டது.]

இப்பிறப்பில் ஒருபொழுதும் எனக்கறிய முடியா
திருக்குமொளி என்பதென்னை இருவிழியி னடையும்
ஒப்பரிய நன்மைகள்இக் கண்கெட்ட சிறியேன்
உணரும் வண்ணம் உரைத்திடுவீர் உற்றஉற வினரே.

அனுதினமும் கண்காட்சி அற்புதங்கள் பேசி
அகங்களிப்பீர் ஆதித்தன் சோதிமயம் என்பீர்
எனதளவில் வெம்மையெனத் தோற்றுமிவன் செயலால்
இரவுபகல் மாறிவரல் எங்ஙன்அறி யேனே. 2

பாடிவிளை யாடுபொழு துறங்குபொழு தல்லால்
பகற்பொழு திராப்பொழுதிப் பகுப்பெனக்கு முண்டோ
நாடியுணர்ந் திருக்கநிதம் கூடுமெனில் எனக்கிந்
நானிலத்தில் ஓயாத பகலாகு மன்றோ? 3

...மபடியும் வானமென்றும் வில்லென்றும் வர்ண
வகையென்றும் மனமகிழ்ந்து வனப்புரைகள் தருவீர்
ஐவகையிப் பொறியிருக்க வேறுபொறி யுறுமேல்
அறியுலக மாட்சியெலாம் அளவிடவும் எளிதோ? 4

உலகிலெனக் குற்றபெருங் குறைநோக்கி நீவிர்
உளம்வருந்தல் பன்முறைநெட் டுயிர்ப்பொடுகேட்டறிவேன்
அலகிறந்த பொறுமையக மிருக்கஒரு நாளும்
அறியமுடி யாதகுறை அனுபவிப்ப தரிதோ? 5

ஒருகாலும் நீக்கமுடி யாதகுறை வந்தென்
உளத்திலெழும் பெருங்களிப்பை அழித்திடலா காதே
வருபாடல் இதுவழுத்து பொழுதேழைக் குருட்டு
வாலிபனு யிருப்பினுமோர் மகராசன் யானே. 6



# 53. செல்வமும் சிறுமையும்

## க. செல்வச் சிறுமியர் களிப்பு

பாகமாகச் செய்த பண்டமுண்போம் - நன்றாய்ப்
பக்குவம் வந்த பழங்களுண்போம்
தாகமா றல்பல பானகமும் - தாயார்
தந்திட உண்டு மகிழ்ந்திடுவோம். 1

காலத்துக் கேற்ற உடையணிவோம் - வாசம்
கட்டிய சந்தனம் பூசிடுவோம்
கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுத்து - மலர்
கூந்தலிற் சூட்டி அழகுசெய்வோம். 2

பந்துகள் ஆடிப் பழகிடுவோம் - கழல்
பாங்கியர் தம்மொடும் ஆடிடுவோம்
சந்தமெழக் கும்மி பாடிடுவோம் - சுற்றிச்
சப்பாணி கொட்டிச் சிரித்திடுவோம். 3

ஓடி ஒளித்துக் களித்திடுவோம் - நாங்கள்
ஒற்றை இரட்டையும் வைத்திடுவோம்
நாடியே வட்டுகள் ஆடிடுவோம் - தோழி
நாணக்கண் பொத்தி நகைத்திடுவோம். 4

உன்னி யெழும்ஊஞ்சல் ஆடிடுவோம் - கேட்போர்
உள்ளம் குளிரவே பாடிடுவோம்
சின்னஞ் சிறுவீடு கட்டிடுவோம் - அதில்
சித்திர வேலைகள் செய்திடுவோம். 5

பத்துப் பசுக்களெம் வீட்டிலுண்டு - நல்ல
பாலுக்கு யாதொரு பஞ்சமில்லை
நித்தம் சுகமாக வாழ்ந்திடுவோம் - இந்த
நீணிலத் தெம்மையொப் பாருமுண்டோ. 6

உ. ஏழைச் சிறுமியர் மனப்புழுக்கம்

நல்லபண் டங்களைக் கண்டறியோம் - ஒரு
நாளும் வயிருர உண்டறியோம்
அல்லும் பகலும் அலைந்திடுவோம் - பசி
ஆற வழியின்றி வாடிடுவோம். 7

அன்னப்பால் காணுத ஏழைகட்கு - நல்ல
ஆவின்பால் எங்கே கிடைக்குமம்மா
என்னப்பா யாம்படும் பாட்டையெல்லாம் - சென்று
யாரிடம் சொல்லி அழுவோமம்மா. 8

இட்டெலி ஐந்தாறு தின்றேமென்பீர் - நீங்கள்
ஏதும் கருணை யிலீரோஅம்மா
பட்டினி யாக இறந்திடினும் - நாங்கள்
பாவம் பழிசெய்ய மாட்டோமம்மா. 9

தேயிலை தேயிலை என்பீரம்மா - இது
தேக்கிலை தானே தெரியாதம்மா
வாயும் வயிறும் நிறைந்திடுமோ - இதில்
வைத்த அமுதும் திகைந்திடுமோ. 10

காப்பி காப்பியென்று கத்துவீரே - அதைக்
கண்ணுலே கண்டது மில்லையம்மா
சாப்பிடற் கேற்ற உணவிதுவோ - அன்றிச்
சட்டையோ தொப்பியோ கூறுமம்மா. 11

---

9. இட்டெலி ஒரு பலகாரவகை என்றறியாமல், ஒரு எலி வகை என்று எண்ணிச் சிறுமியர் கூறுகிருர்கள்.

ஆனைக் கொம்பன்சாதம் உண்டோமென்பீர் - இதை
ஆரே உலகினில் நம்பிடுவார்
தேனைப் பழித்த மொழியுடையீர் - எம்மைத்
தேராத பித்தரென் றெண்ணினீரோ. 12

சோப்புச் சோப்பென்று புகழ்ந்திடுவீர் - அது
சுட்டுக் கடிக்கும் கிழங்கதுவோ
காப்புக் கைவீசி நடப்பவரே - அதன்
காரியம் சற்றே உரைப்பீரே. 13

ஆனி ஆடிமாதக் கொந்தலிலே - மந்தை
ஆடுகள் போலக் கொடுகிநிற்போம்
வேனிலில் வெந்துடல் வேர்த்திடவே - வெயில்
வேளை அலைந்து திரிந்திடுவோம். 14

சுற்றிய கந்தை ஒருமுழமாம் - அதில்
தோன்றிய பீறலும் ஆயிரமாம்
பற்றும் அழுக்கினைப் போக்கவென்றால் - உடை
பஞ்சு பஞ்சாகப் பறக்குமம்மா. 15

ஈரோடு பேனுக் கிடமாச்சு - கூந்தல்
ஈந்தஞ் செடியது போலாச்சு
வாரி முடிப்பது மில்லையம்மா - எண்ணெய்
மாத மூன்றாக அறியாதம்மா. 16

புண்ணும் சிரங்கும் நிறைந்ததம்மா - அதில்
போட மருந்தும் கிடையாதம்மா
கண்ணில் உறக்கமும் இல்லையம்மா - எங்கள்
கஷ்டம் அறிபவர் உண்டோஅம்மா. 17

## 54. எனது சுகதுக்கங்கள்

க

வான வெளிதனிலே - கவிந்தெழு
மாலைப் பொழுதினிலே
கூனப் பிறைவரவே - சிவன்திருக்
கோலம் தெளிவேனடி. 1

முற்றிய ஆழியிலே - அலைவந்து
மோதி எறிகையிலே
கற்றைக் கதிரெழவே - உமைதிருக்
காட்சி வியப்பேனடி. 2

தாமரைப் பொய்கையிலே - கதிரொளி
தட்டுமவ் வேளையிலே
பூமலர்ந் தோங்கிடவே - ஹரியென்று
போதம் நயப்பேனடி. 3

மாமலைச் சாரலிலே - மதமிகு
வாரணக் கூட்டத்திலே
காமலர் சிந்திடவே - கணேசரென்
கண்முனே நிற்பாரடி. 4

மேட்டு நிலங்களிலே - தினைக்கதிர்
விம்மி விளைகையிலே
காட்டு மயில்வரவே - குகனுமென்
காதல் விளைப்பாரடி. 5

உ

காவுயர் சோலையிலே - பசுவொடு
கன்று களிக்கையிலே
தாவிப் புலிவிழவே - வருந்துயர்
தாங்க முடியவில்லை. 6

புல்வளர் கானத்திலே - கலையினம்
பொங்கிக் குதிக்கையிலே
கொல்கடு வாய்வரவே - நெஞ்சத்தில்
கூரம்பு பாய்ந்ததடி. 7

குஞ்சரக் கூட்டத்திலே - ஒன்றையொன்று
குத்திப் பொருகையிலே
வெஞ்சின மாவரவே - அதிலுள்ளம்
வெம்பி யழிந்ததடி. 8

வானுயர் காவினிலே - மதுவினை
வண்டுகள் சேர்க்கையிலே
கானவர் வந்திடவே - உதிரமென்
கண்கள் சொரிந்ததடி. 9

தேரைகள் ஓடையிலே - இனத்தொடு
சேர்ந்து மிதக்கையிலே
நாரைகள் வந்திடவே - பாவிமனம்
நைந்து குழைந்ததடி. 10



## 55. சுவாமி இராமதீர்த்தரின் போதனைகள்

ஓய்ந்து சோம்பி உறங்கா தேயடா
ஊக்கம் பெருக உழைத்துமுன் னேறடா
வாய்ந்த தொழிலில் மலையா தேயடா
மனமதி லொன்றி மகிழ்ச்சி கொள்ளடா. 1

ஐயம் அடர்ந்துளம் அழியா தேயடா
அமைதி எந்நாளும் அடைந்திருப் பாயடா
நையப் பிரித்து நலியா தேயடா
நாடி இணக்கி நல்லுருப் படுத்தடா. 2

மன்னிய மாமூல் வழுத்தியென் பயனடா
வாழ்நாட் கிசைய வாழ்வு வளரடா
உன்னிப் பகட்டுரை உரைத்தென் பயனடா
உள்ளத் துணர்ச்சி ஊன்றி உணரடா. 3

கற்பனைக் குதிரை கடவுதல் ஒழியடா
காரியம் பொருளிற் கண்டு தெரியடா
விற்பனர் விதிகளை விளம்புதல் வீணடா
வினையில் விளைந்த விவேகம் காணடா. 4

உயிரிலா மேற்கோள் உரைப்ப தேனடா
உற்றவாழ் வின்பயன் உணர்ந்திங் கெய்தடா
வியனுல கத்தில் நலந்தரும் அனுபவ
வேதாந் தத்தின் மெய்ப்பொருள் ஈதடா. 5

---

## 56. ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள்

நாமே நமக்குத் துணையானால்
நாடும் பொருளும் நற்புகழும்
தாமே நம்மைத் தேடிவரும்
சற்றும் இதற்கோ ரையமுண்டோ. 1

நெஞ்சிற் கருணை நிறைந்தவர்க்கு
நேயம் கொண்ட நெறியோர்க்கு
விஞ்சும் பொறுமை யுடையவர்க்கு
வெல்லும் படைகள் வேறுளவோ. 2

உள்ளந் தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்
பள்ளம் உயர்மே டாகாதோ
பாறை பொடியாய்ப் போகாதோ. 3

சாதி சாதி என்றுநிதம்
சண்டை போட்டு மண்டைகளை
மோதி மோதி யுடைப்பதொரு
மூடச் செயலன் றுணரீரோ. 4

வாட்டும் உலகில் வழுத்தரிய
வாழ்க்கைத் துணையாம் மங்கையரை
ஆட்டும் பொம்மை அடிமைகளாய்
ஆக்கி வைப்ப தழகாமோ. 5

கால நதியின் கதியதனில்
கடவுள் ஆணை காண் பீரேல்
ஞால மீது சுகமெல்லா
நாளும் அடைந்து வாழ்வீரே. 6

---

## 57. வாழ்க்கை நிலையாமை

கருணையின்றி மனிதருள்ளம் கருங்கல் லான
காரணத்தி னால்வந்த கஷ்டந் தன்னை
வருணனையால் வேலையில்லாத் திண்டாட் டத்தால்
வந்தவினை யென்றுலகில் வழுத்து வாரால்
பொருளையெலாம் இறந்தவர்கள் யாவ ரேனும்
பொக்கணமாய்க் கட்டியெடுத் தோடி னாரோ
இருளொளி என்பவர்முன் பேச்சு முண்டோ
ஏழையுரை அம்பலத்தில் ஏறு மேயோ. 1

ஏகாந்தம் யாவர்க்கும் இசைய மாட்டா(து)
எந்நாளும் கூடியே வாழ வேண்டும்
சாகாத வரம்பெற்றார் எவரு மில்லைத்
தளர்ந்தவரைத் தாங்குவதே தரும மாகும்
ஆகாய மளவுயர்ந்து வளர்ந்து நின்ற
அரண்மனையும் அரைநொடியில் அழியுமென்று
பீகாரால் கொற்றாவால் அறியார் இந்தப்
பேருலகிற் பின்னெதனால் அறிவா ரையா. 2

2. பீகார், கொற்றா: பீகாரிலும் குவெட்டாவிலும் நேரிட்ட பூகம்பங்கள்.

## 58. நினைவும் முடிவும்

'இருளும் அகலும் இரவியும் தோன்றும்
பொருவிலித் தாமரைப் பூவும் மலரும்
மலரும் பொழுதிவ் வன்சிறை நீங்கி
உலகில் எங்கும் உலவித் திரிந்து
பூவெழு பற்பல புதுவனங் கண்டு
நாவெழு சுவைதரு நறைமிக உண்டு
வாழ்குவன்' என்றொரு மதுகரம் இருப்பத்
தாழ்மத வேழமொன் றூழ்கயம் இறங்கிப்
பாசிலை பூவெலாம் பறித்து
வீசி எறிந்து வெறிகொண் டதுவே.

இது வடமொழிப் பாடலொன்றைத் தழுவி எழுதப் பட்டது.

---

## 59. உத்தம ஜீவிதம்

கருத்திலெழும் அரியவுருக் கவின்கொளநற் சிலையிற்
கண்காணக் காட்டிடவே கைவருந்தி நாளும்
அருத்தியொடு மெய்த்தளர்வும் அகத்தளர்வும் பாரா(து)
ஆமளவு முயன்றிடுவர் தோமறுசிற் பியரே. 1

அருமையிலும் பெருமையிலும் அழகியதன் மையிலும்
அகத்திலெழுந் தொளிர்வடிவம் புறத்தமைக்கச் சமைந்தே
உரிமைபெறும் ஓவியமும் உருவாக்க வல்லார்
உறுதுயரும் படும்பாடும் உலகிலெவர் அறிவார்? 2

பெருமைபெறு திருக்கோயில் பெட்புறவே அமைக்கும்
  பேராளன் அத்தளியின் பெரியசின கரங்கள்
ஒருமைகொள உயர்வானம் உறுமளவும் எழவே
  உயிர்வாழும் நாள்முழுதும் உதவிடினும் வருந்தான். 3

இமையவரின் உலகுதனில் இருந்துவரு மருந்தால்
  இதயமதில் எழுமினிய இறும்பூதின் மயமாய்
அமையவொரு கவிபாட அரியபெரும் புலவர்
  அடைவருத்தம் செல்காலம் அணுவேனும் மதியார். 4

கல்லுருவும் பொடியாகும் காண்படமும் மங்கும்
  கண்களிக்கும் திருத்தளியும் மண்குளிக்கும் திண்ணம்
சொல்லினொரு நூறாண்டு செல்லுவதும் அரிதாம்
  சொந்தமெனப் புலவர்தரு சந்தமுறு கவியே. 5

சீவிதத்தை விதியதனைத் திறமுறவே திருத்தும்
  திவ்வியநல் சீவாத்ம சிற்பியரும் யாமே
மூவுலகில் எக்காலும் மூவாத பொருளில்
  முயற்சியொடு பயிற்சிதரும் மொய்ம்புடையோர் யாமே. 6

ஆதலால் எந்நாளும் அழியாத பொருளாம்
  ஆன்மாவை மேம்படுத்தி அறநெறியில் நின்று
தீதெலாம் அறஒதுக்கித் திருவருளும் பெற்றுச்
  சிவஞானச் செல்வரெனத் தினம்வாழ வோமே. 7

---

3, 5. தளி - கோயில்.

## 60. அழியா உயிர்ப்பு

ஓதற் கரியதாம் ஊழி காலப்
புழுதியில் அழியுமிப் புல்லாங் குழலினை
எறிந்தனன். காந்தனே, இரங்கிநீ அதனை
எடுத்தெனை நோக்கி, எளிய சிறியஇக்
கருவியுள் ஈறிலாக் காலமென் ஆவி
தவழ்ந்திடும் என்னச் சாற்றினை. யானும்,
தேர்ந்தொரு செயலும் செய்திடா ததனை
அந்நாள் முதலாப் பின்னாள் என்றும்உன்
கையடைப் பொருளாய்க் காத்திட வைத்தனன்.
அற்புத மூர்த்திநின் அருளால் இன்றதில்
மன்னுப சாந்தமும் வைராக் கியமும்
இடையீ டின்றி எதிரொலி செயுமே.
துன்பம் அடர்ந்து தொடருமிவ் வாழ்வில்
இன்ப வசந்தம் எழில்பெற வந்து
மலர்வது கண்டு மனம்மகிழ் வுறுமே.
சிற்பர்க் குயிராம் சிற்பனே! உன்றன்
அழகிய வடிவம் அடியனேன் உடலச்
சிலையில் இனிது தெரியச் செய்தனை.
வையகம் போற்றுந் தெய்விக நண்ப !நின்
பூரணக் காதலே பொங்குவ தென்னுளே.
அலைகளில் ஓரலை யானும் ஆயினேன்.
கவிதையஞ் செல்வி களிப்பொடு வந்தென்
நாவிலே நின்று நடம்புரி கின்றாள்.
உள்ளத் தமுதம் ஒழுகத்
தெள்ளிய கீதம்இச் செவிக்கமு தூட்டுமே.

---

சுவாமி சுத்தானந்த பாரதியார் பிரெஞ்சு மொழியில் செய்த ஒரு கவியின் கருத்தையொட்டிப் பாடப்பட்டது.

## 61. உமார்காயம் பாடல்கள்

[கி. பி. 12-ம் நூற்றுண்டின் மத்தியிலே பாரசீகத்தில் உமார்காயம் என்ற அறிஞரொருவர் வாழ்ந்தார். அவர் சிறந்த கணித விற்பன்னராயும் அரிய கவிஞராயும் இருந்தார். ஐந்நூறு பாடல்களடங்கிய ருபையத் என்ற ஒரு கவிதைத் தொகுதியை அவர் இயற்றியிருக்கிறார். அதை எட்வர்ட் பிட்ஸ்ஜெரால்ட் என்ற ஆங்கில ஆசிரியர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து 1859-ம் ஆண்டில் வெளியிட்டார். பின்வரும் பாடல்கள் இந்த மொழிபெயர்ப்பிலுள்ள சில பாடல்களின் கருத்தைத் தழுவிச் செய்யப்பட்டவை.]

காலைச் சிறுவன் கல்லினைஅக்
கங்குற் பானை யகமிட்டான்
நீல வானின் மீனெல்லாம்
நில்லா தோடி ஒளித்தனவே
தாலத் தொருகீழ்த் திசைவேடன்
தாங்கும் கதிரின் கண்ணிகளால்
சீலக் கோமான் திருக்கோயில்
சிகரம் கொண்டான் காணீரோ. 1

அருண னுதிக்கும் வேளையிலே
ஆரோ அந்தச் சாலையிலே
'மருவும் வாழ்வின் கிண்ணமது
வற்றி வறண்டு போகும்முனம்
பருக மதுவைத் தாரீரோ
பாய்விட் டெழுந்து வாரீரோ
அருமை மங்கை மாரே'என்(று)
அழைத்தல் கேட்டேன் அறிவீரே. 2

காகம் கரைதல் கேளீரோ
கதவைச் சற்றே திறவீரோ
ஆக இரண்டு கணப்பொழுதுக்(கு)
அப்பால் இங்கே தங்கோமே
தேகம் அலுத்துச் செல்வோமே
சென்றால் மீண்டு வாரோமே
வாகி னமைந்த சாலையிதன்
வாயில் காக்கும் காவலரே. 3

வாராய் நண்பா! வருத்தமெனும்
வாடைக் காலப் போர்வையினை
நேரா வருமிவ் வசந்தமெனும்
நெருப்பில் வீசி எறிவாயே
தேரா வாழ்வின் பறவையினும்
செல்லுந் தூரம் சிறிதேயாம்
பாராய் பாராய் பறவையதோ
பறக்கச் சிறகும் விரித்ததடா. 4

புலர்ந்து விடியும் பொழுதினிலே
பொய்கைக் கரையஞ் சோலையிலே
மலர்ந்து நல்ல மணம்வீசி
மகிழும் மலர்கள் ஆயிரமாம்
உலர்ந்து வாடிச் சேற்றினிலே
உதிரு மவையும் ஆயிரமாம்
கலந்த உலக வாழ்வை இதில்
கண்ணுற் கண்டு தெளிவாயே. 5

வெய்யிற் கேற்ற நிழலுண்டு
　　வீசுந் தென்றற் காற்றுண்டு
கையிற் கம்பன் கவியுண்டு
　　கலசம் நிறைய மதுவுண்டு
தெய்வ கீதம் பலவுண்டு
　　தெரிந்து பாட நீயுமுண்டு
வையந் தருமிவ் வனமன்றி
　　வாழும் சொர்க்கம் வேறுண்டோ. 6

சிரித்த ரோஜா மலரைப்பார்
　　செப்பும் இனிய மொழியைக்கேள் :
'அருத்தி யோடிவ் வுலகில்வந்(து)
　　அழகார் நந்த வனமதிலே
பரித்த பட்டுப் பைகிறிப்
　　பைம்பொன் நிதியைப் படிமீது
விரித்து வீசி எங்கெங்கும்
　　விதைத்துச் செல்வேன்' என்றிடுமே. 7

நினைப்பு நீண்டு தழைத்துவரும்
　　நீறி வெந்து சாம்பருமாம்
அனைத்தும் பாலை வனத்தினிலே
　　அமையும் பனிபோல் அரைநொடியில்
மனத்தில் தோன்றி நிலையாது
　　மாண்டு மறைதல் உண்மையதாம்
எனைத்து நூலின் வலியாலும்
　　இதனை மறுக்க இயலாதே. 8

பாரி போலக் கொடுத்தவரும்
பணத்தைப் புதைத்து வைத்தவரும்
தேரின் மண்ணாய்ப் போனதலால்
செம்பொன் னான தறியோமே
ஊரில் அவர்தம் உடலையெடுத்(து)
உரையும் நிறையும் காணாரே
ஓரும் உள்ளத் துண்மையிதை
ஊன்றி நோக்கி உணர்வாயே. 9

வையம் பழைய அரண்மனையாம்
வாயில் இரவு பகலேயாம்
மெய்யின் இங்குக் கொலுவிருந்து
விதித்த காலம் அரசாண்டு
செய்ய மணிமா முடிவீழச்
சென்ற மன்னர் எண்ணிலரால்
ஐய! இதனை உள்ளத்தில்
ஆழ்ந்து காணல் அறிவாமே. 10

கொற்ற மன்னர் முடிசூடிக்
கொலுவில் அமர்ந்த திருக்கோயில்
முற்றுங் கூகை ஆந்தையொடு
முதுபேய் வாழும் காடாமே
வெற்றி வில்லை ஏந்திமுனம்
வேட்டை செய்த வேடன்கை
பற்றி நரிகள் இழுப்பதையும்
பாரில் கண்ணுற் பார்ப்போமே. 11

9. பாரி - கடைஎழு வள்ளல்களில் ஒருவன்.

பாயும் வாய்க்கால் அருகிலெழும்
பசிய கோரை அழகினைப்பார்
சாயும் வேளை மெதுவாகச்
சாய்நீ அப்பா சொல்கின்றேன்
ஆயின் இதுவும் முன்னுளோர்
அழகின் செல்வி அனுதினமும்
நேய மாக நெய்பூசி
நீட்டி வளர்த்த பூங்குழலே. 12

நின்ற துயரம் நீங்கிடவே
நேருந் துயரம் மாறிடவே
இன்றிக் கிண்ணம் நிறையஎனக்(கு)
இனிய மதுநீ வார்த்திடம்மா
அன்றி நாளைக் கென்பாயேல்
அந்த 'நாளை' வருமுன்னம்
சென்ற கோடி ஆண்டுகளில்
சேர்ந்தொன் றாகிப் போவேனே. 13

அரிய இனிய குணமுடையர்
அறிவும் புகழும் மிகவுடையர்
மருவும் உலகம் மதிக்கவரு
மணியே போல்வார் பலநண்பர்
பருகும் மதுவைச் சிறிதுமுனம்
பருகிப் பருகி மெல்லஎழுந்(து)
ஒருவர் ஒருவர் ஒருவராய்
உறங்க வீடு சென்றனரே. 14

இன்றைக் கின்றைக் கென்றோயா(து)
இரவும் பகலும் உழைத்திடுவீர்
அன்றி நாளைக் காமெனவே
அலுப்பில் லாது முயன்றிடுவீர்
ஒன்று சொல்வன் உண்மைமொழி
உறுதி யாகக் கொள்வீரே
என்றும் மூடர் நன்மையுமக்(கு)
இங்கும் இல்லை அங்குமில்லை. 15

நாடும் தெய்வம் இதுவென்று
ஞாலத் தறிய முயல்கின்றார்
தேடித் தேடிப் பார்த்ததெலாம்
திரைமேல் வந்த திரையாகும்
வாடி வாடி நோற்றதெலாம்
வாணாள் வீணாள் ஆனதுவே
பாடிப் பாடிப் பெற்றதெலாம்
பகலிற் கனவு கண்டதுவே. 16

பலநூல் கற்ற பண்டிதர்கள்
பலரும் சபைகள் பலகூடிக்
கலகம் வாதம் செய்திடுக
கண்டங் கிழிய முழங்கிடுக
மலரும் மலர்கள் வாடலுமிவ்
வாழ்வு நிலையா தோடலுமே
உலகம் கண்ட உண்மைகளாம்
உண்டோ மற்றொன் றுரைத்திடவே. 17

அன்றென் இளமைப் பருவத்தில்
அறிவிற் சிறந்த புலவரையும்
நன்று சீல முடையபெரு
ஞானி களையும் அடிபணிந்து
நின்று கேட்ட வாதங்கள்
நினைப்பின் அரிய ஆயிடினும்
சென்ற வாயில் வழியேதான்
திரும்பி அந்தோ! வந்தேனே. 18

அரிய பெரிய ஞானிகளோ(டு)
அறிவின் விதைகள் விதைத்துவந்தேன்
பெருகி ஞானம் வளர்ந்தோங்கப்
பேணிப் பணிகள் பலசெய்தேன்
உரிய காலைக் கண்டபலன்
உண்மை கூறின் இதுவேயாம்:
வருதண் ணீரைப் போல்வந்தேன்
மாயக் காற்றைப் போல்மறைந்தேன். 19

ஏனோ உலகில் வந்தேன்முன்
இருந்த இடமும் எவ்விடமோ
காணு ரேடும் கதியேபோல்
கண்ட கண்ட படிபோனேன்
வானேக் கியபாழ் நிலமீது
வழங்கும் வாடைக் காற்றெனவே
யானோர் காலை வெளியேறில்
எங்கே குவனோ அறியேனே. 20

மண்ணை வலமாய்ச் சுற்றிவந்தேன்
வானும் அளந்து கணக்கிட்டேன்
நண்ணும் வழியில் பலசிக்கல்
நாடி நன்கு விளக்கிவந்தேன்
எண்ணும் மனிதர் தளையடையும்
இறப்பும் ஊழும் இவையென்று
திண்ண மாகச் சொல்லஎதும்
தெரியா திங்கே திகைத்தேனே. 21

இட்டிக் கதவு தெரிந்ததடா
திறவு கோலும் இல்லையடா
கட்டித் திரையும் கண்டதடா
கண்ணும் மயங்கி நின்றதடா
ஓட்டிச் சிறிது நீநானென்(று)
உரைத்த உரையும் கேட்டதடா
நட்ட காலம் பின்னையடா
நான்நீ அற்றுப் போச்சுதடா. 22

இருளில் ஏகும் மக்களெலாம்
இடறி வழியில் வீழாமல்
அருளி அழைத்துச் செல்லவிதிக்(கு)
அளித்த தீபம் யாதென்றேன்
உருளும் வானம் எனைநோக்கி
'உணர்ந்தும் உணரா உணர்வென்னும்
மருளி ஞானம் உள(து)' என்ன
மாற்றம் தந்து சென்றதம்மா. 23

ஊனு ருடலம் இதுவீழின்
உண்டாம் வாழ்வின் நிலையறிய
ஆனு ஆசை மிகவேஎன்
ஆன்மா வினையான் வேண்டிநின்றேன்
நானு வுலகும் நெடுநாளா
நாடி யலைந்து வந்ததுதான்
யானே சொர்க்கம் நரகமெலாம்'
என்றே கூறி நின்றதுவே. 24

மண்ணை ஒருநாள் ஒருகுயவன்
மயக்கிப் பிசையும் வேளையிலே
திண்ணை யருகு சென்றிருந்தேன்
செய்யுந் தொழிலும் கண்டிருந்தேன்
அண்ணு! மெல்ல மெல்ல 'என
அமைந்த அழுகைக் குரல்கேட்டேன்
கண்ணிற் காணு நாவாலே
களிமண் கரைவ தெனவுணர்ந்தேன். 25

மன்னு மனிதர் வாழ்வென்றும்
வழுவி வழுவிப் போகுமெனச்
சொன்னுர் சொன்ன சொல்லையின்னும்
சொல்லிச் சொல்லிப் பயனெதுவோ
இந்நாள் இனிய நாளானுல்
இறந்த நாளுக் கிரங்குவதேன்
பின்னுள் எண்ணி நடுங்குவதேன்
பெண்ணே! கிண்ணம் நிறையம்மா. 26

அல்லும் பகலும் விவேகத்தால்
அடைந்த கவலைக் களவில்லை
தொல்லை நீங்க இன்றவளைத்
துரத்தி விட்டுத் துணிவாகச்
செல்வி திராட்ச வல்லிதரும்
தெய்வ மகளை மணந்துகொண்டேன்
இல்லை துயரம் இல்லையினி
இன்பம் என்றும் இன்பமதே. 27

உண்ணும் மதுவும் நீயுள்ளம்
உருகி முத்தம் இடுமுகமும்
எண்ணும் பொருள்கள் முடிவதுபோல்
இன்மை யேயாய் முடியுமெனில்
மண்ணில் இந்நாள் நிலையும்இனி
வருநாள் நிலைபோல் இன்மையதாம்
திண்ணம் இந்த அளவினிலோர்
சிறிதும் குறையா தறிவாயே. 28

எல்லாம் இங்கோர் சூதாட்டம்
இரவும் பகலும் மாருட்டம்
வல்லான் விதியே ஆடுமகன்
வலியில் மனிதர் கருவிகளாம்
சொல்லா தெங்கும் இழுத்திடுவான்
ஜோடி சேர்ப்பான் வெட்டிடுவான்
செல்லா தாக்கி ஒவ்வொன்ருய்த்
திரும்ப அறையில் இட்டிடுவான். 29

நாடும் வெற்றி தோல்விகள்எந்
நாளும் பந்து விரும்பிடுமோ
ஆடு மவரின் அடிக்கேற்ப
அங்கும் இங்கும் அலைந்திடுமால்
நீடும் இந்த நிலமீது
நின்னைத் தூக்கி இட்டஅவன்
ஈடு செய்வான் இரங்கிடுவான்
யாவும் அறிவான் நன்கறிவான். 30

எழுதிச் செல்லும் விதியின்கை
எழுதி எழுதி மேற்செல்லும்
தொழுது கெஞ்சி நின்றாலும்
சூழ்ச்சி பலவும் செய்தாலும்
வழுவிப் பின்னாய் நீங்கியொரு
வார்த்தை யேனும் மாற்றிடுமோ
அழுத கண்ணீ ராறெல்லாம்
அதிலோர் எழுத்தை அழித்திடுமோ. 31

பாரின் மீது கவிழ்த்தஒரு
பானை யாமிவ் வானகமே
சாரு மிதன்கீழ் எவ்வுயிரும்
தங்கி வாழ்ந்து மறைந்திடுமால்
யாரும் இதனை நோக்கிவரம்
இரந்து வேண்டி நிற்பாரோ
தேரின் இதுவும் நம்மைப்போல்
திகைத்தெந் நாளும் சுழன்றிடுமே. 32

வழியிற் குண்டு குழிவெட்டி
வலையுங் கட்டி மதுவுண்டு
விழுவோர் விதியும் அந்நாளே
விதித்து வைத்தென் கேடெல்லாம்
அழியாப் பாவம் அதனாலே
ஆன விளைவென் றறைவாயோ
தெளியா துலகில் என்றென்றும்
திகைத்து மறுகி நின்றேனே. 33

இற்ற மண்ணால் மனிதனையும்
எழுப்பி ஈடன் ஆளவிட்டுச்
சுற்றும் அரவும் அவ்விடத்தே
சூதாய்ப் பதுங்க வைத்தவனே
முற்றும் பாவி எனஅவன்றன்
முகத்திற் கரியைப் பூசியஅக்
குற்றம் நீங்க மன்னிப்புக்
கொடுத்து நீயும் பெறுவாயே. 34

மண்ணிற் செய்த கலமுடையின்
மண்ணில் மண்ணாய்ப் போகுமென
எண்ணி முன்னாள் அக்குயவன்
எனையும் மண்ணில் வனைந்தனனால்
உண்மை இதனை உள்ளத்தில்
ஊன்றி உணரா மாந்தரெலாம்
வெண்மை பேசித் திரிபவரே
வீணாய் வாதம் செய்பவரே. 35

வந்த வந்த மனிதரெலாம்
வளைவும் நெளிவும் கண்டென்னைச்
சந்த மில்லாப் பானையெனத்
தள்ளி வைத்துச் சென்றனரால்
அந்த நாள்அக் குயவன்கை
ஆட்டத் தாலே நேர்ந்தபிழைக்(கு)
இந்த நாளில் ஏழைஎனை
ஏனோ குறைகள் கூறுவரே. 36

உண்ட வெறியில் முன்னொருநாள்
உண்ட கலத்தை உடைத்தெறிந்தேன்
துண்டு துண்டாய்ப் போனகலம்
துணிந்து மெல்ல எனைநோக்கிப்
'பண்டு யானும் உன்வாழ்வைப்
பாரில் அடைந்தேன் நீயுமெனக்(கு)
அண்டும் இந்த வாழ்வைஇனி
அடைவாய் உண்மை' என்றதடா. 37

நலஞ்செய் பன்னீர் நாடியொரு
நந்த வனத்தை நானடைந்தேன்
உலர்ந்து வெந்து கரிந்தங்கோர்
உரோஜா நின்ற நிலைகண்டு
'கலந்த நோயும் யா(து)'என்றேன்
காதில் மெல்ல 'யான்முன்னம்
மலர்ந்த முகமாய் விளையாடி
வாழ்ந்த இடமீ(து)' என்றதம்மா. 38

வசந்த ருதுவும் வந்திடுமோ
வாச மலர்கள் பூத்திடுமோ
கசிந்து பாடும் குயிலின்னும்
காது குளிரச் செய்திடுமோ
இசைந்த இளமைப் பருவத்தின்
இனிமை இனியும் எய்துவதோ
அசைந்த உள்ளம் தேறுமொழி
ஆரே கூற வல்லாரே? 39

நெஞ்சே! நீயும் எத்தனைநாள்
நெருப்பில் மூழ்கி நின்றிடுவாய்
வஞ்ச உலகில் மற்றெவையும்
மறந்து நீக்கி யறவிட்டுத்
தஞ்ச மாக நட்பொன்றும்
தழைக்கும் ரோஜா வனமொன்றும்
விஞ்ச மதுவுண் கலமொன்றும்
விரும்பி வேண்டிப் பெறுவாயே. 40

அன்பே! யானும் நீயும்இசைந்(து)
அயலில் எவரும் அறியாமல்
வன்பே உருவாம் விதியினையும்
வளைத்துள் ளாக்கி முயல்வோமேல்
துன்பே தொடரும் இவ்வுலகைத்
துண்டு துண்டாய் உடைத்துப்பின்
இன்பே பெருகி வளர்ந்திடுமோர்
இடமாய்ச் செய்ய இயலாதோ. 41

இருளின் வாயிற் படிதாண்டி
    எமக்கு முன்னே சென்றவர்கள்
கருது கோடி கோடியின்மேல்
    கணக்கில் லாதார் ஆயிடினும்
ஒருவ ரேனும் வழியிதுவென்(று)
    உண்மை கூற வந்தனரோ
அரிய வழியை நாமும்இனி
    அளந்து காண வேண்டுமடா. 42

மண்ணுக் கீடு பொன்கேட்டால்
    வலியில் மனிதர் என்செய்வார்
கண்ணிச் செய்த ஒப்பந்தம்
    கண்ணிற் கண்ட தொன்றுமிலை
திண்ண மாக இவ்வழக்கு
    தீரா வழக்கே யாகுமப்பா
எண்ணி முடிவு செய்திடுவார்
    யாவ ருள்ளார் எங்குள்ளார். 43

## 62. பாரசீகத் தனிப்பாடல்கள்

இல்லாப் பொருளுக் கேங்காமல்
இருக்கும் பொருளும் எண்ணுமல்
எல்லாம் வல்ல எம்பெருமான்
இரங்கி அளக்கும் படிவாங்கி
நல்லார் அறிஞர் நட்பையும்நீ
நாளும் நாளும் நாடுவையேல்
நில்லா உலகில் நிலைத்தசுகம்
நீண்டு வளரும் நிச்சயமே. 1

உயிரின் ஒளியும் மணமுமெலாம்
உன்பே ரருளில் உதிப்பனவாம்
மயலின் மாசு நீங்கிடவே
வறுமை சூழ வைத்தனைநீ
எயிலும் அரணுங் காப்பதிலுன்
இணையா மடிகட் கிணையாமோ
அயலும் காவா மனிதருல(கு)
அனைத்துங் காக்கும் ஆண்டவனே. 2

எல்லாம் வலியாய் நின்வலிதான்
 எங்கும் வெளியாம் வேளையிலே
நல்லா றறியா நாத்திகரும்
 நம்பி உனையே நாடிடுவர்
வில்லார் கதிரோன் விண்ணின்று
 விளங்கி ஒளியைப் பொழிகையிலே
பொல்லா வாவல் இருள்நோக்கிப்
 போக வழிதான் கண்டிடுமோ. 3

'யாரும் சிறியர் யான்பெரியன்
 எதிலும் சிறந்த தென்னலமாம்
பாரில் எனக்கி டில்லை'எனப்
 பயனில் மொழிகள் பகர்வதுமென்
சேரும் உலகப் பொருளையெலாம்
 தெரிய நோக்கித் தனைநோக்காச்
சீரின் அமைந்த கண்மணியின்
 செயலை நோக்கித் தெளிவீரே. 4

அல்லும் பகலும் பலநூல்கள்
 ஆய்ந்து கற்றேன் அவையாவும்
வெல்லும் வெற்றி ஈகையினால்
 விளைந்த புகழை விரித்ததலால்
தொல்லை ஆன்ம நிலையிதெனச்
 சொன்ன சொற்கள் ஒன்றுமிலை
கல்லும் முள்ளும் கடந்துழன்றும்
 கனியைக் கண்ணுற் கண்டிலனே. 5

ஐயோ அறியா மானிடரே
ஆசைப் பேயின் அடிமைகளே
எய்யா தென்றும் வான்நோக்கி
இரங்கி அழுது நிற்பதுமேன்
மெய்யாய் அன்று படைத்தஅவன்
மெலியா தும்மைக் காவானோ
கையால் மரத்தை நட்டவர்கள்
கருத்தாய் நீரும் வார்க்காரோ. ௬

புந்தி ஈசன் திருவடியிற்
பொருந்தா உலகம் பொய்யுலகம்
மூந்து துயரம் மூடுலகம்
மூட உலகம் எந்நாளும்
வெந்து தீயும் நரகினுக்கு
விறகு தேடி இடுமுலகம்
இந்த உலகில் ஏனையா
இன்னும் ஆசை வைப்பாய்நீ. 7

மண்ணிற் பாவம் செய்யாத
மனிதர் ஒருவர் உண்டோசொல்
மண்ணிற் பாவம் செய்யாது
வாழும் வாழ்க்கை எளிதோசொல்
மண்ணிற் பாவம் செய்தவரை
மாறு நரகில் இடுவாயேல்
மண்ணில் உன்னைப் பெருங்கருணை
வள்ளல் என்ப திசைவாமோ. 8

மானை வளர்த்த கையாலே
வஞ்சப் புலியும் வளர்த்திந்தக்
கானில் வேட்டை காணுமவர்
கருணை உடையர் ஆவாரோ
ஞானக் கண்ணின் பார்வையிலே
நன்மை தீமை வேருமோ
தேனைப் பொழியுஞ் சொல்லாய்! நீ
தெரிந்து கூற வேண்டுவனே. 9

“புயலே யனைய கொடையாளர்
புவன மடங்காப் புகழுடையார்
இயலும் கல்விக் கிணையில்லார்”
எனவே தத்தம் முன்னோரின்
செயலும் குணமும் சிறப்பும்அனு
தினமும் மிகவே போற்றிடுவீர்
வயலைப் பயிர்செய் யாதுபழ
வைக்கோல் கிண்டிப் பயனெதுவோ. 10

துயர மடர்ந்து வளர்ந்துன்னைச்
சுற்றி வளையும் வேளையிலே
முயலும் முயற்சி யின்றிஒரு
மூலை தேடி யிருப்பதும்ஏன்
அயலி லுள்ளார் படும்பாடும்
அழுகண் ணீரும் கண்டுனது
மயலை முற்றும் மாற்றுவையே
மனத்தை நன்ருய்த் தேற்றுவையே. 11

நண்ணும் உடைமை யாவையும்நீ
நாசஞ் செய்து நாடுவையேல்
உண்மை யாக உன்னையுமே
உணர்ந்து கொள்வாய் ஐயமில்லை
மண்ணின் ஆசை நீங்கின்அருள்
வள்ளல் ஆசை ஓங்கிவரும்
எண்ணும் உள்ளத் தாசையிரண்(டு)
இருக்க இடமும் உண்டோடா. 12

ஆழி சூழும் உலகாளும்
அரச னாக வேண்டுமெனில்
வாழும் வாழ்வில் உன்னையும்நீ
மறந்து வாழ வேண்டுமடா
ஏழை யாகி எளியவரின்
எளிய னாக வேண்டுமடா
தோழ னாகி யாவர்க்கும்
தொண்ட னாக வேண்டுமடா. 13

வீடும் பழவீ டாகுதடா
விட்டம் கூரை சுவரெல்லாம்
ஆடி அலைந்து விழுநாளும்
அண்டி அண்டி வருகுதடா
நாடி இதனை இன்னும்நீ
நம்பி மோசம் போகாமல்
பாடிப் பாடி எம்பெருமான்
பாதம் போற்றி வாழ்வாயே

ஈசன் அருளைப் பெறுவதிலும்
இடையே தரகர்க் கிடமுண்டோ
பேசின் இவர்செய் சூதுலகில்
பெரிய சூதென் றறியாயோ
பூசு நீறும் கண்டிகையும்
புரிமுந் நூலும் பூண்டதலால்
காசு பணத்தின் ஆசையவர்
கடந்த தில்லை இல்லையடா. 15

தேடும் ஈசன் திருவடியிற்
சேர வழியொன் றுண்டதனை
நீடு வழியாய்ச் சிறுவழியாய்
நிகழச் செய்வோன் நீயேயாம்
நாடும் கோயில் மடங்களெலாம்
நம்பன் அடியார் அவ்வழியில்
கூடித் தங்கும் நிழல்களாம்
குடிக்குந் தண்ணீர்ப் பந்தல்களாம். 16

மண்ணை மண்ணில் உதறிவிட்டு
மாசு மறுவொன் றில்லாமல்
விண்ணிற் செல்ல வல்லதெனில்
விளங்கும் ஆன்மா இப்புவியில்
நண்ணி இந்த நாள்வரையும்
நலிந்து சிறையில் இருந்ததனை
எண்ணி வெட்கம் அடையாதோ
இதன்மேல் வெட்கம் வேறுண்டோ? 17

யானும் நீயும் இறந்தபினும்
இராஜ ராஜன் பட்டபினும்
ஊன மின்றி இவ்வுலகம்
ஊழி ஊழி நின்றிடுமால்
கூனக் கிழவி ஒருசிறுகல்
குனிந்து வீசி எறியிலதை
மானக் கடலும் மந்தரமா
மலையென் றெண்ணி மலைந்திடுமோ. 18

## 63. ஒற்றுமையின் உயிர்நிலை

ஒற்றுமை யாக உழைத்திடுவோம் - நாட்டில்
உற்ற துணைவராய் வாழ்ந்திடுவோம்
வெற்றுரை பேசித் திரியவேண்டாம் - இன்னும்
வீணைப் புராணம் விரிக்கவேண்டாம். 1

கூடி விருந்துண்ண வேண்டவில்லை - பெண்ணைக்
கொண்டு கொடுக்கவும் வேண்டவில்லை
நாடி எவரொடும் நட்பினராய்த் - தேச
நன்மைக் குழைப்பதில் நஷ்டமுண்டோ. 2

கீரியும் பாம்புமாய்ச் சண்டையிட்டு - சாதி
கீழென்றும் மேலென்றும் நாட்டிவிட்டு
பாரதத் தாய்பெற்ற மக்களென்று - நிதம்
பல்லவி பாடிப் பயனெதுவோ. 3

வேதன் முகத்தில் உதித்தவரே - இங்கு
மேலா யெழுந்த குலத்தினராம்
பாத மதில்வந்த பாவியரே - என்றும்
பாரில் இழிந்த அடிமைகளாம்! 4

வாயில் விஷமுண்டு பாம்பினுக்குக் - கொட்டும்
வாலில் விஷமுண்டு தேளினுக்குத்
தாயிற் சிறந்த பிரமனுக்கும் - இரு
தாளில் விஷமுண்டோ சாற்றுவீரே. 5

உச்சி மரத்திற் சுவைக்கனியும் - தூரில்
ஓடிப் பரந்தெழும் வேரதனில்
நச்சுக் கனியும் பழுத்தபலா - மரம்
நானிலத் தெங்குமே கண்டதுண்டோ. 6

சாதி இரண்டலால் வேறுளதோ - ஔவைத்
தாயின் உரையும் மறந்தீரோ
ஆதி இறைவன் வகுத்ததுவோ - மக்கள்
ஆக்கிய கற்பனை தானிதுவோ. 7

நாயனார் வந்த திருக்குலத்தை - உயர்
நந்தனார் வந்த பெருங்குலத்தைத்
தீய குலமெனத் தள்ளுவரேல் - அது
தெய்வம் பொறுக்கும் செயலாமோ. 8

வேதிய ராலே மழைவருமேல் - வயல்
வேலை செய்யாது விளைந்திடுமோ
வாத மெலாம்கட்டி வைத்திடுவோம் - ஒத்து
வாழ்வதை மேற்கொண் டுழைத்திடுவோம். 9

வீட்டுக்குள் சண்டைகள் போடுவதேன் - கூரை
வெந்து விழுவதும் கண்டிலிரோ
நாட்டுக்கு நன்மையை நாடுபவர் - இந்த
நாடகம் ஆடல் நகைப்பலவோ. 10

மானமே வாழ்வின் உயிர்நிலையாம் - அதை
மாசுறச் செய்தல் கொடுங்கொலையாம்
ஈன சாதியெனும் பேச்சினைப்போல் - நெஞ்சை
ஈர்ந்திடும் வாளொன்று வேறுளதோ. 11

மன்னுயிர்க் காக முயல்பவரே - இந்த
மாநிலத் தோங்கும் குலத்தினராம்
தன்னுயிர் போற்றித் திரிபவரே - என்றும்
தாழ்ந்த குலத்தில் பிறந்தோரம்மா. 12

## 64. தீபாவளிப் பண்டிகை

### தொழிலாளி பாட்டு

பண்டிகை தீவாளிப் பண்டிகையாம் - இந்தப்
பாரத நாட்டுக்கோர் பண்டிகையாம்
தண்டிகை மன்னவர் ஏழை எளியவர்
சந்தோஷம் கொண்டாடும் பண்டிகையாம். 1

ஆண்டிலோர் தீபா வளியாமடா - அதை
ஆண்டியுங் கொண்டாட வேண்டுமடா
தீண்டு துயர்போகும் நாளிதடா - உள்ளம்
தேடித் தவித்திடும் நாளிதடா. 2

உற்றார் உறவினர் யாவருமே - கூடி
ஒன்றாக உண்டிடும் நாளிதடா
வற்றாத செல்வம் படைத்தவர்போல - நாம்
வாழ்வின் நலம்பெறும் நாளிதடா. 3

வாழத் தயங்குமிக் காலத்திலே - துளி
வாழ்வை யளித்திடும் நாளிதடா
ஏழைக் கிரங்கி நரகாசுரன் - முன்னம்
ஈசனை வேண்டிய நாளிதடா. 4

சென்றதை எண்ணி வருந்தாதேடா - இனிச்
சேர்வதும் எண்ணி நடுங்காதேடா
இன்றைக் கிருப்பதே உண்மையடா - நாளை
எப்படி யோதெரி யாதேயடா. 5

எங்கே யிருந்துநாம் வந்தோமோ - இனி
எவ்விடம் சென்றுதான் சேருவமோ
இங்கே அறிந்தவர் யாவரடா - அந்த
ஏடுகள் உண்மை இயம்புமோடா. 6

ஆண்டுக் கொருமுறை யாகிலும் எஞ்சினுக்(கு)
ஆயில் இடுவ தறியாயோடா
வேண்டிப் பிரமன் படைத்த உடலிது
வேலைகள் செய்தலுக் காதோஅடா. 7

நல்லெண்ணெய் பூசிக் குளிப்போமடா - நல்ல
நல்ல உணவுகள் உண்போமடா
அல்லும் பகலும் உழைப்பதெல்லாம் - வயி(று)
ஆரப் புசிப்பதற் கல்லவோடா. 8

இட்டெலி வீரர்தென் னிந்தியராம் - என்ப(து)
இன்றுநாம் காட்டி விடுவோமடா
சட்டினி நண்பன் துணையிருக்க - அதிற்
சந்தேக முண்டோநீ சொல்வாயடா. 9

தேடிச் செலவுசெய் யும்பொருள் நம்பொருள்
சேர்த்துவைக் கும்பொருள் யார்பொருளோ
வாடி வயிற்றுக்கொன் றீயாத லோபிக்கிவ்
வையக வாழ்வேது முண்டோஅடா. 10

சின்னஞ் சிறுவர் சிறுமியரை - இன்று
சிங்காரம் செய்துநாம் பார்ப்போமடா
கன்னத் தவரிடும் முத்தமொன் றுக்(கு) - இந்தக்
காசினி முற்றுமீ டாகுமோடா. 11

பெண்டுகள் பிள்ளைகள் நெய்த கதருடை
பீதாம் பரத்தினும் மேலாமடா
கொண்டாடிப் பண்டிகை நாளில் அணிந்திடில்
கோடி கோடிப்புண்ணியம் உண்டாமடா. 12

இட்டமான பாடல் பாடுவோமே - நல்ல
இன்பக் கதைகளைச் சொல்லுவோமே
வட்டமாய்ச் சுற்றி யிருப்போமே - இன்று
வந்த விகடனைப் பார்ப்போமே. 13

## 65. பெண்களின் உரிமைகள்

மங்கைய ராகப் பிறப்பதற்கே - நல்ல
மாதவஞ் செய்திட வேண்டுமம்மா
பங்கயக் கைநலம் பார்த்தலவோ - இந்தப்
பாரில் அறங்கள் வளருமம்மா. 1

அல்லும் பகலும் உழைப்பவரார் - உள்ளத்(து)
அன்பு ததும்பி யெழுபவரார்
கல்லும் கனியக் கசிந்துருகித் - தெய்வ
கற்பனை வேண்டித் தொழுபவரார்? 2

ஊக்கம் உடைந்தழும் ஏழைகளைக் - காணில்
உள்ளம் உருகித் துடிப்பவரார்
காக்கவே நோயாளி யண்டையிலே - இரு
கண்ணிமை கொட்டா திருப்பவரார்? 3

சிந்திய கண்ணீர் துடைப்பவரார் - பயம்
சிந்தை யகன்றிடச் செய்பவரார்
முந்து கவலை பறந்திடவே - ஒரு
முத்த மளிக்க வருபவரார்? 4

உள்ளந் தளர்வுறும் நேரத்திலே - உயிர்
ஊட்டும் உரைகள் உரைப்பவரார்
அள்ளி யெடுத்து மடியிருத்தி - மக்கள்
அன்பைப் பெருக்கி வளர்ப்பவரார்? 5

நீதி நெறிநில்லா வம்பருமே - நல்ல
நேர்வழி வந்திடச் செய்பவரார்
ஓதிய மான மிழந்தவரை - உயர்
உத்தம ராக்க முயல்பவரார்? 6

ஆவி பிரியும்அவ் வேளையிலே - பக்கத்(து)
அன்போ டகலா திருப்பவரார்
பாவி யமனும் வருத்திடாமல் - ஈசன்
பாதம் நினைந்திடச் செய்பவரார்? 7

ஏங்கிப் புருஷனைத் தேடியழும் - அந்த
ஏழைக் கிதஞ்சொல்லி வாழ்பவரார்
தாங்கிய தந்தை யிழந்தவரைத் - தினம்
சந்தோஷ மூட்டி வளர்ப்பவரார்? 8

சின்னஞ் சிறிய வயதினிலே - ஈசன்
சேவடிக் கன்பெழச் செய்பவரார்
உன்னும் இளமைப் பருவமெலாம் - களிப்(பு)
உள்ளம் பெருகிடச் செய்பவரார்? 9

மண்ணக வாழ்வினை விட்டெழுந்து - மனம்
மாசிலா மாணிக்க மாயொளிர்ந்து
விண்ணக வாழ்வை விரும்பிடவே - நிதம்
வேண்டிய போதனை செய்பவரார்? 10

அன்பினுக் காகவே வாழ்பவரார் - அன்பில்
ஆவியும் போக்கத் துணிபவரார்
இன்ப உரைகள் தருபவரார் - வீட்டை
இன்னகை யாலொளி செய்பவரார்? 11

இப்பெரு நற்கரு மங்களெலாம் - உமக்(கு)
ஈசன் அளித்த உரிமைகளாம்
மெய்ப்பணி வேறும் உலகிலுண்டோ - இன்னும்
வேண்டிப் பெறும்வரம் ஒன்றுளதோ? 12

மங்கைய ராகப் பிறந்ததனால் - மனம்
வாடித் தளர்ந்து வருந்துவதேன்
தங்கு புவியில் வளர்ந்திடும் கற்பகத்
தாருவாய் நிற்பதும் நீரலவோ? 13

செம்மையிற் பெற்ற குணங்களெல்லாம் - நீங்கள்
செய்வினை யாலே திருத்துவீரேல்
இம்மைக் கடன்கள் முடித்திடவே - முத்தி
எய்திச் சுகமா யிருப்பீரே. 14

---

இவை ஆங்கிலப் பாடலொன்றைத் தழுவிச் செய்யப்பட்டவை.

## 66. தீண்டாதார் விண்ணப்பம்

'ஆண்டிப் பண்டாரம்' மெட்டு

விண்ணப்பஞ் செய்தோம் - விடையை
வேண்டிக் கொள்கின் றேம்.

கண்ணப்பன் பூசைகொளும்
கடவுள் திருக்கோவிலிலே
நண்ணக்கூடாதோ நாங்கள்
நடையில்வர லாகாதோ ? 1

என்பிணையுந் தோலிணையும்
ஏந்துகின்ற சிவபெருமான்
அன்பரெமக் காலயத்தில்
அருள்செய்ய மாட்டாரோ ? 2

சிலந்திக்கும் வரமளித்த
சிவபெருமான் திருவடியை
நலம்பெறவே கண்டுநாங்கள்
நமஸ்கரித்தல் ஆகாதோ ? 3

---

3. சிலந்திக்கு வரமளித்தது திருவானைக்காவில் ; சிலந்தி கோச்செங்கட்சோழராகப் பிறந்தது.

பெற்றானெனும் சாம்பானுக்குப்
    பேறளித்த பெருமானை
வற்றாத அன்பொடுயாம்
    வணங்குதலும் வழுவாமோ ? 4

நந்தனுக்குப் பதமளித்த
    நடராசன் எங்களுக்கும்
சொந்தமெனக் கூறுவதில்
    சொல்லிழுக்கு முண்டோஐயா ? 5

நந்தனுக்குப் பதமளித்த
    நடராசன் கோவிலிலே
வந்தனைகள் செய்துநாங்கள்
    வழிபடுதல் முறையலவோ ? 6

பண்ணைமையப் பாடிவந்த
    பறைச்சிக்கும் பரிசளித்த
கண்ணபிரான் திருவடியாம்
    கண்டுதொழ லாகாதோ ? 7

பார்ப்பார்கள் தோள்சுமந்து
    பாணரைமுன் திருக்கோயில்
சேர்த்தார்கள் என்றகதை
    தெரியாதார் உண்டோஐயா ? 8

---

4. உமாபதிசிவாசாரியார் தில்லையிலே பெற்றான் சாம்பானுக்கு முத்தி கொடுத்தார். 7. திருமால் பறைச்சிக்குத் திருக்குறுங்குடியிலே அருள் செய்தார். 8. திருப்பாணாழ்வார் வரலாறு.

கள்ளுடனே ஆடுகோழி
கலந்துண்ணும் காளிதேவி
உள்ளிருக்கும் கோவிலிலே
உரிமைஎமக் கிலையோஐயா? 9

கள்ளுடனே ஆடுகோழி
கலந்துண்ணும் காளிதேவி
பள்ளரெமைக் கண்டவுடன்
பயந்தோடிப் போவாளோ? 10

காப்பாற்றி நமையாளும்
கடவுளரும் மக்களுள்ளே
பார்ப்பார்கள் பறையரென்ற
பகுப்பேதும் வைத்ததுண்டோ? 11

கோவிலிலே தீட்டேறிக்
குடிபுகுமோ குளிப்பவரின்
பாவமெல்லாம் கங்கையிலே
படிந்திடுமோ கூறுமையா. 12

தேவிருக்கும் கோவிலிலே
சென்றுநமஸ் காரம்செய்து
பாவமெலாம் போக்கிலெம்மைப்
பாரிடமும் தாங்காதோ? 13

பூவாரம் அணிந்தபிரான்
பொன்னடிக்கீழ் நின்றெளியேம்
தேவாரம் பாடில்அவர்
செவிக்கின்பம் ஆகாதோ? 14

பாவிகளை ஈடேற்றிப்
பதமளிக்கும் பரமசிவம்
கோவிலிலே எமைக்கண்டால்
குடிமுழுகிப் போய்விடுமோ ? 15

காணுதற்குக் கண்ணளித்த
கடவுளடி கண்டுதொழ
வேணுமென்று மனிதருக்கும்
விருப்பமெழல் அதிசயமோ ? 16

அண்டமெல்லாம் காக்குமீசன்
ஆலயத்தில் மக்களெம்மைக்
கண்டகண்ணைக் கழுவுவரோ
கருணைசெய்ய மாட்டாரோ ? 17

தருமஉரு வாமீசன்
தமியரையும் கண்டவுடன்
கருணைவிழி அடைப்பாரோ
கனல்விழியைத் திறப்பாரோ ? 18

குற்றமிலா எமைக்கண்டு
கோவிலையும் அடைக்கலாமோ
பெற்றவரைக் காணவரும்
பிள்ளைகளைத் தடுப்பாருண்டோ ? 19

ஆண்டவனைக் கண்டுதொழ
ஆசைஎமக் கெழுந்திடாதோ
நீண்டமரஞ் செடியோநாங்கள்
நெடும்பாறை தானேஐயா ? 20

பத்தியொடு கோயில்சென்று
பணிந்துபதம் பெறுவோமேல்
முத்தியிடம் போதாமல்
முழுமோசம் வந்திடுமோ ? 21

வனத்திலொரு மரமாக
வளர்ந்தோமிலை மானிடரின்
இனத்தினிலே பிறந்தஇடர்
இனிப்போதும் போதுமையா. 22

தாகமென்று வருபவர்க்குத்
தண்ணீரை அளியாமல்
ஆகமங்கள் ஓதிநிற்றல்
அழகாமோ அறமாமோ ? 23

ஆலயத்திற் சென்றுதொழ
ஆணையிடும் ஒளவைமொழி
ஞாலமிசை எங்களுக்கும்
நன்மைதராப் புன்மொழியோ ? 24

ஆவுரித்துத் தின்பரேனும்
அரனடிக்கீழ் அன்பரெனில்
தேவரவர் என்றுரைக்கும்
திருமொழியும் வெறுமொழியோ ? 25

சாதியினால் குறைவில்லை
தாழ்ந்தவரும் பத்தியினால்
வேதியரிற் பெரியரென
விளம்புமொழி வீண்மொழியோ ? 26

25. அப்பர் தேவாரம் : 'சங்கநிதி பதுமநிதி'.

சண்டாளர் ஆனாலும்
சக்கரத்தான் அடியவரேல்
கொண்டாடத் தக்கோரெனக்
கூறுவதும் பொய்மொழியோ ? 27

சாவியிட்டுப் பூட்டுமிட்டுச்
சந்நிதியில் காவலிட்டுத்
தேவிருக்கும் கோவிலைநீர்
சிறைச்சாலை ஆக்கலாமோ ? 28

கல்லார்க்கும் கற்றவர்க்கும்
களிப்பருளும் களிப்பினைநீர்
பொல்லாதார் பொருளெனவே
பூட்டிவைப்ப தழகாமோ ? 29

நல்லார்க்கும் பொல்லார்க்கும்
நலமளிக்கும் நலத்தினைநீர்
கல்லாலே கோட்டைகட்டிக்
கடுங்காவல் செய்யலாமோ ? 30

காணார்க்கும் கண்டவர்க்கும்
கண்ணளிக்கும் கண்ணுதலை
வீணாக மூடிவைத்து
விளங்காமற் செய்யலாமோ ? 31

எல்லார்க்கும் வரமளிக்கும்
எம்பெருமான் ஆலயங்கள்
வல்லார்க்குச் சொந்தமென
வழக்காடல் முறையோஐயா ? 32

---

27. திவ்வியப் பிரபந்தம் : ‘ பாதியாய் அழுகியகால் கைய ரேனும் ’.

சாத்திரங்கள் கண்டறியோம்
சரித்திரங்கள் படித்தறியோம்
சூத்திரங்கள் செய்யாமல்
துணைசெய்ய வேண்டுமையா. 33

பதவியில்லை பணமில்லை
படிப்பேதும் இல்லைஎமக்(கு)
உதவிசெய்ய உங்களுக்கும்
உள்ளமிரங் காதோஐயா. 34

வையகத்தில் ஏழைகளும்
மானிடராய்ப் பிறந்துவிட்டோம்
உய்யவழி தேடுகின்றோம்
உதவிசெய்ய வேண்டுமையா. 35

வேண்டாத வாதமின்னும்
விளைப்பீரோ அடிகளையும்
தீண்டாமைப் பேய்க்குயிரைத்
தியாகமிடச் செய்வீரோ ? 36

நாடாளக் குடியரசு
நாடுபவர் ஆலயத்தில்
நீடாகத் தனிஅரசு
நிலைநாட்டத் துணியலாமோ ? 37

---

36. அடிகள் - காந்தியடிகள்.

## 67. தீண்டாதார் நிலைமைக்காக மேல்வகுப்பினர் வருந்துதல்

["நினைப்பதெப் போது நெஞ்சே - ஈசன் பதத்தை
நினைப்பதெப் போது நெஞ்சே"
என்ற பாட்டின் மெட்டு.]

இந்தப் பிறப்பு வேண்டாம் - இதுவொழிய
எந்தப் பிறப்பும் வரட்டும்.

1. நொந்த புண்ணிலே எரி
பந்தம் இடுவது போல்
சந்ததம் ஹரிஜன
நிந்தனை செய்திடும் (இந்த)

2. ஜாதி வெறியினால் வி
ரோதிக ளாகி மக்கள்
வீதி வருவதும் அ
நீதி யென உரைக்கும் (இந்த)

3. வழியில் விழுபவரைத்
தழுவி யெடாது படு
குழியி லுருட்டிப் பெரும்
பழியை நிதமுந் தேடும் (இந்த)

4. உண்ணீர் விரும்பி வீட்டை
நண்ணி ஒருவன் நின்று
கண்ணீர் விடினும் செம்பில்
தண்ணீர் அளித்திடாத (இந்த)

5. மூங்கிக் குளிக்கக் குளம்
தங்கி யிருக்க இடம்
எங்கு மிலா தெளியர்
பங்கப் படும் புவியில் (இந்த)

6. ஈச னடி பணிய
ஆசை வளர்ந்து வரும்
நேசர் தமைத் தடையும்
நீச நில மிதனில் (இந்த)

7. இட்ட சகோதரரை
எட்ட விலக்கி நிதம்
கட்ட மிகப் படுத்தும்
துட்ட உலகுதனில் (இந்த)

8. சண்டிக் குதிரை மேலே
நொண்டித் துரை சவாரி
கொண்டது போலும் வாழ்வு
கண்டது போதுமையா (இந்த)

## 68. தீண்டாமைப் பேய்

### ஆனந்தக் களிப்பு

தீண்டாமைப் பேய் அறிவீரோ - அதன்
சேட்டைகள் முற்றுந் தெரிந்திடுவீரோ?

பண்டுபண் டேயுள்ள பேயாம் - இந்தப்
பாரத நாட்டைப்பாழ் ஆக்கிய பேயாம்
சண்டைகள் மூட்டிடும் பேயாம் - அது
சாத்திரி மார்பூசை கொண்டிடும் பேயாம். 1

பட்டப் பகல்வரும் பேயாம் - ஒரு
பக்கமே பார்க்கப் பழகிய பேயாம்
முட்டிக் குனிந்திடும் பேயாம் - அது
முன்னேற்றம் கண்டு முடமாகும் பேயாம். 2

கண்ணிலே காணும்பேய் ஐயா - இரு
காலும் நிலத்தில் பதியும்பேய் ஐயா
நிர்ணய மில்லாப்பேய் ஐயா - நடு
நீதி நெறிகாணா நீசப்பேய் ஐயா. 3

கோவிலின் வாசற் படியில் - நிதம்
கும்மாளி கொட்டிக் குதித்தாடி நிற்கும்
வாவிக் கரையிலும் நிற்கும் - அங்கு
வந்த மனிதரை ஓட்டித் துரத்தும். 4

பிள்ளைமார் வீட்டிலும் தங்கும் - உயர்
பிராமணர் வீதியில் எங்குமே சுற்றித்
துள்ளி விளையாடி நிற்கும் - அவர்
சோமன் புடவைகள் சுற்றிக் கிடக்கும். 5

மண்கலத் துள்ளே யிருக்கும் - அதில்
வைத்த பண்டத்தில் மறைந்தும் இருக்கும்
வெண்கலம் வெள்ளிப்பொன் கண்டால் - உடன்
வெட்கம் அடைந்து வெளியேறிப் போகும். 6

வேதக் கடலைக் கலக்கும் - அதில்
வேண்டும் விதிவலை வீசிப் பிடிக்கும்
சாதிப் பிளவை யுண்டாக்கும் - எங்கும்
சண்டாளர் சண்டாளர் என்றே முழக்கும். 7

வஞ்சம் பொறாமைகள் எல்லாம் - அதை
வட்டமாய்ச் சுற்றி வரும்பரி வாரம்
நெஞ்சம் நடுங்குதே ஐயா - அதன்
நிட்டூரம் சொல்லி முடியாதே ஐயா. 8

கூடி யிருக்க வொட்டாது - நண்பர்
கொண்டு தருவதை உண்ண வொட்டாது
தேடி வருவோரை அன்பாய் - வீட்டுத்
திண்ணையில் உட்கார வைக்க வொட்டாது. 9

தாகித்து வந்தவ ருக்குச் - செம்பில்
தண்ணீர் அளித்திடச் சம்மதி யாது
சோகித்து வீழ்வோரைக் கண்டால் - தலை
தூக்கி வியர்வை துடைக்க வொட்டாது. 10

கண்ணுதல் ஆலயம் சென்றால் - அங்கு
கையிற் பிரசாதம் போட வொட்டாது
எண்ணி வரையளந் திட்டே - அதற்(கு)
இப்புறம் அப்புறம் நில்லென் றதட்டும். 11

11. மலையாளத்திலுள்ள ஆலயங்களில் இன்றும் காணப்படும் வழக்கம்.

கப்பலில் ஏறிட அஞ்சும் - சில
காப்பிக் கடைஎட்டிப் பார்க்கவும் நாணும்
செப்பும் புகைவண்டி யுள்ளே - அது
சீற்றம் அடங்கி ஒடுங்கிக் கிடக்கும். 12

கண்ணுன காந்தி மகானும் - இதைக்
கண்டு நடுங்கிக் கடவுளை வேண்டி
உண்ணு திருந்தனர் என்றால் - இதன்
ஊக்கம் சிறிதும் உரைத்திடப் போமோ. 13

முன்னம் பெரியோர் இதனை - வெட்டி
மூடிப் புதைத்தும் உயிர்வலி கொண்டு
பின்னும் முளைத்ததே ஐயா - இது
பேய்களும் அஞ்சும் பெரியபேய் ஐயா. 14

பொல்லாத பேயிதை நம்பி - இன்னும்
பொங்கலிட் டாடுதல் புத்தியோ ஐயா
நல்லாக வேண்டுமே யானல் - இதை
நாட்டைவிட் டோட்டித் துரத்துவோம் ஐயா.

இப்பெரும் பேய்இனி மேலும் - நம(து)
இந்திய நாட்டில் இருந்திட லாமோ
கப்பலில் ஏற்றுவோ மையா - நடுக்
காயல் கடல்கண்டு தள்ளுவோம் ஐயா. 16

16. காயல் - ஏரி.

## 69. பிச்சைக்காரர் கும்மாளம்

ஆல மரத்தின் நிழலிதுவே - நல்ல
ஆயிரங் காலெழு மண்டபமாம்
சாலவே தங்கு பறவையெலாம் - அதிற்
சங்கீதம் பாடிடும் பாடகராம். 1

ஊர்களி லுள்ள உழவர்களே - நமக்(கு)
ஓயா துழைத்திடும் ஊழியராம்
சாருமிவ் வீடுகள் யாவையுமே - உண்ணச்
சாதம் சமைத்திடுஞ் சாலைகளாம். 2

பாரிற் பரந்த பொடிமணலுக் - கெந்தப்
பஞ்சணை மெத்தையீ டாகுமடா
காரும் பசானும் கரிந்திடினும் - ஒரு
காரிய மில்லை அறிவாயடா. 3

பட்டப் பகலை இரவென் றுழைத்திடும்
பாழான சாத்திரம் ஏதுக்கடா
கட்டிப் புளுகுங் கதைகளைக் கேட்டிந்தக்
காதுபுண் ணானதும் கொஞ்சமோடா. 4

கொக்கோ குருவியோ காக்கையோடா - நாமும்
கோழியோ ஆந்தையோ கூகையோடா
மக்கள் இனத்திற்சே ராதவரோ - உண்ண
வாயும் வயிறு மிலாதவரோ. 5

---

3. கார், பசான் - நெல் வகைகள்.

சண்டிக் குதிரைமேல் நொண்டித்துரை - செயும்
சவ்வாரி போலுமிவ் வாழ்வதனில்
உண்ட துடுத்ததை யன்றிநாம் வேறெதும்
உண்மையாய்க் கண்டதும் உண்டோஅடா. 6

கோர்ட்டிலே ஜட்ஜி இருப்பதுவும் - வக்கீல்
கொட்டி முழக்கிநின் றுடுவதும்
கூட்டிலே கள்ளன் நடுங்குவதும் - இந்தக்
கும்பி செயுஞ்செயல் அல்லவோடா. 7

உண்டு வயிறு நிறைந்துவிட்டால் - உடன்
உள்ளக் கவலை ஒழிந்ததடா
மண்டை யுடைத்து வழக்குகள் பேசி - நாம்
வாணுளை வீணாய்க் போக்கோமடா. 8

மஞ்சள் சிவப்புத் துணியணிவோம் - பஞ்ச
வர்ணக் கிளிகளைப் போல்நடப்போம்
வஞ்சனை சூதுகள் செய்யமாட்டோம் - கோர்ட்டு
வாசலை எட்டி மிதிக்கமாட்டோம். 9

ஆதி சிவனுமோர் ஆண்டியடா - அவர்க்(கு)
அன்பான பிள்ளைகள் நாமேயடா
ஓதுமெய்ஞ் ஞானியர் யாவருமே - நமக்(கு)
உற்ற உறவினர் ஆவாரடா. 10

லட்சமும் கோடியும் வேண்டாமடா - அதை
ரட்சிக்க நம்மாலே யாகுமோடா
அட்சய பாத்திர முண்டேயடா - நமக்(கு)
ஆரே நிகரிவ் வுலகிலடா. 11

## 70. சர்வாதிகாரி

தேடித் தேடி இரைகிடை யாதொரு
சிங்க வேறு முழங்கும் முழக்கினில்
பாடும் இன்னிசை கேட்டிட லாமதன்
பார்வை தன்னில் இரக்கமும் பார்க்கலாம்
வாட வாயில் வயிற்றில் அடித்தெமை
வானின் மீன்களை எண்ணிட வைத்தவன்
நீடு வஞ்சகன் செய்த கொடுமைஇந்
நெஞ்சில் ஆறுதல் காண்ப தரிதரோ.

உண்ணச் சோறும் உடையும் அளித்தனம்
உதிரம் விட்டவன் போர்களை வென்றனம்
எண்ணிலாப் பல நாடுக ளுக்கெலாம்
இறைவ னுக்கி முடியையுஞ் சூட்டினேம்
பண்ணு தற்கரி தான பலபல
பணிகள் செய்தவன் சீர்த்தி வளர்த்தனம்
நண்ணும் நன்றி இலாதவன் இன்றொரு
நச்சு வாய்அர வாகிவிட் டானையோ. 2

பஞ்சத் தாண்டியாய் வந்தஅப் பாதகன்
பாரில் நம்முளம் நையப் படுத்தினால்
கெஞ்சிக் கெஞ்சித் திரிந்த அடியவன்
கேலியாய் நம்மை நாய்களென் றெள்ளினால்
தஞ்சம் நீரென் றடைந்தவன் மாறிநம்
தலையி லேறி மிதிக்கத் தொடங்கினால்
அஞ்சி அஞ்சி அடங்கிக் கிடப்பதோ
ஆண்மை மிக்கவ ராக எழுவீரே. 3

## 71. வேலையில்லாத் திண்டாட்டம்

**ஒரு பண்டிதன் பாடுவது**

**சா**த்தி ரங்கள் சரிதங்கள் மன்னவர்
கோத்தி ரங்கள் குலங்கள் இலக்கண
சூத்தி ரங்கள் தொகுத்து விரித்துநான்
ஆத்தி ரத்தொடு கற்ற தளவுண்டோ. 1

**ம**ண்ணி னுள்ளவும் வானகத் துள்ளவும்
எண்ணி எண்ணி எழுதிய நூலெலாம்
நுண்ணி தாக நுழைந்து தெரிந்தவை
கண்ணி யம்பெறு காலமெக் காலமோ. 2

**ப**ட்டம் பெற்றனன் பண்டிதர் தம்மிடம்
மட்டி லாத மதிப்புரை வாங்கினன்
துட்டி லாது சுழன்று கறங்குமிக்
கட்டம் நீங்கு வழியினுங் கண்டிலேன். 3

**வீ**டு விற்றும் விளைநிலம் விற்றும்மா(டு)
ஆடு விற்றும் அணிமணி தாம்விற்றும்
பாடு பட்டுப் படித்த படிப்பெலாம்
வாடும் என்பசி மாற்றிய தில்லையே. 4

ஆயும் மேலதி காரிகள் வாழுமக்
கோயில் தோறுங்கை கூப்பித் தொழுதனன்
ஓயும் நெஞ்சுக் குறுதிசொல் வாரிலை
ஏயும் என்விதிக் கென்செய்கு வேனையோ. 5

நெஞ்சின் நூலை நினைப்பது விட்டினிப்
பஞ்சின் நூலிற் பழகத் துணிகுவன்
கெஞ்சு வாழ்க்கையும் கேடும் ஒழியுமே
விஞ்சு செல்வமும் மேன்மையும் தங்குமே. 6



## 72. தேசியக் கொடி

[மெட்டு : 'தெருவில் வாரானோ' என்னும் முத்துத்தாண்டவர் பதம்.]

பல்லவி

கொடி யிதுவேயாம் - வெற்றிதரு
கொடி யிதுவேயாம்.

அனுபல்லவி

படியி லிமய மலையின் முடியில்
பறந்து நித்மும் சிறந்து விளங்கும் (கொடி)

சரணங்கள்

1. சத்தியம் காக்குங் கொடி - சுதந்திர
சக்தியுண் டாக்குங் கொடி
சித்தந் தெளிந்திடவே - ஊழியங்கள்
செய்திடத் தூண்டுங் கொடி.

உத்தம வீரரும்
பத்தினிப் பெண்களும்
தத்தம் உயிரென
நித்தமும் போற்றிடும் (கொடி)

2. நீதெலா மோட்டுங் கொடி - பாரத
தேவி பாராட்டுங் கொடி
ஓதிய ராட்டினமே - கதியெனும்
உண்மை உணர்த்துங் கொடி
சாதிமத பேதம்
ஏதுமிலா நடு
நீதியை நாட்டிலெவ்
வீதியும் நாட்டிடும் (கொடி)

3. பட்டினி போக்குங் கொடி - நமக்குநற்
பாக்கியம் சேர்க்குங் கொடி
இட்டமாய் யாவருமே - இணங்கி
இருந்திடச் செய்யுங் கொடி
ஓட்டுக் குடிசையில்
ஓங்கிய மேடையில்
எட்டுத் திசையினில்
எங்கும் எழுந்திடும் (கொடி)

## 73. தேசக் கொடி

தேசக்கொடியின் சிறப்பைச் சிறிதேஇங்(கு)
ஆசைப் பெருக்கால் அறைகின்றேன் - மாசிலா
வீரரைப் பெற்று விரிந்த புகழ்பெற்ற
பாரதத் தாயைப் பணிந்து.

---

பாரில் உயர்ந்தமலை இமயமலை - அன்னை
பாரத தேவி பாராட்டுமலை
சீரில் உயர்ந்திடுநம் தேசக்கொடி - அதன்
சிகரம் அணிந்தின்று பறக்குதுபார். 1

வீரர் துணிந்தேறி நட்டகொடி - இது
வெற்றி விருதா யெடுத்தகொடி
யாரும் இறைஞ்சி வணங்குங்கொடி - நமக்(கு)
என்றும் சுதந்தரம் ஈட்டுங்கொடி. 2

கங்கையினும் புனித மானகொடி - கோடிக்
கதிரின் இனியமணம் கமழுங்கொடி
மங்கையர் நோன்பிருந்து நெய்தகொடி - அவர்
வாழ்வு தழையவந்த மங்கலக்கொடி. 3

மின்னல் இடிக்கும்அஞ்சா துயருங்கொடி - விண்
வீரர் திலகர்தொழும் விருதுக்கொடி [ணில்
தன்னை மிதித்தெறிந்த சூரர்களெல்லாம் - இன்று
தாழ்ந்து தலைவணங்கக் காணுங்கொடி. 4

சத்தியம் தவறாது காக்குங்கொடி - சாதிச்
சமயச் சழக்குகளைப் போக்குங்கொடி
உத்தம வீரர்களும் பத்தினிகளும் - தத்தம்
உயிருக் குயிராகப் போற்றுங்கொடி. 5

கலியுகக் கண்ணன் கருணாகரன் - அந்தக்
காந்தி மகான்வாழ்த்தி யெடுத்தகொடி
புலியொடு பசுவுஞ்சென் றோர்துறையில் - மனம்
பொருந்திநீர் அருந்திடச் செய்யுங்கொடி. 6

காணாப் புதுமைகளைக் காட்டுங்கொடி - தொண்டர்
கனவையும் நனவாக மாற்றுங்கொடி [டின்
வாணாளின் இன்பமெலாம் வழங்குங்கொடி - நாட்
வளத்தை வளர்க்கவந்த மந்திரக்கொடி. 7

பட்ட மரம்தழையப் பண்ணுங்கொடி - பொல்லாப்
பகைவரை நண்பராய்க் கூட்டுங்கொடி
துட்டர் துடுக்குகளை அடக்குங்கொடி - தீய
சோம்பலை ஓட்டித் துரத்துங்கொடி. 8

கிழவரைக் குமரராய்த் தேற்றுங்கொடி - எந்தக்
கேட்டிலும் நன்மையே நாடுங்கொடி
அழுதவாய் சிரித்திடப் பார்க்குங்கொடி - ஏழை
அடிமையை ஆண்டானா யாக்குங்கொடி. 9

செய்யாத் தவங்கள்சிறைச் சாலையிற்செய்தோர்க் -
சிறந்த வரமளிக்கும் தெய்விகக்கொடி [இன்று
ஐயோஎன் றடிபட்டு விழுந்தவர்தம் - நோய்
அகற்றுசஞ் சீவினியாய் அமைந்தகொடி. 10

ஏழை அழுதகண்ணீர் துடைக்குங்கொடி - அவன்
இதயம் குளிர இன்பம் பொழியுங்கொடி
ஊழையும் உப்பக்கம் காணுங்கொடி - நித்தம்
உழைத்துமுன் னேறநம்மை ஊக்குங்கொடி.

ராட்டின மல்லாது வேறுபடை - இந்த
நாட்டினுக் கில்லையென்று நாட்டுங்கொடி
ஈட்டிவாள் குந்தங்கள் பீரங்கிகள் - இருந்
திருந்து துருவேறச் செய்யுங்கொடி. 12

ஊக்கத்தை உள்ளத்தில் ஊட்டுங்கொடி - தேச
ஊழியம் செய்திடத் தூண்டுங்கொடி
ஆக்கமெலாந் தேடிச் சேர்க்குங்கொடி - நம்மை
ஆண்சிங்க மாகவே ஆக்குங்கொடி. 13

நாடு நமதாகக் கண்டகொடி - அதை
நாமே அரசாள வைத்தகொடி
வீடு நமதென்று வீரம்பேசி - இன்று
வெற்றி முரசறையச் செய்தகொடி. 14

ஓட்டுக் குடிசையின்மீ தாடுங்கொடி - உயர்ந்(து)
ஓங்கிய மேடையின்மீ தேறுங்கொடி
சட்ட சபைகளிலே தழையுங்கொடி - அங்கே
தங்கும் பெரியோர்மேல் படருங்கொடி. 15

மானம் உருவாக வந்தகொடி - இதை
மாசுறச் செய்வது பாவம்பாவம்
ஊனில் உயிருள்ள காலமெல்லாம் - மிக
ஊக்கமாய் நின்றுநாம் காத்திடுவோம். 16

வேறு

காரிருளும் நீங்குகவே
காந்திமதி நிலவுகவே
பாரிலறம் பெருகுகவே
பயிர்களெல்லாம் செழித்திடவே. 17

## 74. காங்கிரஸ் கப்பல்

இமய மலைமுதல் குமரிவரை - வாழும்
யாவரும் யாத்திரை செய்யுங்கப்பல்
சமயக்கடல் சாதிக் கடல்களெல்லாம் - சற்றும்
சாய்ந்து சரியாது நீந்துங்கப்பல். 1

பொறுமையாம் நங்கூரந் தாங்குங்கப்பல் - தேசப்
பொதுநலம் சுக்காணாய் ஓங்குங்கப்பல்
வறுமை யறநீக்கி வெல்லுங்கப்பல் - நல்ல
வாய்மையாம் பாய்கட்டிச் செல்லுங்கப்பல். 2

ஆண்டுகள் ஐம்பது கண்டகப்பல் - புயல்
ஆயிரத் தூக்கிடு நின்றகப்பல்
வேண்டும் வளந்தேடிச் சேர்க்குங்கப்பல் - என்றும்
வெற்றித் திசைநேரே நோக்குங்கப்பல். 3

வீரர் திலகர்கள் செய்தகப்பல் - நெஞ்சில்
விளைந்த வயிரத்தால் ஆனகப்பல்
பாரத மாதா பாராட்டுங்கப்பல் - இன்று
பாபுரா ஜேந்திரர் ஓட்டுங்கப்பல். 4

தீமைக் கடலெல்லாம் தாண்டவேண்டும் - எல்லாத்
தெய்வங்களுங் கூடிக் காக்கவேண்டும்
க்ஷேமத் துறைசென்று சேரவேண்டும் - அங்கே
செயக்கொடி கட்டித் திகழவேண்டும். 5

## 75. கதர் விற்பனை

பாவியென் கதையினைக் கேளுமையா - அந்தப்
பாஞ்சாலி கதையும்ஈ தொக்குமோஐயா
ஆவியைப் பிடித்துநான் அலைவதெல்லாம் - என்றன்
அருமைக் குழந்தைகளுக் காகவேஐயா. 1

கூடப் பிறந்தவரும் மாண்டுபோனார் - என்னைக்
கொண்ட கணவரும்போய்க் காடுமறைந்தார்
தேடி அவரளித்த பொருளுமில்லை - ஒரு
செம்பா லடித்தகாசென் கையிலுமில்லை. 2



வாடி முகம்சடைத்த
மக்களு முண்டு - தீரா
வயிற்றுப் பசியுமுண்டு
நானு முண்டு
வீடுங் குடியிருக்க
இல்லை ஐயா - என்றன்
விதியின் கொடுமைகளும்
கொஞ்சமோ ஐயா. 3

பருத்தி விளைக்குச்சென்று
பஞ்சுவாங்கினேன் - அந்தப்
பஞ்சை அரைத்துநல்ல
நூலும் நூற்றேன்
ஒருத்தி துணையுமின்றி
ஆடையும்நெய்தேன் - அதை
ஊரூராய்க் கொண்டுகொண்டு
விற்கவும் வந்தேன். 4

நல்ல சரக்குசீமைச் சரக்கென்றுநீர் - இந்த
நாட்டுச் சரக்கைப் பழிக்கலாமோ
மெல்லிய பூவாடை நெய்துதருவோம் - உங்கள்
மேலான ஆதரவே வேண்டுமையா. 5

எங்களையோர் மில்லெனவே எண்ணலாமோ- அந்த
இரும்புக் கசதியுண்டோ களைப்புமுண்டோ
பொங்கு மனக்கவலை ஏதுமுண்டோ - வீட்டுப்
பொறுப்புகள் சற்றுமுண்டோ கூறுமையா. 6

நெல்லையள்ளிக் குத்துவேனே நெய்திடுவேனே-நான்
நெருப்பினை மூட்டுவேனே கொட்டை நூற்பேனே
மில்லினுக்கு வாயுமுண்டோ வயிறுமுண்டோ - அதை
விட்டுவில காதமக்கள் கூடவேயுண்டோ. 7

பஞ்சினையான் பன்னுவேனே பணிசெய்வேனே-இந்தப்
பசலை அழாதபடி பால்கொடுப்பேனே
நெஞ்சிரக்கமுள்ளவரே கொஞ்சம்பொறுத்தால் - இன்னும்
நேரியநல் லாடைநெய்து கொண்டுவாரோமோ. 8

அஞ்சு வயதுமகள் கோலமிட்டால் - அதை
அழகில்லை என்றழிக்கும் தாயருமுண்டோ
பஞ்சு படுவதிலும் பெரும்பாடு - நாங்கள்
படுவதும் நீங்களறி யாததோஐயா. 9

காசுமியர் சால்வைநெய்த கையுமில்லையோ - உயர்
காசியிலே நெய்தபட்டின் காலமும் போச்சோ
மாசிலாத டாக்காவின் மஸ்லினுடை - இன்னும்
வாவென்றால் வாராதோ வளர்ந்திடாதோ. 10

அன்னிய நாடுகளுக் காடையனுப்பி - மானம்
அழியாமல் காத்ததுங்கள் முன்னோரல்லவோ
இந்நிலை மறந்துநீங்கள் இந்தநாளில் - உங்கள்
இடுப்புத் துணிக்கலைவ திழிவல்லவோ. 11

சாயமிட்ட சேலைகளை நெய்துதாரோமோ - நல்ல
சரிகையில் வேலைசெய்து கொண்டுவாரோமோ
நேயமெழ ஆதரித்தால் போதுமையா - இந்த
நீணிலத்தில் வெற்றியொடு நிற்போமையா. 12

கைகால் களைக்கநெய்த கதராடை - இரு
கண்கள் சடையநெய்த கதராடை
ஐயாநீர் வாங்கியிதை அணிவீரோ - எங்கள்
அரும்பசிக் கன்னமெதும் அளிப்பீரோ. 13

குறுக்கு முறியநெய்த கதராடை - கும்பிக்
கொதிப்பை அடக்கிநெய்த கதராடை
மறுத்துநீர் தள்ளாமல் கொள்ளுவீரோ - எங்கள்
வயிற்றில் எரிதணியச் செய்குவீரோ. 14

தேசமெல்லாம் புகழ்ந்திடும் ஆடைஐயா - மேலைச்
சீமையையும் நடுக்கிடும் ஆடைஐயா
காசுபணம் இல்லாத ஏழைகளுக்காய் - அந்தக்
காந்திமகான் போற்றுங்காம தேனுஐயா. 15

வேறுவேறுபுண்ணியங்கள் செய்யவேண்டுமோ - கதர்
வேட்டிவாங்கி யணிவது போதாதோஐயா
நூறுபேருக் கன்னம்நிதம் அளித்தபலன் - இந்த
நூலாடை கட்டுபவர்க் குண்டேஐயா. 16



## 76. வட்டமேசை மகாநாடு

[குறத்தி குறி: 'ஆண்டிப் பண்டாரம்' மெட்டு.]

குறத்திப் பெண்ணேநீ - எனக்கோர்
குறியுரைப்பாயோ?

வட்டமேசை மகாநாடு
மங்களமாய் முடிந்திடுமோ
திட்டமாகச் சுதந்திரத்தின்
தீர்மானம் பழுத்திடுமோ? 1

கற்றவர்கள் பெரியோர்கள்
கப்பலேறிச் சென்றவர்கள்
வெற்றிகொண்டு வருவாரோ
வெறுங்கையாய்த் திரும்புவரோ? 2

இந்துமக்கள் மகம்மதியர்
இணங்கிமனம் பொருந்துவரோ
பந்தமறக் கோட்டைக்குள்ளே
படைகள்வெட்டி நிற்பாரோ? 3

ஓட்டிவரும் இந்துமுஸ்லிம்
ஒற்றுமையும் உறுதியாமோ
மொட்டைத்தலை குடுமியோடு
முடிக்கமுயன் றதுவாமோ? 4

---

3. 'கோட்டைக்குள் படைவெட்டு' என்பது ஒரு பழமொழி.

மன்னவர்கள் இசைவர்க
வருவரோ மாறிஅவர்
தங்நயமே கருதிநம்மைத்
தனிவழியே விடுவாரோ ? 5

தீதான அடிமைநிலை
தீர்ந்திடவே நம்மவர்கள்
வாதாடிச் செயிப்பாரோ
வாய்பேசா திருப்பரோ ? 6

சர்ச்சிலிடும் கர்ச்சனையில்
தளர்ந்துமனம் சடைவாரோ
மெச்சிடவே இந்தியரும்
வீரமொழி பகர்வாரோ ? 7

உபசார விருந்துகளால்
ஊக்கமெலாம் உடைந்திடுமோ
அபசாரம் இந்தியர்கள்
அணுகாமல் காப்பாரோ ? 8

புஞ்சிரிப்பில் கைகுலுக்கில்
புத்திமிக மயங்கிடுமோ
நெஞ்சிருப்பை நம்மவரும்
நிறைவேற்றி வருவாரோ ? 9

இரைந்தழுது பட்டதெல்லாம்
இந்தியர்தம் உள்ளத்தில்
கரைந்திடுமோ இந்நாளில்
கனலாகி மூண்டெழுமோ ?

மாதரசி சரோஜினியார்
வாக்குநயம் பலித்திடுமோ
மூதறிஞர் மாளவியா
முயன்றதவம் முற்றிடுமோ ?

சீக்கிரமாய் காந்திமகான்
செயக்கொடியும் கட்டுவரோ
ஊக்கமுடன் இந்தியரும்
உளம்மகிழ்ந்து வாழ்வாரோ ?

குறத்திப் பெண்ணேநீ - எனக்கோர்
குறியுரைப்பாயோ ?

## 77. நாஞ்சில் நாடு

[நாஞ்சில்நாடு தென்திருவாங்கூரில் ஒரு சிறுபகுதி. பண்டைநாளில் சேர சோழ பாண்டிய அரசர்கள் நிரந்தரமாகப் போராடுதற்கு இவ் வளநாடு இடமாயிருந்ததாம். தெற்கும் மேற்கும் குமரிக்கடலையும் வடக்கும் கிழக்கும் பொதிகை மாமலையின் கிளைகளையும் எல்லையாகப் பெற்றிருக்கும் இந்நாடு நீர்வளம் செறிந்ததாகும். பஃறுளியாறு என்று சிலப்பதிகாரம் சிறப்பிக்கும் பேராறு நாஞ்சில் நாட்டில் உற்பத்தியாயிற்றென்று கூறுவதுண்டு.]

மாமதில் போல்மலை சூழும்நாடு - வானம்
மாதமும் மாரி பொழியும்நாடு
பூமக ளின்முக மாகும்நாடு - சேரர்
பொன்முடி சூடிப் புரக்கும்நாடு. 1

பாண்டியர் வந்தணை செய்தநாடு - சோழர்
பண்டு முடிதரித் தாண்டநாடு
வேண்டு பொருள்கள் விளையும்நாடு - சோலை
வேலியாய்ச் சூழ்ந்தணி செய்யும்நாடு. 2

நெஞ்சில் மிகுந்த கருணையெல்லாம் - இங்கு
நீராக மாறி நிறைந்திடவே
வஞ்சிமன் கட்டிய பேச்சிப்பாறை - ஏரி
வற்றாது பாயும் வளநாடு. 3

---

2. பாண்டியன் அணை, மும்முடிச் சோழபுரம் இவை சான்றுகள். பாண்டியர் சோழருடைய பழைய சிலாசாசனங்கள் இங்குக் கிடைக்கின்றன.

3. வஞ்சிமன் - திருமூல மன்னர்.

ஆயிரங் காலால் நடந்து நடந்தழு(து)
அன்னை பழையா றளிக்கும்நாடு
தீய்வு கரிவறி யாதநாடு - நித்தம்
செல்வம் பொழியும் திருநாடு.

க்ஷேம மாகப்பயிர் செய்திடவே - ஈசன்
சேவடி போற்றிப் பணிந்துழவர்
பூமி பவித்மாம் நாளிலே ஆயிரம்
பொன்னேர்கள் பூட்டி உழும்நாடு. 5

பண்ணை பெருத்த பழநாடு - சுற்றிப்
பார்த்திடக் கண்கள் குளிரும்நாடு
மண்ணையும் பொன்னுக மாற்றும்நாடு - கவி
வாணர் புகழும் தமிழ்நாடு. 6

செங்நெற் பயிர்அலை மோதும்நாடு - வாழை
தென்னை கமுகு செழிக்கும்நாடு
மன்னிய முல்லை மருக்கொழுந்தின் - நல்ல
வாசம் எழுந்து கமழும்நாடு. 7

காடுமலை யெல்லாம் மேய்ந்துவந்து - பசு
கன்றினை ஊட்டிக் களிக்கும்நாடு
ஆடுகள் மந்தையாய் வாழும்நாடு - கண்ணுக்(கு)
ஆனந்தக் காட்சி யளிக்கும்நாடு.

தேவர் திருக்கோயில் ஓங்கும்நாடு - மேழிச்
செல்வர் பதிகள் சிறக்கும்நாடு
மூவர் தமிழும் முழக்கும்நாடு – திரை
முத்தினை வீசிக் கொழிக்கும்நாடு. 9

புண்ணியஞ் செய்தவர் வாழும்நாடு - நெல்லைப்
பொன்மலை போலக் குவிக்கும்நாடு
எண்ணும் பலதொழில் செய்யும்நாடு - நீதி
ஏந்திய செங்கோல் வளர்க்கும்நாடு. 10

கொண்ட நிலத்தில் விளைந்துவரும் - அந்தக்
கூழும் அமுதாகக் கொள்ளும்நாடு
கண்டு தொழுதுகை கூப்பிநின்று - பெறும்
காசை விடமாகக் காணும்நாடு. 11

வெற்றிச் சுதந்திரம் வேண்டும்நாடு - சாதி
வேற்றுமை என்றும் வெறுக்கும்நாடு
ஒற்றுமை யாக ஒழுகும்நாடு - தேச
ஊழியத் தாலே உயரும்நாடு. 12

தென்றல் உலவித் திரியும்நாடு - உடற்
சிக்கெலாம் ஓட்டித் துரத்தும்நாடு
என்றும் தழைத்தறம் ஏறும்நாடு - வையத்(து)
ஏதும் இணையிலா நாஞ்சில்நாடே. 13

# 78. நாஞ்சில் நாட்டு வேளாளர்

## பாக வழக்கு

**கண்ணன் துதி**

*தஞ்ச மென்றவர் தம்மை யளாபபவளா
கஞ்சன் மாமரு கன்கழல் போற்றுவாம்
நஞ்செய் நன்னிலம் ஓங்கிய நாடிதில்
விஞ்சு பாக வழக்கை விளம்பவே.*

**காரணவரைக் கண்டு அனந்திரவர்கள் கூறுவது**

*காணி யெலாம்ஆளும் காரணவர் - உம்மைக்
கண்டு தொழுதிவை சொல்லவந்தோம்
வீணர் இவரென் றிகழ்ந்திடாமல் - கேட்டு
வேண்டும் விடைகள் பகருமையா.*

*பற்றுப் பருக்கையும் உண்டுவிட்டீர் - வெறும்
பானையைப் பங்கிட வைத்துவிட்டீர்
சற்றும் கருணை உமக்கிலையோ - எங்கள்
சங்கடம் முற்றும் அறிகிலிரோ.* 2

---

காரணவன் - குடும்பத்தலைவன். அனந்திரவன் - மருமக்கள் தாயம் என்னும் வழக்கைப் பின்பற்றிய குடும்பத்தில் காரணவனுக்கு இளையவனுயுள்ளவன்.

வட்டி யிலேநெல் அளந்துநீர் ஒவ்வொரு
மாதமும் தந்திட வேதனையேன்
குட்டிக் கரணங்கள் போட்டிடினும் - இனிக்
கோர்ட்டு விதிகள் அழிவதுண்டோ. 3

யானைக் குலத்துநீர் வந்தவரோ - யாங்கள்
ஏழை எறும்பின் குலத்தவரோ
மான மிலாது பெரும்பங்கு கேட்டிட
வாயும் சிறிதுமே கூசலையோ. 4

கைப்பொருள் எல்லாம் கடத்திவிட்டீர் - நூறு
கள்ளக் கடன்களும் காட்டிவிட்டீர்
பப்படம் போல நொறுங்கிடோமோ - இந்தப்
பாரமும் நாங்கள் பொறுப்போமோ. 5

கூனக் கிழவிகள் கொட்டைநூற்று - முன்னம்
கூட்டிய தேட்டம் எமக்கிலையோ
ஆன பொருளில் அதிகம்எடுக்க - நீர்
ஆசைப் படுவதெக் காரணமோ. 6

பத்துத் தலையுள்ள ராவணரோ - பெரும்
பங்குநீர் கேட்ட முறையுமேதோ
சொத்துக் குரியரும் நீவிரேயோ - நாங்கள்
தோட்டப் புழுக்களோ சொல்லுமையா. 7

உள்ள வகையெலாம் உங்களுக்கோ - நாங்கள்
உண்ணுத சோறும் உமதேயோ
கள்ள வழக்கினிச் செல்லாதையா - அந்தக்
காலமும் சென்று கழிந்ததையா. 8

5. பப்படம் - அப்பளம்.

பண்ணை முழுதும் உமக்கானால் - எம்மைப்
பத்திரம் ஒப்பிடத் தேடுவதேன்
கண்ணை விழித்துநீர் கண்டிடீரோ - இந்தக்
காலத்தின் போக்கும் உணர்ந்திடீரோ. 9

சீறிப் பறித்தெங்கள் வாயமுதை - உங்கள்
செல்வர்க் களிப்ப தழகாமோ
தேறித் தெளிந்த பெரியவரே - இது
தெய்வம் பொறுக்கும் செயலாமோ. 10

தேடிய தேட்டம் அளித்ததெல்லாம் - உங்கள்
செல்வச் சிறுவர்க்கும் போதாதோ
கூடஇப் பங்கும் பிடுங்கி அவர்க்குக்
கொடுத்திட உள்ளம் துணிந்தீரோ. 11

நெற்றி வியர்வை நிலத்தில்விழ - நீரும்
நித்தம் உழைத்த தெமக்கேயோ
பற்றிலா நெஞ்சம் படைத்தவரே - பெரும்
பங்குநீர் கேட்கும் முறையுமேதோ. 12

கட்டி உழுவதும் மக்களுக்காம் - அந்தக்
காளைக்கு வைக்கோல் குடும்பத்திலாம்
சட்டம் இதுநல்ல சட்டமையா - எந்தச்
சாத்திரம் கண்டு படித்தீரையா. 13

குண்டுரம் தோட்டக் குழைகளை - நீரும்
குடும்ப வயலில் இடுவதுண்டோ
உண்ட உணவுக்கு வஞ்சகம் செய்பவர்
உம்மைப் போல்இந்த உலகிலில்லை. 14

---

9. ஒப்பிடுதல் - கையெழுத்துச் செய்தல்.

பண்டம் பொருளெலாம் கொள்ளைகொண்டீர் -
பங்கும் அதிகமாய் வேண்டுமென்றீர் [மேலும்
சண்டைக்கும் நல்ல கொடிகட்டினீர் - இது
சற்றும் உமக்குத் தகுமோஐயா. 15

கொள்ளிக்கா சன்றிஉம் மக்களுக்கு - எங்கள்
குடும்ப வகையில் உரிமையுண்டோ
அள்ளிப் பெரும்பங் கெடுத்தவர் கையில்
அளிப்ப துமக்குச் சரியாமோ. 16

சாகைசாகை என்று சத்தமிட்டீர் - அந்தச்
சாகைகள் தம்முள்ளே ஒப்பதுண்டோ
ஊகமாய்த் தாவர நூலைப்படித்(து) - அதன்
உண்மை வழிகண் டொழுகுவீரே. 17

ஆறு பிஞ்சுள்ள தொருகிளையாம் - மற்ற(து)
ஆயிரம் கொண்ட பெருங்கிளையாம்
ஏறும் உணவுப் பொருளினை - இம்மரம்
எப்படிப் பங்கிடும் செப்புவீரே. 18

சாகைப் பாகம்அனி யாயப்பாகம் - அது
சண்டைகள் மூட்டும் சழக்குப்பாகம்
நோக மனதைப்புண் ணுக்கும்பாகம் - ஒரு
நூல்வழி சென்றிடா நொண்டிப்பாகம். 19

இருந்தும் இறந்தவர் ஆக்கும்பாகம் - எம்மை
ஏழைக ளாக்கத் துணியும்பாகம்
திருந்தும் அறிஞர் இகழும்பாகம் - நன்மை
சேராத பாகம்அச் சாகைப்பாகம். 20

17. சாகை - கிளை, கிளைக்குடும்பம்.

சாகைப் பாகம்சட்ட மாக்குவதே - எங்கள்
சாவுக்குத் தூது விடுவதையா
காகமாய் எங்கும் பறந்துதிரிந்(து) - இன்னும்
காலம் கழிப்பது கஷ்டமையா. 21

சட்டம் தெரிந்தவர் கூறும்பாகம் - தர்ம
சாத்திர சம்மத மானபாகம்
திட்டமாய்ச் செல்வம் வளர்க்கும்பாகம் - நாங்கள்
செப்பும் தனித்தனிப் பாகமையா. 22

பாடு படவழி காட்டும்பாகம் - கல்விப்
பட்டங்கள் பெற்றிடச் செய்யும்பாகம்
கூடிய சோம்பலை ஓட்டும்பாகம் - நாங்கள்
கூறும் தனித்தனிப் பாகமையா. 23

இட்டமாய் யாவரும் வேண்டும்பாகம் - எம்மை
இராசாக்க ளாக்கி இருத்தும்பாகம்
கட்ட மெலாம்அற நீக்கும்பாகம் - நாங்கள்
காட்டும் தனித்தனிப் பாகமையா. 24

வாழ்வின் பொறுப்பை உணர்த்தும்பாகம் - பொல்லா
வம்பு வழக்குகள் போக்கும்பாகம்
தாழ்வினை யெல்லாம் அகற்றும்பாகம் - நாங்கள்
சாற்றும் தனித்தனிப் பாகமையா. 25

வோட்டுக் குரியவ ராக்கும்பாகம் - எம்மை
ஊரார் மதித்திடச் செய்யும்பாகம்
நாட்டுக்கு நல்வழி காட்டும்பாகம் - நாங்கள்
நாட்டும் தனித்தனிப் பாகமையா. 26

செம்பாக மாகிய பாகம்இது - காலம்
சென்றாலும் கைத்திடாப் பாகம்இது
வம்பாக நீர்கெட்டுப் போகவேண்டாம் - எங்கள்
வார்த்தையில் நம்பிக்கை கொள்ளுமையா. 27

சாட்சி களைத்தேடி ஓடவேண்டாம் - வக்கீல்
சாமிக்குத் தட்சணை வைக்கவேண்டாம்
ஆட்சிப் பொருளெலாம் விற்கவேண்டாம் - ஏழை
ஆண்டி பரதேசி யாகவேண்டாம். 28

கோர்ட்டு வாசல்சென்று காக்கவேண்டாம்-அங்கே
குள்ள நரிபோல நிற்கவேண்டாம்
ஏட்டுக் குமஸ்தாவைக் காணவேண்டாம் - ஜட்ஜி
ஏச்சுக்கேட் டுள்ளம் எரியவேண்டாம். 29

ஊர்வகை ஆயிரம் கோட்டைநிலம் - பக்கத்(து)
உள்ளத னுலெமக் கென்னபயன்
ஓர்பிடிச் சோற்றுக் குதவிடுமோ - அதன்
உண்மையும் நீரறி யாததுவோ. 30

கூட்டக் குடும்பங்கள் வேண்டாமையா - இனிக்
கும்பி பொறுக்கவும் மாட்டாதையா
பாட்ட நிலமும் கிடையாதையா - எங்கள்
பாகத்தைப் பங்கிட்டுத் தாருமையா. 31

31. பாட்ட நிலம் - குத்தகைக்கு வாங்கிய நிலம்.

ஆறுசென்டு பூமி போதுமையா - சொந்தம்
ஆனால் அதுவுமா றேக்கரையா
சோறுதந் தெங்களைக் காக்குமையா - அது
சொன்ன படிக்கும் விளையுமையா. 32

காப்பிக் கடைபோக வேண்டுமென்றால் - எங்கள்
கையில் அரைக்காசும் உண்டோஐயா
தாப்புத் தரிப்புவே றில்லைஐயா - பங்கைத்
தந்து விட்டால்வெகு புண்யமையா. 33

பங்கும் கடைசியாய்ச் செய்யும்பங்காம் - இதில்
பட்சபாதம் செய்ய நீதியுண்டோ
தங்கும் புதுச்சட்டம் வந்திடுமேல் - உங்கள்
சந்ததி நாங்களும் ஆகுவமோ. 34

வீரியப் பேச்செல்லாம் விட்டுவிடும் - உள்ள
வீதம் பகிர்ந்து கொடுத்துவிடும்
சூரியன் மேற்கே உதித்திடினும் - எங்கள்
சொத்தவ காசங்கள் போய்விடுமோ. 35

நல்லவர் உண்மை நடுநிலை யுள்ளவர்
நாட்டிற் பெரியவர் நம்வழக்கில்
நெல்லிது சாவி யிதுவெனக் கண்டு
நிறுத்துவர் நீதி அறிந்திடுவோம். 36

---

35. அவகாசம - பாத்தியதை.

# 79. திருவிதாங்கோட்டு மன்னர்

## க. திருமூலமன்னர் பிறந்தநாள் விழா

[திருமூல மன்னர் வஞ்சிநாட்டை ஆண்ட சேரமன்னர்களுள் ஒருவர். இவரது ஆட்சிக் காலத்தில் ஒரு பிறந்த நாட் கொண்டாட்டத்திற்காக இப்பாடல்கள் பாடப்பட்டன. இவர் 66 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார் (கி. பி. 1858-1924).]

பாட்டில் அமைப்பர் படிய மனங்கொள்வர்
ஏட்டில் அழகாய் எழுதிவைப்பர் - வாட்டந்தீர்த்(து)
அன்பு கனியஎமை ஆளுந் திருமூல
மன்புகழைக் கேட்டு மகிழ்ந்து. 1

மன்னும் மதுபால வயங்குமம வஞ்சயதைப
பொன்னுலக மாக்கிப் புகழ்பெறுமே - முன்னமொரு
சீதைக் கணைகண்ட செம்மல் தலைகனியக்
கோதைக் கணைகண்ட கோ. 2

எண்ணுந் திருவருளால் இம்மூல மன்னவற்(கு)
நண்ணும் புகழெல்லாம் நம்புகழே - மண்ணின்று
தாளுண்ட நீரைத் தழைபூவும் காயுமுறு
நாளுண்டோ கோதாய் நவில்.
3

3. 'கோதைக்கணை' என்றது கோதையாற்றில் அணைகட்டி தென்திருவிதாங்கூரில் விவசாயத்தைப் பெருகச் செய்ததைக் குறிப்பதாகும்.

மாவேறு மந்தி வருக்கைச் சுளையமுதம்
நாவேற உண்ணுமலை நாடாள்வான் - பாவேறு[வுலகில்
செந்தமிழான் வெண்குடையான் செங்கோலான் இவ்
சந்ததமும் வாழ்க தழைத்து. 4

பூமகளைக் காத்துப் புகழ்மகளைப் போற்றிநிதம்
நாமகளை வஞ்சிநன் நாட்டிருத்தித் - தாமமணி
வண்ணனடி என்றும் மனங்கொண்டு மாமூல
அண்ணல்இனி தாள்க அரசு. 5

வஞ்சித் திருமூல மன்னவற்குப் பன்னலமும்
விஞ்சத் திருவருளை வேண்டுதுமே - பொன்செய்
குளம்பெருக்கி வாழும் குடிக்குப் பயிர்கள்
வளம்பெருக்கு மென்று மதித்து. 6

கண்ணுக் கினியன் கவிக்கினியன் வாய்க்கினியன்
பண்ணுக் கினியனருள் பற்றுமினோ - நண்ணுபுகழ்
வஞ்சி மகிழ்நன் வருந்திருநாட் கோலமிது
நெஞ்சுக் கமுதளிக்கும் நேர். 7

என்றும் தழைத்திடுக இன்தமிழ்ப்பா வேய்ந்திடுக
நின்றிந் நிலத்தில் நிலவிடுக - துன்றுசுவைப்
பாவடிகள் தேன்வடியப் பாடும் புலமைஇளங்
கோவடிகள் போந்த குலம். 8

---

8. 'பாவடிகள் தேன்வடிய' என்பது சிலப்பதிகாரஞ் செய்தருளிய இளங்கோவடிகளைக் குறிப்பதாகும். அவர் சேர மரபினர் என்பதைக் காட்டுகிறது.

## உ. இளங்கோ நவமணிமாலை

### வெண்பா

ஆயிரத்தெண் பத்தெட்டில் ஐப்பசிமா தத்தில்நலம்
ஏயுமொரு தேதியிரு பத்தெட்டில் - மேயகுரு
வாரமதில் சித்திரையில் வந்தவிடை லக்கினத்தில்
சேரஇளங் கோவுதித்த தே.

### கண்ணிகள்

வஞ்சிதேசம் எங்கும்புது மணம் வீசும் பூவாம்
மணம்வீசும் பூவழகை வகுத்துரைக்க லாமோ! 1

பார்வதிபாய் மகாராணி பக்கம்வளர் கிளியாம்
பக்கம்வளர் கிளிக்கினிய பழங்கள்கொண்டு போவோம்.

முடிவேந்தர் மடியிருத்தி முத்தமிடும் முத்தாம்
முத்தமிடும் முத்தின்விலை மூவுலகில் உண்டோ! 3

திருமூல மகிபருக்குத் தினமினிக்கும் அமுதாம்
தினமினிக்கும் அமுதின்விலை செப்பவலார் உண்டோ! 4

வஞ்சிராஜ குலம் தழைத்து வந்தபசுங் கொழுந்தாம்
வந்தபசுங் கொழுந்தோங்கி வளர்ந்துநிழல் தருமே! 5

மூலமன்னர் செய்தருமம் முற்றிவந்த கனியாம்
முற்றிவந்த கனிநமக்கு முழுதுமின்பம் தருமே! 6

அன்புநீரை அடைத்துநாங்கள் அகம்வளர்க்கும் பயிராம்
அகம்வளர்க்கும் பயிருமெங்கட் களிக்கும்நல்ல பலனே! 7

குடிகளுக்கு க்ஷேமமெல்லாம் கொண்டுவரும் கலமாம்
கொண்டுவரும் கலத்திற்கிணை குவலயத்தி லுண்டோ! 8

சித்திரைநாள் அவதரித்த சேரஇளங் கோவாம்
சேரஇளங் கோவினுக்குச் செகதீசன் துணையே! 9

## ௩. சித்திரை மன்னர் முடிசூட்டு விழா

சேரகுல சேகரனைச் சித்திரைநாள் வந்தமன்னைப்
பாரரசி பார்வதிபாய் பாலகனைச் - சீரமைந்த
வஞ்சிக்கு வாய்த்தமண வாளனை வாழ்த்துவதெம்
நெஞ்சுக்கு வாய்த்த நினைவு. 1

பன்னாடுஞ் சுற்றிப் பழகியங் கங்குள்ள
நன்னாக ரீகமெலாம் நன்குணர்ந்து - தன்னாடு
காக்கவரும் சேரகுல காவலன்சீர் செந்தமிழின்
பாக்கமழ நாவேநீ பாடு. 2

ஆயிரத்து நூற்றேழில் ஐப்பசிநா லைந்ததனில்
தூயவெள்ளி சேரும் சுபதினமே - மேயதிரு
மூலமன் பூண்ட முடிபூண்டு சித்திரைமன்
ஞாலம் புரக்கவந்த நாள். 3

திருமால் அருளோ திருமூல மன்செய்
அருமா தவமோ அறியேம் - உருவாகி
மாமகுடம் சூடி வளருஞ்செங் கோலேந்திப்
பூமகிழப் போந்ததிப் போது. 4

சீர்பெருகும் மாதேவி சேதுலக்ஷ்மி பாய்மகிழத்
தார்மௌலி சித்திரைமன் தாங்கினான் - பாரதனில்
தாயின் சுமைவாங்கித் தான்சுமந்து கொள்ளுவது
சேயின் கடமையெனத் தேர்ந்து. 5

சித்திரைநாள் வந்த திருமன்னன் மாமகுடம்
அத்தனரு ளாலணிந்த அந்நாளே - ஒத்தவஞ்சி
மாதைமணந் தான்கோடி மக்களையும் பெற்றினிய
தாதையெனப் பேருமெடுத் தான். 6

மன்னர் பெருமான் வடிவழகன் சித்திரைமன்
பன்னு கலைதேர்ந்த பண்டிதன் - உன்னும்
கருணையொடு நீதியிரு கண்ணாக வஞ்சி
இருநிலம் காக்க இனிது. 7

நாட்டின் நலமே நமதுநலம் என்றுள்ளந்
தீட்டும் பெருமானெம் சித்திரைமன் - கூட்டும்
குடியரசில் மன்னவர்செங் கோலரசை மெச்சும்
படியரசு செய்க பரிந்து. 8

திருவஞ்சி நாடாளச் சித்திரைநாள் வந்த
பெருமானை எந்நாளும் பேணி - மருவும்
நடுநீதி காக்குமவன் நற்கருணை காக்கும்
நெடுமால் அருள்காக்கும் நேர். 9

நீதி வளர நிதிவளர நல்லறிவின்
சோதி வளர்ந்தெங்கும் தோன்றவே - ஓதுபுகழ்ச்
சித்திரைநாள் வந்த திருவாளன் ஏந்துமுடி
நித்தமும் வாழ்க நிலத்து. 10

பார்வதிபாய் கண்குளிரப் பாவாணர் சொற்குளிர
நேர்வதியும் வஞ்சி நிலங்குளிரத் - தார்மௌலி
சித்திரைமன் னேந்தித் திருவனந்தை மாநகரில்
எத்தினமும் வாழ்க இனிது. 11

நாட்டுக் கணியாகி நன்மைக்கு வித்தாகிப்
பாட்டுக் கினிய பயனாகி - ஊட்டிநிதம்
குஞ்சனைக்கும் தாய்போல் குடியணைக்கும் சித்திரைமன்
வஞ்சிநிலம் வாழ்க மகிழ்ந்து. 12

## ௪. சித்திரை மன்னர் பிறந்தநாள் விழா

பூவால் பசுங்கொடியும் புன்சிரிப்பால் கைம்மகவும்
நாவால் இளங்கிளியும் நன்கோதும் - மூவாத
சீமான் அனந்தைத் திருமால் அடிமறவாக்
கோமான்தன் ஆட்சிக் குணம். 1

ஈசன் அடியார் எவருக்கும் ஆலயத்தின்
வாசல் வழிதிறந்த மாமன்னன் - நேசமிகு
புத்தர் அசோகர் புகழையெலாம் தன்புகழா
நித்தமும் கொண்டான் நிலத்து. 2

வஞ்சி வளநாடு வானவர்நா டென்றுலகில்
செஞ்சொற் புலவரெலாம் செப்பவே - விஞ்சியபால்
ஆழியிற் கண்வளரும் அண்ணலரு ளாலென்றும்
வாழிநம் சித்திரை மன். 3

ஆண்டபெரு நாடும் அரசும் அரும்புலவர்க்(கு)
ஈண்டு பரிசில் எனஅளித்துப் - பூண்டசுவைச்
செந்தமிழைக் கேட்டுவக்குஞ் சேரகுலம் இந்நிலத்துச்
சந்ததமும் வாழ்க தழைத்து. 4

---

4. தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர அரசன் தன் அரசையும் நாட்டையும் அரிசில் கிழார் என்னும் புலவருக்குப் பரிசிலாக அளித்தான் என்பது பதிற்றுப்பத்தால் அறியப்படும் செய்தி.

## 80. வேல்ஸ் இளவரசர் வரவேற்பு

**வெண்பா**

தண்ணளியின் மண்முழுதும் தாங்குந் தனிக்கவிகை
அண்ணலருள் ஜார்ஜின் அருங்குமரற் - கெண்ணுபுகழ்ச்
செல்வற்கு வேல்ஸினிளஞ் செம்மற்குத் தேமொழியீர்
நல்வரவு சொல்வோம் நயந்து.

---

பாரணிந்த பலமன்னர் பரந்தபுகழ்க் குலமாம்
பாற்கடலின் உதித்தெழுந்த பாக்கியமே வருக
தாரணியெவ் அறங்களுமே தழைத்தோங்கி வளரத்
தனிமுதலைத் தொழுதடைந்த தவப்பயனே வருக. 1

எவ்வுளமுங் குளிரஒளிர் இளமதியே வருக
எங்கும்நிறை புகழ்மணக்கும் எழில்மலரே வருக
செவ்வியுறும் அரசர்குலந் திகழ்மணியே வருக
ஜ்யார்ஜுமகா ராஜனருள் திருமகனே வருக. 2

பொருளேந்தி இனியதமிழ்ப் புதுமாலை ஏந்திப்
புவிராசர் தொழுவர்உனைக் கவிராசர் புகழ்வர்
அருளேந்தி எமையாளும் அரசகுலக் கொழுந்தே
ஆதரித்தெம் திருநாட்டின் அணிகாண வருக. 3

---

இந்த வேல்ஸ் இளவரசர் பின்னால் எட்டாம் எட்வர்ட் என்ற பெயரோடு அரசராயிருந்தவர்.

**ம**ந்தாரம் முல்லைஇரு வாட்சி குடமல்லி
மணங்கொண்ட பூவுலக மாதரசி ரோஜா
வந்தானே வந்தானே என்றுமுக மலர்ந்து
வள்ளலுனை எதிர்கொண்டு வளங்காட்டும் ஐய. 4

**க**முகோடு தெங்குபனை காணிக்கை கொண்டுன்
கழல்போற்றக் கடற்கரையிற் காத்துநிற்கும் அரசே
இமையாத கண்மலர்கொண் டெழுந்துபல தருக்கள்
எக்கணமும் நின்வரவை எதிர்பார்க்கும் அரசே. 5

**ஐ**யஉன்றன் வரவையெண்ணி ஆலினங்கள் உழைத்தே
ஆயிரக்கால் மண்டபங்கள் அமைத்துவைத்தபலவே
செய்யதிரு வடிவணங்கத் தென்குமரி நங்கை
சேர்த்துவைக்கும் முத்தினங்கள் செப்பளளி.

**வா**னோங்கி வளர்இமய மலைகாண லாமே
வற்றாத கங்கைநதி வளங்காண லாமே
கானோங்கு மரச்சோலைக் கவின்காண லாமே
கமலமணித் தடம்நோக்கிக் கண்களிக்க லாமே. 7

**சி**றையன்ன முண்டுபசுங் கிளியுண்டு பிரமன்
சித்திரக்கை நலம்விளக்கித் திரியுமயில் உண்டு
நிறைநீரில் நீந்துபல நிறமீன்கள் உண்டு
நீரில்இரை தேர்குருகு நிரையுண்டு மிகவே. 8

**ஊ**னுண்டு பாய்புலியும் கடுவாயு முண்டு
உறுமியெதிர்ந் தோடிவரும் பன்றிகளு முண்டு
மானுண்டு வன்கரடி மதயானை யுண்டு
மாவேட்டை நீயாட வனமுண்டு பலவே. 9

படியேந்தி நிதியளக்கும் பட்டினங்கள் பலவாம்
பணிசிறந்த திருக்கோயில் பள்ளிகளும் பலவாம்
கொடியேந்தி விண்ணளக்குங் கோபுரங்கள் பலவாம்
குவலயமெ லாம்புகழுங் கோரிகளும் பலவாம். 10

சாதிகளும் பலவாகும் சமயங்கள் பலவாம்
சாத்திரங்கள் பலவாகும் தருமங்கள் பலவாம்
ஓதுமொழி பலவாகும் உணவுடைகள் பலவாம்
உலகமிசை இதுபோலும் ஒருதேசம் உளதோ. 11

இப்பெரிய எம்நாட்டின் நலம்யாவும் எளியேம்
எடுத்தோதுந் திறமின்றி விடுத்தோமிங் கைய
ஒப்பரிய அரசகுலத் துதித்தஇளங் கோவே
உன்னடிக்கு வந்தனங்கள் உவந்தளித்தோம் பலவே.

கம்பனன்றி எவரேஇக் கண்காட்சி யாவும்
கவியாலே இனிமையுறக் காட்டவல்லர் ஐய
அம்புவியெ லாம்புகழும் அரசகுல விளக்கே
அறியாஇச் சிறுமொழியும் அன்புடனேற் றருளே.

வேறு

வாழி வேல்ஸிள மன்னவன் வாழியே
வாழி நல்லறம் மாண்புடன் வாழியே
வாழி பாரதத் தாய்நிதம் வாழியே
வாழி செந்தமிழ் மாமொழி வாழியே. 14

## 81. பலவகைப் பாடல்கள்

### க. தில்லைப் பொருட்காட்சி

தேசம் செழிப்படையச் செய்கருமம் நன்றாக
மாசில் புகழும் வளர்ந்தோங்க - ஈசனருள்
முந்தியெழுந் தில்லை முதுநகரின் காட்சியெலாம்
வந்தின்று காண்பீர் மகிழ்ந்து. 1

கைத்திறன் கண்டோம் கதரின் பெருமைகண்டோம்
உத்தமநம் நாட்டின் உயர்வுகண்டோம் - அத்தன்
அருட்காட்சி கண்டதிரு வாதிரையில் தில்லைப்
பொருட்காட்சி கண்ட பொழுது. 2

பண்டிழுந்த செல்வமெலாம் பாரதத்தாய் கண்குளிரக்
கண்டுகண் டுள்ளம் களித்தனளே - தொண்டர்சீர்
நாடும் சிதம்பர நன்னகர்க்கிந் நாள்வாய்த்த
ஈடில் பொருட்காட்சி யில். 3

நல்லநல்ல பஞ்சிருக்க நங்கை துணையிருக்க
மில்லிலெழும் ஆடை விரும்புவதேன் - இல்லிடத்தே
வெண்ணெய் இருக்க விலைக்குநெய் வாங்குவது
கண்ணியமோ புண்ணியமோ காண். 4

கப்பற் படையைக் கரைப்படையை ஓட்டுபடை
எப்பொழுதும் ஏழைகளுக் கேற்றபடை - இப்புவியில்
சாந்தியினைப் போற்றுபடை சர்க்காப் படைஎங்கள்
காந்திமகான் கைப்படையே காண். 5

பாடுபட்டுத் தேடும் பணமெல்லாம் பாரதநல்
நாடுவிட்டுப் போதல் நலமாமோ - கேடில்
பருத்தி பயிர்செய்வோம் பஞ்செடுப்போம் நூற்போம்
திருத்தமுற நெய்வோம் தினம். 6

கைத்தொழிலே மெய்த்தொழிலாம் கைகூப்பும்சேவகமே
பொய்த்தொழிலாம் என்னுமொழி போற்றியே - இத்
வாழ்வை நடத்தும் வலிமை யுடையவர்க்குத் [தரையில்
தாழ்வில்லை என்றுமே தான். 7

எல்லையிலா நல்ல எழிற்காட்சி பாரதத்தாய்
தில்லையிலே கண்ட திருக்காட்சி - தொல்லுலகம்
போற்றும் சுதேசிப் பொருட்காட்சி என்றென்றும்
ஏற்றமுற வாழ்க இனிது. 8

வேறு

வாழ்க நல்லறம் வாழ்க சுதந்திரம்
வாழ்க செல்வம் வளர்க்குந் தொழிலெலாம்
வாழ்க செந்தமிழ் வாழ்க நம்பாரதம்
வாழ்க காந்தி மகான்நிலத் தென்றுமே. 9

## உ. திருநாவுக்கரசு வித்தியாசாலை
### நேமத்தான்பட்டி

தேசமக்கள் யாவருந்தன் செல்வமக்க ளேஎன்னப்
பாசமுற நோக்கும் பழனியப்பன் - ஆசைமிகுந்(து)
அப்பர் பெயரால் அமைத்த கல்விச்சாலை
எப்பொழுதும் வாழ்க இனிது. 1

ஓடி விளையாடி உல்லாச மாய்நின்று
பாடிக் கதைகள் பலசொல்லிக் - கூடிநம்
மக்கள் பயின்று மகிழ்ந்துவரும் காட்சியந்தச்
சொர்க்கத் திலுமுண்டோ சொல். 2

நித்தம் இளமை நிலைக்கும் படிஈசன்
வைத்திலனே என்று வருந்துகின்றேன் - பத்திமிகு
நாவரசின் நாமங்கொள் நற்கல்விச் சாலையின்சீர்
யாவையுமே கேட்டறிந்த யான். 3

தேவரும் போற்றுந் திருநாடு தென்னுடாம்
யாவதும் ஐயம் இதிலில்லை - மூவர்
தமிழ்தரும் இன்பம் தருமோஅவ் வானின்
அமிழ்தமும் சொல்வாய் அறிந்து. 4

அப்பர் இசையரங்கும் அண்ணலரிச் சந்திரன்பேர்
எப்பொழுதும் போற்றும் இளம்படையும் - ஒப்பரிய
பாரதத் தாயைப் பணிந்து பணிசெய்து
சீருடன் வாழ்க தினம். 5

## ௩. ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

### எண்பதாம் ஆண்டு நிறைவு

எண்பதாண் டான இளைஞனே இன்னமுதின்
பண்பெலாங் காட்டுதமிழ்ப் பாவலனே - நண்பனே
வெள்ளகால் செல்வனே வேள்சுப் பிரமணிய
வள்ளலே வாழ்க மகிழ்ந்து.

## ௪. உமையொருபாகக் குருக்கள்

[குருக்களிடம் சிவதீக்ஷை பெற்றபோது பாடியது.]

வேறு மொருதுணையான் வேண்டுவனோ வேணுவனத்
தேறுமுமை யோர்பாகத் தேசிகனே - கூறுமெனக்(கு)
எய்யாப் பிறவி இருளகல நீயளித்த
பொய்யா விளக்கிருக்கும் போது.

வேணுவனம் - திருநெல்வேலி.

## ௫. முத்துசாமிப் பிள்ளை

[ஸ்ரீமூலந்திருநாள் மன்னர் சஷ்டிபூர்த்தியின்போது தமிழ்ப்பண்டிதர் திரு. முத்துசாமிப் பிள்ளை செய்த பாடல்களைப் பாராட்டிப் பாடிய செய்யுள்.]

கண்டும் கனியும் களியமுதும் மாறிஉருக்
கொண்டும் கவியிற் குடிபுகுமோ - தண்டமிழைப்
போற்றுமுத்து சாமிப் புலவ! நம் மன்சரிதைக்(கு)
ஏற்றசுவை யேற்றியவா றென்.

## கூ. தசாவதானி ஆறுமுகம் பிள்ளை

ஆறுமுகம் பிள்ளை அவதானம் கண்டெளியேன்
வேறுமுக மன்கூற வேண்டுமோ - தேறுமதிச்
சேஷய்யா மெச்சித் திருவாய் மலர்ந்துசபாஷ்
பேஷய்யா என்ற பிறகு.

## எ. ஆரல்வாய்மொழி

கம்பனையும் சோழனையும் காத்திடுவோம் காற்றரசின்
வம்பினுக்கும் அஞ்சாது வாழ்ந்திடுவோம் - உம்பர்கோன்
வானைமழை பெய்ய மறுத்திடினும் மற்றெங்கள்
கூனைமழைக் குண்டோ குறை. 1

பச்சடியும் தீண்டேன் பருப்பினிலும் கைவையேன்
இச்சடியும் தீண்டேன் கிழங்குமெடேன் - மெச்சுபுகழ்
ஆரைப் பதியில் அவித்துக் கடைந்துவைத்த
கீரைக் கறிகிடைக்கு மேல். 2

## அ. யார் பெரியர் - கவிராயரா உரைகாரரா?

கண்ணைக் கெடுப்பர் கவிராயர் அக்கண்ணை
எண்ணி உரைகாரர் ஈவாரே - மண்ணுலகில்
ஆக்கு பவரோ அழிப்பவரோ மேலாவார்
நோக்கிநீ உண்மை நுவல்.

'கண்' ஆகிய ஏழாம் வேற்றுமை உருபு தொக்கி வருத லும் விரிதலும்.

## கூ. முருகன் நிந்தாஸ்துதி

தந்தை மலையாளி தாய்மாமன் மாட்டிடையன்
வந்தஒரு மச்சானும் வாணியனே - சந்ததமும்
விண்முகத்தை எட்டும்அயில் வேலேந்தும் பன்னிருகைச்
சண்முகற்குச் சாதியெது தான்.

மலையாளி - வெள்ளிமலையை யுடையவன். இடையன் - ஆயர்பாடியில் வளர்ந்தவன், கண்ணன். வாணியன் - வாணியை நாவில் உடையவன், பிரமன்.

## கoo. சிரங்கு

செந்தில் குமரா திருமால் மருகாஎன்
சிந்தை குடிகொண்ட தேசிகா - நொந்தஇம்
மெய்யிற் சிரங்கை விடியுமட் டுஞ்சொறியக்
கையிரண்டு போதாது காண். 1

வாரம் முடங்காமல் வைப்பெண்ணெய் தேய்த்திட்டேன்
சார மருந்தெல்லாம் சாப்பிட்டேன் - வீரம்
குறைந்திடக் காணேன் குமரா சிரங்கு
மறைந்திடத் தாநீ வரம். 2

உண்ட மருந்தாமலும் உடல்முழுவ தும்பூசிக்
கொண்ட மருந்தாலும் குணமிலையே - மண்டு
சிரங்கப்ப ராயா சினமாறிக் கொஞ்சம்
இரங்கப்பா ஏழை எனக்கு. 3

முத்துப் பவழம் முழுவயிரம் மாணிக்கம்
பத்தியொளி வீசு பதக்கமெலாம் - சித்தன்
சிரங்கப்ப ராயன் சிறியேன் எனக்குத்
தரங்கண்டு தந்த தனம். 4

## கக. அனுதாபப் பாடல்கள்

### 1. திருமூல மன்னர்

தொக்ககொல்லம் ஆயிரத்துத் தொண்ணூற்றொ டொன்
பக்கமதி ஆடியிரு பான்மூன்றில் - மிக்ககுரு [பதினில்
வாரமதில் நள்ளிரவில் மாமூல மன்னவன் இத்
தாரணியின் வாழ்வுநீத் தான். 1

திருமால் திருவடிபோய்ச் சேர்ந்துதிரு மூலப்
பெருமான் பெரும்பேறு பெற்றான் - உருமேங்கு
விண்மழை போல வியன்வஞ்சி மாதழுத
கண்மழை வெள்ளங் கடந்து. 2

பொய்யுடலைக் கொண்டு புகழுடலைக் கண்டஞ்சி
வையகம்விட் டோடும் மறலியே - ஐயமறக்
கற்றுத் தெளிந்த கவிவாணர் சொல்வீர
வெற்றிஉனக் குண்டோ விளம்பு. 3

### 2. செல்லையா என்னும் தெ. சி. தீத்தாரப்ப முதலியார்

எப்பாலும் போற்றும் இசைத்தமிழ்ச் செல்வாஎன்
அப்பா அழகியசெல் லையாநான் - இப்பாரில்
சிந்தை குளிரச் சிரித்தொளிரும் உன்முகத்தை
எந்தநாள் காண்பேன் இனி.

# 82. வாழ்த்து

**பா**லைவனம் சோலைவன மாக வேண்டும்
பசுங்கிளிகள் அங்கிருந்து பாட வேண்டும்
சாலைகளிற் பலதொழிலும் பெருக வேண்டும்
சபைகளிலே தமிழெழுந்து முழங்க வேண்டும்
சீலஉடை கதருடையாய்த் திகழ வேண்டும்
தேசபக்தி செழித்தோங்கி வளர வேண்டும்
வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டும்
வெற்றியின்மேல் வெற்றிஎமக் கெய்த வேண்டும். 1

**க**ஞ்சாவை நஞ்சாகக் கருத வேண்டும்
கள்ளொழுகுங் கடைவாயை மூட வேண்டும்
அஞ்சாத வீரரெங்கும் தோன்ற வேண்டும்
அகிம்சா தர்மமவர் பேண வேண்டும்
என்சாதி உயர்சாதி இழிந்த சாதி
என்றுசொல நாவுமெழா திருக்க வேண்டும்
நெஞ்சாரும் நினைப்பெல்லாம் நிகழ்த்தி நின்றேன்
நின்மலனே இரங்கிநீ அருள்செய் வாயே. 2

**ப**ருவமழை பொய்யாது பெய்ய வேண்டும்
பயிர்களெலாம் செழித்தோங்கி வளர வேண்டும்
தருமநெறி தவறாது தழைக்க வேண்டும்
சாதிமதச் சண்டையெலாம் ஒழிய வேண்டும்
திருமகளும் கலைமகளும் சிறக்க வேண்டும்
தேசாபி மானமெங்கும் திகழ வேண்டும்
கருமமெலாம் நற்கரும மாக வேண்டும்
காந்திமதி நின்னடிகள் வாழ்த்தி னேனே. 3

தென்திருப்பேரை அபிநவகாளமேகம்

ஸ்ரீ அனந்தகிருஷ்ணையங்கார் அவர்கள்

கூறிய

## சிறப்புப் பாயிரம்

தேசிகவி நாயகனுஞ் சீரியனை நாஞ்சிறந்த
தேசிகவி நாயகனைத் தேர்ந்துகந்தேன் - காசினியில்
வாடலுறா தென்றும் மணக்கும் மலர்மாலைப்
பாடல் முழுவதுமே பார்த்து.




